அக்கன்னேரமும் புக்கு விடமாட்டாதே யிருந்தால் 'இவன் நம்மை விடமாட்டாதேயிருந்த பின்பு நாமும் இவனுக்கு ஸ்நேஹித்தாலாகாதோ' என்னக்கடவிறே. 'சிறி இங்கே புண்டு' என்று சொல்லக் கற்பர்களிறே; அப்படியே 'பக்தி புண்டாம்' என்ன அப்யஸிப்பர்களென்று அருளிச் செய்கிறார்."

பத்தர்—பக்தர். ... ... .... ... (கக)

ஆறுந் திருவாய்மொழி உரை முற்றுப்பெற்றது.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

ஸ்ரீ:

# த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்நாவளி.

பத்மாக்ஷம் பாபஹர்த்ரும் மணிருசி மமராதீச சிந்த்யாங்க்ரிபத்மம்
தத்தாத்ருக் குந்தளஸ்ரீலலிதமகுடாம் பாவுகப்ராப்யபாதம் ।
ஶுத்தஸ்வாத்யஸ்வபாவம் ப்ரகடநஸுலபம் ஸத்ருசீவ்ருத்திமர்ச்சாம்
நிர்வ்யாஜேஷ்டவ்ருத்திம் ஹரிதநுமவதந் நிர்மலார்ச்சாநுரக்த: ॥

(நிர்மல அர்ச்சாஅநுரக்தஃ ஹரிதநும் பத்மாக்ஷீம்..................அவதத் = அர்ச்சாவதாரத்தில் அன்பு கொண்டவரான ஆழ்வார் எம்பெருமானுடைய திருமேனியை *செய்யதாமரைக் கண்ணனுமென்கிற திருவாய்மொழியில் இவ்வனே பேசினர்; எவ்வனே யென்னில்;)

1. பத்மாக்ஷீம். *செய்யதாமரைக் கண்ணனும்* செந்தாமரை போன்ற திருக்கண்களை யுடையதாகவும்.

2. பாபஹர்த்ரீம். *பாவநாசனை.* பாவங்களையெல்லாம் போக்கடிக்க வல்லதாகவும்.

3. மணிருசிம். *குரவைகோத்த குழகனை மணி வண்ணனை.* நீல மணிபோன்ற நிறத்தை யுடையதாகவும்.

4. அமராதீச சிந்த்ய அங்க்ரிபத்மாம். *வானவர்தம்மை யாளுமவனு மித்யாதி.* தேவாதிபதிகளான பிரமன் சிவனிந்திரர்களாலே சிந்திக்கத்தக்க திருவடித்தாமரைகளை யுடையதாகவும்.

5. தத்தாத்ருக்குந்தளஸ்ரீலலிதமகுடாம். *கரியும் பங்குழற்குழற்றி வெங்கள் சுடர்முடியண்ணல்.* அழகிய திருக்குழலின் சோபையோடே சேர்ந்த திருவபிஷேகத்தை யுடையதாகவும்.

6. பாவுகப்ராப்யபாதாம். *சிற்றத்தொடரும் பெற்றவடிக் கேழ்புகின்ற செங்கண்மால.* பக்தனான ப்ரஹ்லாதாழ்வான் வந்து கிட்டலாம்படியான திருவடிகளை யுடையதாகவும்.

7. சுத்தஸ்வாத்யஸ்வபாவாம். *விழுமியவமரர் முனிவர் விழுங்கும் கன்னற்கனியினை.* தூய அமரர் முனிவர்களால் கன்னற்கனிபோல் அநுபவிக்க வுரியதாகவும்.

8. யமபடமதநீம். * அவரவர்க்கு நமன்தமர்க்கு அருகஞ்சிலே.* யமபடர்கள் அணுக அஞ்சும்படி அவர்களைத் தொலைக்கவல்லதாகவும்,

9. பக்தநிர்வ்ருத்திபவ்யாம். * நெஞ்சினால் நினைப்பான் யவனவனாகும்.* அடியவர்கள்நெஞ்சில் பாவித்தபடியே பவ்யமாயின்றதாகவும்.

10. நீசஉச்சஅபீஷ்டவ்ருத்திம் * கடல்வண்ணன் கண்வளர்த்பாறு.* நீசோச்சதமான அபீஷ்ட வ்யாபாரத்தை யுடையதாகவும். அதாவது—திருப்பாற்கடலில் திருக்கண் வளர்வதாகிற உத்துங்கமான செயலையும், பார்த்தனுக்குத் தேர் செலுத்துவதாகிற தாழ்ச்சியான செயலையும் செய்தமையைச் சொன்னவாறு.—ஆக இப்படிப்பட்ட தன்மைகளை யுடையதாக [ஹரிதநும் அவந்த்.] எம்பெருமானது திருமேனியை ஆழ்வார் பேசியருளினர்.

அப்புல்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

ஸ்ரீ:

## திருவாய்மொழி நூற்றந்தாதி.

செய்ய பரத்துவமாய்ச் சீரார் வியூகமாய் *
துய்ய விபவமாய்த் தோன்றிவற்றுள் — எய்துமவர்க்கு
இந்நிலத்தி லர்ச்சாவதார மெளிதென்றான் *
பண்ணுதமிழ் மாறன் பயின்று

| | |
|---|---|
| செய்ய | விலக்ஷணமான |
| பரத்துவம் ஆய் | பரமபதத்திலிருப்பதாய் |
| சீர் ஆர் | மேன்மை பொருந்திய |
| வியூகம் ஆய் | க்ஷீராப்தியிலிருப்பதாய் |
| துய்ய | பரிசுத்தமான |
| விபவம் ஆய் | ராமக்ருஷ்ணாதி அவதாரமாய் |
| தோன்று | (இங்ஙனே சாஸ்த்ரங்களினால்) காணப்படுகின்ற |
| இவற்றுள் | இந்நிலைமைகளுள், |

| | |
|---|---|
| எய்துமவர்க்கு | ஆச்ரயிப்பவர்களுக்கு |
| இந்நிலத்தில் | இவ்விபூதியிலே |
| அர்ச்சாவதாரம் | அர்ச்சாவதாரமே |
| எளிது என்றான் | ஸுலபமென்று அருளிச் செய்தார்; (அவர்யாரென்னில்) |
| பயின்று பண்ணு தமிழ் மாறன் | ஆராய்ந்து அருளிச் செய்யப்பட்ட தமிழ் வேதத்தையே நிரூபகமாகவுடைய ஆழ்வார். |

பரமபதத்திலே யெழுந்தருளியிருந்து நித்ய முக்தர்கட்குக் காட்சி தரும் நிலைமை யென்ன, திருப்பாற்கடலிலே வ்யூஹரூபனாயிருக்கும் நிலைமை யென்ன, ஸ்ரீராமக்ருஷ்ணாதி ரூபேண அவதரித்த விபவாவதார நிலைமை யென்ன—ஆகிய இவற்றை யெல்லாம் விட, அர்ச்சாவதாரமாகக் காட்சி தந்தருளும் நிலைமையே இவ்வுலகில் பக்தர்களுக்கு மிகவும் எளிய தென்னுமிடத்தை ஆழ்வார் இத் திருவாய்மொழியினால் அருளிச் செய்தாரென்றாயிற்று.

எம்பெருமானுடைய நிலைமைகளுள் அந்தர்யாமித்வமும் சேர்ந்திருக்க அதனை இங்கு எடுத்துக்கூறாதது அதில் ஆச்ரயண ப்ரஸக்தி யில்லாமை பற்றி யென்று கொள்ளலாம். உபலக்ஷண விதத்தினால் அதுவும் இங்குக் கொள்ளத் தக்கதே யென்பாருமுளர்.

ஜீயர் திருவடிகளே சரணம்.

## த்ராமிடோபநிஷத் ஸங்கதி.

தாத்ருஶீஂ ஜநதயா விஹாதுஂஸ்வெள ஸஜ்ஜூ
ஸ்நேஹ்ஸிஶாவஷிதயா விஶேஷாது விவாஸநி ।
அவசிரவதாரஸாஹூஹஸாஸாவாவ தேஷாஂ
ஸாவாவ தேஷாஂ விஶேஷேஷாஂ ஸாஶேஷாவ ஷஷ்டே ॥

(கருத்து.) கீழ்த் திருவாய்மொழியில் தம்மால் சிக்ஷிக்கப்பட்ட பாவிகளையும் விடமாட்டாத பரமகருணை வாய்ந்த ஆழ்வார் அன்னவர்களையும் சேர்த்துக் கொள்ளக் கருதினர்; அவர்கள் எம்பெருமான் திறத்தில் எதனால் விமுகர்களாக இருக்கின்றார்களென்பதைப் பற்றி ஆராய்ந்ததில், எம்பெருமான் துர்லபன் என்கிற காரணத்தினால் என்றறிந்து, அப்பெருமானுடைய அர்ச்சாவதார ஸௌலப்யத்தை இத் திருவாய்மொழியினால் அருளிச் செய்தார். இங்ஙனமருளிச் செய்தவளவிலும் அவர்களுடைய வைமுக்யம் மாறாமையினாலே திருவுள்ளம் வருந்தியும் நின்றார்.

ஜீயர் திருவடிகளே சரணம்.

---

ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# திருவாய்மொழி மூன்றாம்பத்து
## ஏழாந் திருவாய்மொழி—பயிலுஞ்சுடரொளி.

**உரையவதாரிகை:**—கீழ்த் திருவாய்மொழியில் அர்ச்சாவதார ஸௌலப்யத்தை அருளிச் செய்தவிடத்திலும் நெஞ்சில் நெகிழ்ச்சியின்றியே விஷயப்ரவணராயிருக்கின்ற ஸம்ஸாரிகளின் இயல்வைக்கண்டு வெறுத்து, அவ் வெறுப்புக்குப் பரிஹாரமாகத் தாம் ஒரு மஹாரஸத்தை அநுபவிக்க விரும்பி ஸ்வஸ்வரூப காஷ்டையான பாகவத சேஷத்வத்தை அநுஸந்தித்து அம்முகத்தாலே தாம் இனியராகிறார்.

ஒருவன் ஒரு வஸ்துவினிடத்தில் அன்புவைத்தால் அவ்வன்பு அனவரதமாயிருந்தால் அஃது அவ்வஸ்துவோடே நின்றுவிடாமல் அதனோடு ஸம்பந்த ஸம்பந்தம் பெற்ற வஸ்துக்களிலும் பெருகிச் செல்லுமென்பதை அனைவரும் தம்தம் அநுபவத்தாலறிவர். அப்படியே பாகவத பக்தியென்பது பகவத் பக்தியின் எல்லைநிலமாக உண்டாவது. பகவத் பக்தியின் உறைப்பையே பாகவத பக்தி வெளிப்படுத்தும். ஸ்வாமியினுடைய பாதுகைகளிலே நாம் ஆதரம் வைத்து அவற்றைக் கண்களில் ஒற்றிக்கொள்வதும் தலைமீது அணிந்துகொள்வதும் அலம்பித் தீர்த்தம் பருகுவதும் செய்கிறோம்; இதனால் நமக்கு ஸ்வாமி

யிடத்துள்ள பக்தி அபாரமானது என்பதன்றோ வெளியாகின்றது. அதுபோலவே இங்கும் "அடியாரடியார் தம்மடியாரடியார் தமக்கடியாரடியார்தம் அடியாரடி யோங்களே" இத்யாதிகளால் பாகவத சேஷத்வாதிசயத்தைப் பேசுவதெல்லாம் பகவச் சேஷத்வத்தின் உறைப்பையே பேசினபடியாகும்.

திருமந்திரத்தில், அஹங்காரமும் மமகாரமும் நீங்கப்பெற்று பகவத் சேஷத்வம் உள்ளபடி ப்ரகாசிக்கிற நமஸ்ஸிலே அந்த பகவத் சேஷத்வத்தின் எல்லைநிலமான பாகவத சேஷத்வம் அநுஸந்திக்கப்பட வேணுமென்பது சாஸ்த்ரார்த்தம். இந்த பாகவத சேஷத்வம் திருமந்திரத்திலுள் ப்ரணவத்தின் உள்ளீடான அகாரத்திலே தோற்றுமென்று சிலரும் உகாரத்திலே தோற்றுமென்று சிலரும் சொல்லுவது முண்டு. எங்ஙனே யெனில், அகாரத்தின்மேல் ஏறிக் கிடந்து லோபமடைந்துள்ள சதுர்த்தியாலே ஆத்மாவினுடைய பகவத் சேஷத்வம் சொல்லப்படுகையாலே அந்த சேஷத்வத்தின் எல்லையான பாகவத சேஷத்வத்தை அகாரத்திலே அநுஸந்திக்கலா மென்பர் சிலர்; அநந்யார்ஹ சேஷத்வத்துக்கு எல்லை பாகவத சேஷத்வமாகையாலே அந்த அநந்யார்ஹத்வத்தைச் சொல்லுகிற உகாரத்திலே அதன் எல்லையான பாகவதசேஷத்வத்தை அநுஸந்திக்கலா மென்பர் சிலர். அர்த்தாத் ஸித்தமாக அநுஸந்திக்க வேண்டுவதை எந்த இடத்தில் அநுஸந்தித்தாலும் குறையில்லையாகிலும் அஹங்கார மமகாரங்கள் கழிவதைக் காட்டுகின்ற நமஸ்ஸிலே அதனை அநுஸந்திப்பது மிகப் பொருந்து மென்பது நம் ஆசாரியர்களின் திருவுள்ளம்.

திருமந்திரத்திற்கு முக்கியமான பொருள் பாகவத சேஷத்வமே யென்பதை * மாறன் பணித்த தமிழ்மறைக்கு ஆறங்கங்கூற அவதரித்த மங்கையர் கோன் தமது திருமொழியில் * மற்றெல்லாம் பேசிலும் நின் திருவெட்டெழுத்துங் கற்று நான்—உற்றதுமுன்னடியார்க்கடிமை" என்ற பாசுரத்திலுந் தெளிய வைத்தார் என்பது இங்கு அறியத்தக்கது.

பயிலும்சுடரொளிமூர்த்தியைப் பங்கயக்கண்ணனை *
பயிலவினிய நம்பாற்கடல்சேர்ந்தபரமனை *
பயிலும்திருவுடையார் யவரேலுமவர்கண்டீர் *
பயிலும்பிறப்பிடைதோறு எம்மையாளும்பரமரே (க)

| | |
|---|---|
| பயிலும் சுடர் ஒளி மூர்த்தியை | செறிந்த சுடர்ச் சோதி யுருவனாய் |
| பங்கயம் கண்ணனை | தாமரை போன்ற திருக் கண்களை யுடையனாய் |
| பயில இனிய | பழகப்பழகப் பரம போக்யனாய் |
| நம் பால் கடல் சேர்ந்த பரமனை | நமக்காகத் திருப்பாற் கடலில் துயில் கொண்டருளும் பரம புருஷனான எம்பெருமானை |

| | |
|---|---|
| பயிலும் திரு உடையார் | நிரந்தரமாய்ப் பண்ணுகையாகிற செல்வமுடையவர்கள் |
| யவர் எனும் | * ஜாதிபிறப்பு எதுவாக நின்றவராகிலும் |
| அவர் | அவர்களே |
| பயிலும் பிறப்பிடை தோறு | மேன்மேலும் நேர்கின்ற பிறவிகள் தோறும் |
| எம்மை | நம்மை |
| ஆளும் | அடிமை கொள்ளவல்ல |
| பரமர் கண்டீர் | மஹான்களாவர். |

• • • [பயிலுஞ்சுடரொளி.] எம்பெருமானுடைய வடிவழகிலும் திருக்கல்யாண குணங்களிலும் ஈடுபட்டிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்கள் ஆரேனுமாகிலும் எனக்கு ஸ்வாமிகள் என்கிறார். *ஸ்வாஜ்ஞயைவ ஸ்தாவரஜங்கமாநாம்—இச்சாக்ருஹீதாபிமதோருதேஹ:" என்கிறபடியே அடியவர்களுக்காக ஸ்வஸங்கல்பத்தாலே பரிக்ரஹித்தருளும் திருமேனி தேஜோராசி மயமாயிருக்கும்படியைச் சொல்லுகிறார் பயிலுஞ்சுடரொளிமூர்த்தியை என்பதனால். இவ்விடத்தில் * [illegible] [illegible] ஜயதி [illegible] [illegible] தேஜ:—[illegible] மதாவைமுத்திதவை [illegible] தம், ஜயதி [illegible] ரூபம்ஸ்ய தேஜ:" என்கிற ஆழ்வாருடைய திவ்யஸூக்தியும், "[illegible] [illegible] [illegible] [illegible] [illegible]—[illegible] [illegible] மணி [illegible] [illegible]" என்கிற பட்டர் திவ்யஸூக்தியும் அநுஸந்திக்கத்தகும். சுத்தஸத்வமயமாய் ஸ்வரூபப்ரகாசகமான திவ்ய விக்ரஹத்திலீடுபட்டவர்கள் எமக்கு ஸ்வாமிகள் என்கை.

பங்கயக்கண்ணனை—கீழ்ச் சொன்ன வடிவழகிலுங்கூட அகப்படாதாரையும் அகப்படுத்திக் கொள்ளவல்ல திருக்கண்ணழகிலே யீடுபட்டு "கரியவாகிப் புடைபரந்து மிளிர்ந்து செவ்வரியோடி, நீண்டவப் பெரியவாய கண்கள் என்னைப் பேதைமை செய்தனவே," என்றாற்போலே பேசுமவர்கள் எமக்கு ஸ்வாமிகள் என்கை. "க: புண்டரீகநயந: புருஷோத்தம: க:" என்கிறபடியே திருக்கண்ணழகே பரத்வ ஸூசகமாகையாலே அந்தப் பரத்வத்திலே யீடுபட்டவர்கள் எமக்கு ஸ்வாமிகள் என்றவாறு.

பயிலவினிய—'பயிலப்பயில வினிய' என்றபடி. பகவத் விஷயத்தில் இடைவிடாத பரிசயம் பண்ணினாலும் இனிமை [—போக்யதை] ப்ரதிபத்தி விஷயமாகுமேயல்லது வைரஸ்யம் ஒருபோதும் தோற்றாதென்று கருத்து. இங்கு ஈட்டு ஸ்ரீஸூக்தி காண்மின்;—" இப்படி வடிவழகும் கண்ணழகும் கண்ணழியவற்றிருக்கையாலே இனியதாயிருக்குமிறே. இதர விஷயங்கள் விட்டேக்கவும் ஒன்றுபோலேயாய், கிட்டினவாறே அகல வழி தேடும்படியாயிருக்கும்." என்று.—* எப்பொழுதும் நாள் திங்களாண்டூழியூழிதொறும் அப்பொழுதைக்கப்பொழுதென்னாராவமுத மென்னும்படியான நித்யாபூர்வமான விஷயமாகையாலே எவ்வளவு காலம் இடைவறாத பரிசயம் பண்ணினாலும் ஸாரஸ்யமே அதிகரித்துச் செல்லும் விஷயமென்றபடி.

நம்பாற்கடற்சேர்ந்த பரமனை—எம்போன்ற அடியவர்களின் ஆர்த்தத்வநி செவிப்படுகைக்காகவும், செவிப்பட்டவுடனே பதறியெழுந்துவந்து பரித்ராணம் செய்தருள்வதற்காகவும் திருப்பாற்கடலில் சாய்ந்தருளும்படியை வாய்வெரப்பேசி அந்தக் கிடையழகிலே யீடுபட்டிருக்குமவர்கள் எமக்கு ஸ்வாமிகள் என்றபடி. பரமன் என்பதற்கு—தன்னிற்காட்டில் மேம்பட்டாரில்லாதவன் என்று பொருள். [ந பரோ ஸ்மாத் இதி பரம:—; அஸ்மாத்—இவனிற் காட்டில், பர:—மேற்

பட்டவன், மா— இல்லை என்றபடி. இந்த வ்யுத்பத்தியைத் திருவுள்ளம்பற்றி நம் பிள்ளை யருளிச் செய்கிறார் காண்மின் ;—"[பரமனை] வடிவழகாலும் குணங்களா லும் அல்லாதாரைக் கழித்து இங்கே ஓர் ஏற்றம் சொன்னீர் ; மேன்மைக்கு இவனுக்கு அவ்வருகேதான் ஒரு விஷயமுண்டோ வென்னில் ; மேன்மைக்கும் இவனுக்கவ்வருகு ஒரு விஷயமில்லை." என்று.

பரமனைப்பயிலுந் திருவுடையார் = எம்பெருமானோடு இடைவிடாது பழகு வதையே பெருஞ் செல்வமாக வுடையவர்கள். அற்ப பலன்களுக்காக எம்பெரு மானை அநுபவர்களாயிருந்தால் அப்பலன் கை புகுந்தவாறே விலகி நிற்பர் கள் ; அங்ஙனல்லாமல் அவன் தன்னையே ப்ரயோஜனமாகக் கொண்டு நெருங்கின வர்கள் விலக வழியில்லையே ; ஆகவே "பரமனைப் பயிலுந் திருவுடையார்" என் றது எம்பெருமானையே ஸ்வயம் ப்ரயோஜனமாகப் பற்றின பிரான்கள் என்றபடி. திருவுடையார் என்றதனால், பரமனிடத்து நெஞ்சு குடிகொண்டிருத்தலே சிறந்த செல்வமென்று தெரிவித்தவாறும். இளைய பெருமாள் "வநிதூவிடகா வாஸாசீரபிடகாதர:" என்கிறபடியே மண்வெட்டியும் புட்டிக்கூடையுமாய்க் காட்டுக்குப் புறப்படுகையில் அவரிடத்து என்ன செல்வ மிருந்தது ; அப்போது "லக்ஷ்மணோ லக்ஷ்மி ஸம்பந்ந:" என்று பேசப்பட்டிருக்கின்றார் ; பெருமாளும் பிராட்டியுமான சேர்த்தியிலே ஒழிவில்கால மெல்லாமுடனுய் மன்னி வழுவிலா வடிமை செய்யப்பெற வேணுமென்று பாரித்துக் கொண்டிருந்தாரே, அதைவிட் டுத்தான் அப்போது லக்ஷ்மிஸம்பந்நனென்று பேசப்பட்டார். விபீஷணாழ்வான் ராவண கோஷ்டியில் நின்றும் நாதப்பட்டு ஸ்ரீராம கோஷ்டிக்கும் ஆளாகப் பெறுமல் த்ரிசங்கு ஸ்வர்க்கமாக ஆகாசத்தில் நின்றிருந்த காலத்து "அந்தரிக்ஷ கத: ஸ்ரீமாந்" எனப்பட்டான் ; அப்போது அவனிடத்திருந்த ஸ்ரீயாவது என்ன? 'நாம் ஸ்ரீராம கோஷ்டியில் அங்கீகரிக்கப் பெறுதொழியினும் இனி அரக்கர் திரளிலே புகுவதென்பது கிடையாது' என்று கொண்டிருந்த அத்யவஸாயமே அவற்குச் சிறந்த செல்வமாயிற்று. கஜேந்த்ராழ்வான் முதலை தன்னுலடர்ப் புண்டு அடித்துக்கிடந்த காலத்து "ஸ து நாகவர: ஸ்ரீமாந்" எனப்பட்டான் ; அப்போது அவற்கு இருந்த ஸ்ரீ யாது கொல்? உயிர் போகுந் தருணத்திலும் கையிற் பூ செவ்வியழியாமே எம்பெருமான் திருவடிகளில் ஸமர்ப்பிக்கப்பட வேணுமென்று கொண்டிருந்த குறாஹலமேயாயிற்று ஸ்ரீ எனப்பட்டது : ஆக இவ்வகையிலே பக்த கோஷ்டிகளில் ப்ரஸித்தமான செல்வமே இங்குத் திரு வென்பதனால் விவக்ஷிக்கப்படுகின்றதென்க.

யவரேலும் = பரமனைப் பயிலுந் திருவுடையவர்கள் பிறந்த வருணம் எது வாகவுமாம், அவர்களுடைய அறிவு, தொழில் முதலியவை எப்படிப்பட்டதாகவு மாம், அவற்றைக் கணிசிக்கத் தேவையில்லை ; அவர்களிடத்துப் பரமனைப்பயிலுந் திரு உள்ளதா என்பதொன்றே பார்க்கத்தக்கது என்றபடி.

அவர்கண்டீர் பயில்லும்பிறப்பிடைதோறு எம்மையாளும்பரமர் = பகவா னுக்கு நாங்கள் ஆட்பட்டவர்களல்லோம் ; அத்தகைய பாகவதர்கட்கே ஆட் பட்டவர்கள் என்கிறார். மேன்மேலும் பிறப்பது எமக்கு நேயமேயாயினும்

பாகவதர்கட்கு ஆட்பட்டிருத்தலாகிற பெருஞ்செல்வம் கிடைக்கப் பெறுவதாமாகில் எத்தனை பிறப்புக்கள் சேர்ந்தாலும் உத்தேச்யமே என்கிற கருத்து "பயிலும் பிறப்பிடை தோறு" என்பதில் உய்த்துணரத் தக்கது. இங்கு இருபத்தினாலாயிரப்படியில் பெரியவாச்சான்பிள்ளை ஸ்ரீஸூக்தி காண்மின் ;— "*சின்பன்மா மாயப் பல்பிறவியென்று சிந்தித்த ஜன்மத்தையும் அநுமதி பண்ணுகிறார் ததீய சேஷத்வ ரஸத்தாலே." என்று. ... ... (௧)

ஆளும்பரமனைக்கண்ணனை ஆழிப்பிரான்தன்னை *
தோளுமோர்நான்குடைத் தூமணிவண்ணனெம்மான்தன்னை *
தாளுந்தடக்கையுங்கூப்பிப் பணியுமவர்கண்டீர் *
நாளும்பிறப்பிடைதோறு எம்மையாளுடைநாதரே. (௨)

| | | | |
|---|---|---|---|
| ஆளும் பரமனை | ஆள்கின்ற பரம புருஷனும் | எம்மான் தன்னை | எம்பெருமானை |
| கண்ணனை | ஸ்ரீக்ருஷ்ணனும் | தாளும் தட கையும் கூப்பி | கால்களையும் கைகளையும் கூப்பி |
| ஆழி பிரான் தன்னை | திருவாழியாழ்வானை யுடைய உபகாரகனும் | பணியும் அவர் | நமஸ்கரிப்பவர்கள் |
| ஓர் நான்கு தோளும் உடை | ஒப்பற்ற நான்கு புஜங்களை யுடையவனும் | பிறப்பிடை தோறு | ஜன்மந்தோறும் |
| தூ மணி வண்ணன் | பரிசுத்தமான நீலமணி போன்ற நிறத்தை யுடையவனுமிருக்கின்ற | நாள் தோறும் | தினந்தோறும் |
| | | எம்மை | எங்களை |
| | | ஆள் உடை நாதர் கண்டீர் | ஆட்கொள்ளும் அடிகளாவர் |

* * * [ஆளும்பரமனை.] எம்பெருமானுடைய திவ்யாவயவ ஸௌந்தர்யத்தால் வசீகரிக்கப்பட்ட ஸ்ரீவைஷ்ணவர்கள் எனக்கு ஸ்வாமிகளென்கிறார். கீழ்ப்பாட்டில் *பரமனைப்பயிலுந் திருவுடைய ஸ்ரீவைஷ்ணவர்களே எம்மையாளும் பரமர் என்று சொல்லிவைத்து இப்பாட்டில் "ஆளும்பரமனை" என்றால் இது தகுதியோ? பாகவதர்களன்றோ ஆளும்பரமர்; இப்போது எம்பெருமானை ஆளும்பரமனாகச் சொல்லலாமோ வென்னில்; சொல்லலாம்; எம்பெருமான் தன் திருவடிகளின் கீழ் வந்து புகுந்தவர்களைப் பாகவத சேஷபூதர்களாக ஆக்கி ஆள்கின்றானென்பதுவே இங்கு விவக்ஷிதம். "அடியார்க்கென்னை யாட்படுத்தவிமலன்" என்ற திருப்பாணாழ்வார் பாசுரம் இங்கு அநுஸந்திக்கத்தகும்.

கண்ணனை = பாகவத சேஷத்வத்தை ஸ்வாநுஷ்டான முகத்தாலே காட்டியருளினவன் கண்ணபிரான்; எங்ஙனே யென்னில், பாகவதர்களில் தலைவனான நம்பிமூத்தபிரானுக்கு [—பலராமனுக்கு]ப் பின்பிறந்து "பலதேவற்கோர் கீழ்க்கன்றாய்" என்னும்படி அவனளவிலே பாரதந்திரியத்தைக் காட்டினபடி காண்க.

ஆழிப்பிரான்தன்னை=திருவவதரிக்கும்போதே கையுந்திருவாழியுமாய்த் திருவவதரித்து, பிறகு பாரதப்போரில் 'ஆயுத மெடேன்' என்று சொல்லி வைத்தும் ஆச்ரித பக்ஷபாதத்தாலே ஆயுத மெடுத்தும் காரியஞ் செய்தருளினவன்.

தோளுமோர்நான்குடை — “[illegible]—சதுர்ணாம் புருஷார்த்தாநாம் தாதா தேவச் சதுர்ப்புஜ:” என்கிறபடியே அடியார்களுக்கு நால்வகைப் புருஷார்த்தங்களையும் கொடுத்தருள்வதற்கு நான்கு திருக்கைகள் படைத்தவன். பட்டர் திருக்கோட்டியூரில் எழுந்தருளியிருக்கும்போது அனந்தாழ்வான் திவ்யதேசயாத்திரையாக அங்கு எழுந்தருளினர்; அப்போது அவர் பட்டரை நோக்கி “பரமபதத்தில் எம்பெருமான் சதுர்ப்புஜனாய் எழுந்தருளியிருக்கிறானோ? த்விபுஜனாய் எழுந்தருளியிருக்கிறானோ?” என்று கேட்க, ஸர்வஜ்ஞரான அனந்தாழ்வானுக்கு நாம் ஸந்தேஹநிரஸனம் செய்ததாக ஆகவொண்ணாதென்று கருதிய பட்டர், “த்விபுஜன் என்று தோன்றினால் பெரிய பெருமாளாக அநுஸந்திக்கிறோம்; சதுர்ப்புஜன் என்று தோன்றினால் நம்பெருமாளாக அநுஸந்திக்கிறோம்” என்றாராம். இதன் கருத்து யாதெனில்; பெரிய பெருமாள் “கையினார் சுரிசங்கனலாழியர்” என்ற திருப்பாணாழ்வார் பாசுரத்தின்படி சதுர்ப்புஜராயிருக்கவும் அறிவிலிகளான நமக்கு த்விபுஜராகத் தோற்றுவதுபோல் பரமபதநாதனும் சிலருடைய அறிவுக்கு த்விபுஜனாகத் தோற்றக்கூடும்; மந்தோதரி புலம்பும்போது “[illegible]—தமஸ: பரமோ தாதா சங்கசக்ரகதாதர:” என்று பேசியிருக்கின்றனளாகையாலே பரமபதநாதன் அவளுக்குச் சதுர்ப்புஜனாகத் தோற்றினமை ஸ்பஷ்டம்; அதுவே ப்ரமாண கதிக்குச் சேரும் என்பதாம். இவ்விஷயம் இவ்விடத்து ஈடு மூப்பத்தாறாயிரத்தில் விசதமாகக் காணத்தகும்.

தூமணிவண்ணனெம்மான்தன்னை — சிறந்த ரத்னம்போலே ஒளிமல்கியிருப்பவனென்றபடி. ரத்னத்தின் ஸ்வபாவம்போன்ற ஸ்வபாவமுடையவன் என்னவுமாம். (அதாவது:—) ரத்னம் எவ்வளவு விலையுயர்ந்ததாயினும் தலைப்பில் முடிக்கு ஆளலாம்படி யிருக்கும்; எம்பெருமானும் பரத்வத்தை மறைத்து ஸௌலப்யத்தையே காட்டுவன். ரத்னம் கடல், மலை முதலிய இடங்களிலுள்ளது; எம்பெருமானும் “மலைமேல்நிற்பாய் கடல்சேர்ப்பாய்” என்கிறபடியே திருப்பாற்கடல் திருமலை முதலான விடங்களிலுள்ளான். ரத்னமானது இடையில் ஒரு புருஷனைக் கொண்டே வாங்கப்படும்; எம்பெருமானுமப்படியே; புருஷகாரமின்றிப் பெறமுடியாதே எம்பெருமானை. “வேதம் வல்லார்களைக் கொண்டு விண்ணோர் பெருமான் திருப்பாதம் பணிந்து” என்றன்றோ பெரியார் பாசுரமிருப்பது. ரத்னமானது சிலசில ஆச்ரயங்களில் அதிகமான மதிப்புப் பெறும்; எம்பெருமானுமப்படியே; ஆழ்வார்கள் திருவாக்கில் புகுந்து புறப்பட்ட திருப்பதிகளிலேயிறே எம்பெருமானுக்கு மதிப்பு அதிகம். ரத்னம் ஒளியைவிட்டு இராது; எம்பெருமானும் பிராட்டியை விட்டு இரான்; “[illegible]—தேவத்வே தேவதேஹேயம் மநுஷ்யத்வே ச மாநுஷீ.” இத்யாதிகள் காண்க. ரத்னமானது ஒளியால் மேன்மை பெறும்; எம்பெருமானும் பிராட்டியால் ஏற்றமுடையான்; “[illegible]” என்றான் வேத புருஷன். இராவணன் மாரீசனிடம்வந்து ‘இராமனை அடர்க்க நீ துணைநிற்கவேணும்’ என்று இரக்க, “[illegible]—அப்ரமேயம் ஹி தத் தேஜோ யஸ்ய

ஸா ஜநகாத்மஜா" என்றன்றோ விடை கூறினது. 'ஸீதா பிராட்டியைக் கைப் பிடித்தவனன்றோ இராமபிரான்; அவனை அடர்க்கலாகுமோ?' என்றான். ரத்ன மானது தன்னை யிழந்தவனைக் கதறிக்கதறி யழப்பண்ணும், எம்பெருமானு மப்படியே: ஸ்ரீராமரத்னத்தை யிழந்த பரதாழ்வான் வைபயிற் புரண்டு கதறி யழுதமை ஸ்ரீராமாயணத்தி ப்ரஸித்தம். "பழுதேபலபகலும் போயின" என்று கதறியழுவர் விலேசமுடையார். "இன்பத்தை யிழந்த பாவியேன் எனதாவி நில்லாதே" "எழில்கொள் நின் திருக்கண்ணிணை நோக்கந்தன்னையும் இழந்தே னிழந்தேனே" "உன்னைக் காண்பான் நானலப்பாய் ஆகாயத்தை நோக்கி யழுவன்" என்றபடி யெல்லாம் கதறுவர்கள்.—இங்ஙனே மற்றும் பல உவமைப் பொருத்தங்கள் கண்டு கொள்க.

ஆக இப்படிப்பட்ட எம்பெருமானைத் தாளுந்தடக்கையுங்கூப்பிப் பணியு மவர்கள் யாவரேனும் அவர்களே பிறவிதோறும் எம்மை ஆட்கொள்ளவல்ல நாதர்கள் என்றாயிற்று.

தாளுந்தடக்கையுங்கூப்பி என்றவிடத்தில் ஒரு நுட்பம் கண்டறியத் தக்கது; தாள் கூப்புகையாவது என்ன? கை கூப்புகையாவது என்ன? என்று ஆராயவேணும். இவையிரண்டாலும் ஆகிஞ்சந்யமும் அநந்யகதித்வமும் தெரி விக்கப்பட்டவாறும்: தாள்களைக் கூப்பிவிட்டால் வேறெங்கும் எனக்குப் போக் கிடமில்லையென்று ஸம்ஜ்ஞையாதலால் அதனால் அநந்யகதித்வம் தெரியும்; கை கூப்பிவிட்டால் என்கையில் ஒன்றுமில்லை என்கிற ஸம்ஜ்ஞையாதலால் அதனால் ஆகிஞ்சந்யம் தெரியும். ஆக, அஹங்காரமமகாரங்கள் அற்றபடியைக் கூறின வாறு. ... ... ... ... ... (௭)

நாதனைஞாலமும்வானமுமேத்தும் நறுந்துழாய்ப்
போதனை * பொன்னெடுஞ்சக்கரத்து எந்தைபிரான்தன்னை *
பாதம்பணியவல்லாரைப் பணியுமவர்கண்டீர் *
ஓதும்பிறப்பிடைதோறு எம்மையாளுடையார்களே (௮.)

நாதனை — ஸ்வாமியாய்
ஞாலமும் வானமும் ஏத்தும் — உபய விபூதியிலுள்ளாரும் ஏத்துதற்குரியவனாய்
நறுந்துழாய் போதனை — பரிமளமுள்ள திருத்துழாய் மலர்மாலையை யுடையவனும்
பொன் நெடு சக்கரத்து — அழகினால் உயர்ந்த திருவாழியை யுடையவனுமான
எந்தை பிரான் தன்னை — எம்பெருமானை
பாதம் பணிய வல்லாரை — திருவடிகளில் வணங்க வல்லவர்களை
பணியும் அவர் — வணங்குமவர்கள்,
ஓதும் — பேசப்படுகிற
பிறப்பிடை தோறு — ஜன்மங்கள்தோறும்
எம்மை — எங்களை
ஆள் உடையார்கள் கண்டீர் — அடிமை கொள்பவர்களாவர்.

* * * [நாதனைஞாலமும்.] எம்பெருமானுடைய தோளும் தோள் மாலையுமான அழகிலே தோற்றவர்களான பாகவதர்களுக்கும் பக்தராயுள்ளவர்கள் எனக்கு

ஸ்வாமிகளென்கிறார். நாதன் என்பதற்கு யாசிக்கப்படுபவன் என்றும் யாசிப்
பவன் என்றும்' இருவகையாகவும் பொருள்; கொள்ள வியாகரண சாஸ்த்ரம்
இடந்தரும். அடியவர்களாலே யாசிக்கப்படுபவனாக இருப்பது போலவே அடிய
வர்களை எம்பெருமான்தான் யாசிப்பவனாகவும் இருக்கையாலே : இருவகைப்
பொருளும் பொருந்தும், சரணாகதிகத்யத்தில் « ஸகலே-க்ஷணக—அர்த்திகல்பக !"
என்கிறவிடத்திற்கு வியாக்யானமருளின ஆசிரியர்கள் இவ்விருவகைப் பொரு
ளும் விளங்க வியாக்யானித் தருளினார்கள்.

ஞாலமும்வானமுமேத்தும் — "நறுந்துழாய்ப்போதனை" என்ற ஸமயில்
வாஸனா ஸ்வாரஸ்யத்தால், தோளும் தோள் மாலையுமான வழகைக் கண்டால்
நித்ய ஸூரிகளோடு நித்ய ஸம்ஸாரிகளோடு வாசியற அனைவரும் புகழும்படியா
யிருக்குமென்கிற பொருள் கிடைக்கும். பகவானைப் பழிக்கவேணுமென்கிற
கருத்துடையாரும் திருத்துழாய்மாலை யணிந்திருக்குமழகைக் கண்டவாறே ஏத்
தாதிருக்க முடியாதன்றோ.

பொன்னெடுஞ்சக்கரத்து எந்தைபிரான்தன்னை — மேற்சொன்ன திருத்
துழாய் மாலையில் ஈடுபடாதவர்களையும் கையும் திருவாழியுமான வழகாலே ஈடு
படுத்திக் கொள்பவனாயிற்று. "இன்னாரென்றறியேன் அன்னே! ஆழியொடும்
பொன்னார் சார்ங்கமுடைய அடிகளை இன்னாரென்றறியேன்" என்று மதிமருளப்
பண்ணவல்ல திவ்யாயுதங்களெல்லாவற்றிற்கும் உபலக்ஷணம்.

ஆக இப்படிப்பட்ட எம்பெருமானுடைய திருவடிகளைப்பணிகின்ற அடி
யவர்கட்கும் அடியவர்கள் யாவரோ, அவர்களே எக்காலத்தும் நமக்கு சேஷிகள்
என்றாராயிற்று.

இப்பாசுரத்தின் ஈட்டில் ஒரு ஐதிஹ்யமுளது.—(அதாவது) முற்காலத்
தில் பிள்ளையாத்தான் என்பாரொருவர் ஆசார்ய புருஷத்வப்பேடார் பொலிய
கிற்பவராகையாலே க்ருதஜ்ஞர்களான ஆசார்யர்களிடத்திலே பணிந்திருந்து
அர்த்த விசேஷங்கள் கேட்கத் திருவுள்ளமில்லாதவராய நஞ்சீயர் பக்கலிலே
வந்து 'எனக்கு ஒருகு திருவாய்மொழி அருளிச்செய்ய வேணும்' என்று கேட்க,
'நம்பிள்ளை பக்கலில் கேட்டால்தான் விசதமாகும்; அங்கே சென்று கேளும்'
என்று நஞ்சீயர் அருளிச் செய்ய, அது கேட்ட அவர் 'நம்பிள்ளையினிடத்தில்
கேட்பதானால் அவரை நான் தண்டன் ஸமர்ப்பிக்க வேண்டியதாகுமே; அதற்கு
இருப்பதன்றோ ஸ்வாமி பக்கலில் ப்ரார்த்திக்கிறேன்' என்றுகூற, அது கேட்ட
நஞ்சீயர் "அப்படி ஒரு நிர்ப்பந்தமில்லை'; என்று சொல்லிக்கொண்டே நம்
பிள்ளையை வரவழைத்து 'இவனுக்குப் பாங்கானபடி ஒருகு திருவாய்மொழி
சொல்லும்' என்று நியமித்தருள, நம்பிள்ளையும் ஆசார்ய நியமனத்தைச் சிரஸா
வஹித்து அப்படியே அருளிச்செய்துவர, இத்திருவாய்மொழியளவும் கேட்டு
வந்த அவர் பாகவதர்களின் பெருமை இப்படியன்றோ இருப்பதென்று தேறி,
அதுவரையில் தாமிருந்த நிலைமைக்கு மிகவும் அநுதபித்து அன்று முதலாக
நம்பிள்ளையினிடத்திலே அளவுகடந்த ப்ராவண்யம் காட்டப்புக, நம்பிள்ளை

அதற்கு இசையாதொழியவே அவர் கஞ்சேபீடத்திற் சென்று “பாகவத வைபவம் தெரியாமலே முன்பு அப்படிச் சொன்னேன்; க்ஷமித்தருள வேணும்; இனி அடியேன் அநுவர்த்திக்கும்படிகளுக் கெல்லாம் நம்பிள்ளை இசைந்திருக்குமாறு ஸ்வாமி நியமித்தருள வேணும்” என்று விஜ்ஞாபித்துப் போந்தார் என்பதாக. ... ... ... ... ... (௭)

உடையார்ந்தவாடையன் கண்டிகையன்உடைநாணினன் *
புடையார்பொன்னூலினன் பொன்முடியன், மற்றும்பல்கலன் *
நடையாவுடைத்திருநாரணன் தொண்டர்தொண்டர்கண்டீர் *
இடையார்பிறப்பிடைதோறு எமக்கெம்பெருமக்களே. (௮)

| | | | |
|---|---|---|---|
| உடை ஆர்ந்த ஆடையன் | திருவரைக்குத் தகுதியான திருப்பரிவட்டத்தை யுடையவனும் | மற்றும் பல் கலன் | மற்றும் பலவகைப்பட்ட ஆபரணங்களையும் |
| கண்டிகையன் | கண்ட பூஷணத்தை யுடையவனும் | நடையா உடை | இயற்கையாக வுடைய வனுமான |
| உடை நாணினன் | திருப்பரிவட்டத்தின் மேல் சாத்தின திருவரை நாணையுடையவனும் | திரு நாரணன் | ஸ்ரீமந்நாராயணனுக்கு |
| புடை ஆர் | ஸந்நிவேசமமைந்த | தொண்டர் தொண்டர் | அடியார்களுக்கும் அடியாரானவர் |
| பொன் நூலினன் | பொற்பூணூலை யுடையவனும் | இடை ஆர் | நிரந்தரமான |
| பொன் முடியன் | அழகிய திருமுடியை யுடையவனும் | பிறப்பிடை தோறு | பிறவிதோறும் |
| | | எமக்கு | எங்களுக்கு |
| | | எம் பெரு மக்கள் கண்டீர் | எவ்வளவோ சிறந்த வர்களாவர். |

• • • [உடையார்ந்தவாடையன்.] திருவரை பூத்தாற்போலே யிருக்கிற திருப்பீதாம்பரத்தை யணிந்தவனும், திருக்கழுத்திலே சாத்தும் திவ்யாபரணங்களை யுடையவனும், அழகிய அரைநாண்மாலையை யணிந்தவனும், ஒரு பக்கத்திற்கு வேறொரு ஆபரணம் வேண்டாதபடி தானே போருமாய், காளமேகத்திலே மின்னுப்போலே யிருக்கிற யஜ்ஞோபவீதத்தை யுடையவனும், ஆச்ரிதரக்ஷணத்திற்கு முடிகவித்திருப்பவனும், மற்றும் எண்ணிறந்த திருவாபரணங்களை இயற்கையாகவே அணிந்துள்ளவனுமான ஸ்ரீமந்நாராயணனுக்கு தாஸாநுதாஸர்களாயிருக்குமவர்கள் பிறவிதோறும் எமக்கு அஸாதாரண சேஷிகளாவர்கள் என்றதாயிற்று.

“உடையார்ந்த வாடையன்” என்றவிடத்து “ஆவாஸோவிரஹாஞ் ஸஸோபி லவயானுஜேவா ஷூஜ்ஜ: । பீதாவாஸயா வஸ்ஸ வாக்ஷூாத தக்ஷ உதயே — தாஸாமாவிரபூச் சௌரி: ஸ்மயமாநமுகாம்புஜ:, பீதாம்பரதர: ஸ்ரக்வீ ஸாக்ஷாந்மந்மதமந்மத:” என்கிற ஸ்ரீபாகவத ச்லோகத்தை நம்பிள்ளை, வெகு அழகாக வியாக்யானித்தருளினார்.

கண்டிகையன் என்றவிடத்து ஈடு:—“கறையுடையமுரு போலே வெழ வீசிப் ப்ரகாசிக்க, நடுவே வழிப்பித்துக் கொள்ளும் திருக்கழுத்திலாபரணம். இவரை மடிபிடித்துக் கொண்டு போய்க் கழுத்தளவு ஸௌந்தர்யத்திலே நிறுத்

நிற்று." என்பதாம். இந்த ஸ்ரீஸூக்தியின் சுவை ரஸிகர்களால் சுவைக்கத் தக்கது.

"கண்டிகையன்" என்று திருக்கழுத்தினழகிலே ஈடுபட்டு அநுபவியா நிற்க "உடைநாணினன்" என்று மீண்டும் கீழேயிறங்கி அநுபவிக்கும்படி என்னே? என்று சங்கைபிறக்க, அதற்கு நம்பிள்ளை அருளிச் செய்கிறார் காண்மின்—"கழுத்தே கட்டளையாக அநுபவியா நிற்க கணமதமான ஸௌந்தர்ய தரங்கங்கள் கீழே போரவீச, நடுவேநின்று அநுபவிக்கிறார்" என்று. "புடையார் பொன்னூலினன்" என்றவிடத்து—"இந்த ஸௌந்தர்ய ஸாகரத்தின் நடுவே அலைப்புக்கவாறே தமக்கு ஆலம்பனமாக ஒருநூலைப் பற்றினார்காணும்" என்றருளியுள்ள ஸ்ரீஸூக்தி பரம போக்யம். ... ... (௪)

பெருமக்களுள்ளவர்தம்பெருமானை * அமரர்கட்கு
அருமையொழிய அன்றாரமுதூட்டியவப்பனை *
பெருமைபிதற்றவல்லாரைப் பிதற்றுமவர்கண்டீர் *
வருமையுமிம்மையும் நம்மையளிக்கும்பிராக்களே. (௫)

| | |
|---|---|
| பெருமக்கள் உள்ளவர் தம் பெருமானை | பெருமக்கள் என்னப் படுகின்ற நித்யஸூரிகட்குத் தலைவனும் |
| அமரர்கட்கு | சாவாமை வேண்டியிருக்கும் தேவர்களுக்கு |
| அருமை ஒழிய | அருமைப்படாதபடி |
| அன்று | முன் பொருகாலத்தில் |
| ஆர் அமுது ஊட்டிய | பூர்ணமாக அம்ருதத்தைப் புஜிப்பித்த வனுமான |
| அப்பனை | எம்பெருமானை உத்தேசித்து |
| பெருமை | (அவனது) பெருமைகளை |
| பிதற்ற வல்லாரை | அடைவின்றியே சொல்லுமவர்களான பாகவதர்களை |
| பிதற்றுமவர் | அடைவின்றியே சொல்லித் துதிக்குமவர்கள் |
| வருமையும் இம்மையும் | இஹலோக பரலோகங்களிரண்டிலும் |
| நம்மை அளிக்கும் பிராக்கள் கண்டீர் | நம்மை உஜ்ஜீவிப்பிக்கும் ஸ்வாமிகளாவர். |

* * * [பெருமக்கள்.] ப்ரயோஜநாந்தர பரர்க்குங்கூட அபேக்ஷிதத்தைத் தலைக்கட்டிக் கொடுத்தருளு மெம்பெருமானுடைய ஔதார்யத்திலே தோற்றவர்களான பாகவதர்களுக்குத் தோற்றிருக்குமவர்கள் எனக்கு ஸ்வாமிகள் என்கிறார். [பெருமக்களுள்ளவர்தம் பெருமானை] பெரியோர்கள் என்று யாவருளரோ அவர்களெல்லார்க்கும் பெரியோன் என்றபடி: "யாங்கடவுளென்றிருக்கு மெவ்வுலகிற் கடவுளர்க்கும் ஆங்கடவுள் நீயென்றால் அஃதுனக்கு வியப்பாமோ?" என்ற பின்னைப் பெருமானையங்கார் பாசுரம் காண்க. "பெருமக்களுள்ளவர் தம் பெருமான்" என்றதற்கு "ப்ரஹ்மேசாநாதி ஸர்வ தேவர்களுக்கும் ஈச்வரன்" என்பது ஆறாயிரப்படி வியாக்யானம். "நித்யஸூரிகளுக்கு நாதன்" என்று மற்ற வியாக்யானங்கள்.

அமரர்கட்கு ஆரமுதூட்டிய வரலாறு:—முன்னொரு காலத்தில், இவ்வண்ட கோளத்திற்கு அப்புறத்திலுள்ள விஷ்ணுலோகத்துச்சென்று திருமகளைப் புகழ்ந்துபாடி அவளால் ஒரு பூமாலை ப்ரஸாதிக்கப் பெற்ற ஒரு வித்யாதரமகள்

மகிழ்ச்சியோடு அம்மாலையைத் தன்கை வீணையில் தரித்துக்கொண்டு பிரமலோக வழியாய் மீண்டுவருகையில் துர்வாஸ மஹாமுனி எதிர்ப்பட்டு அவளை வணங்கித் துதிக்க அவள் அம்மாலையை அம்முனிவனுக்கு அளித்திட்டாள். அதன் பெருமையை யுணர்ந்து அதனைச் சிரமேற் கொண்ட அம்முனிவன் ஆனந்தத்தோடு தேவலோகத்திற்கு வந்து, அப்பொழுது அங்கு வெகு உல்லாஸமாக ஐராவத யானையின் மேற் பவனிவந்து கொண்டிருந்த இந்திரனைக் கண்டு அவனுக்கு அம்மாலையைக் கைநீட்டிக் கொடுக்க, அவன் அதனை மாவட்டியினால் வாங்கி அந்த யானையின் பிடரியின்மேல் வைத்தவளவில், அம்மதயானை அதனைத் துதிக்கையாற் பிடித்திழுத்துக் கீழெறிந்து காலால் மிதித்துத் துவைத்தது. அது கண்டு முனிவரன் கடுங்கோபங் கொண்டு இந்திரனை நோக்கி 'இவ்வாறு செல்வச் செருக்குற்ற உன்னுடைய ஐச்வரியங்களெல்லாம் கடலில் ஒளிந்துவிடக் கடவன' என்று சபிக்க உடனே தேவர்களின் செல்வம் யாவும் ஒழிந்தன. ஒழியவே அசுரர்வந்து பொருது அமரரை வென்றனர். பின்பு இந்திரன் தேவர்களோடு திருமாலைச் சரணமடைந்து அப்பிரான் அபயமளித்துக் கட்டளை யிட்டபடி அசுரர்களையுந் துணைக்கொண்டு மந்தரமலையை மத்தாக நாட்டி வாஸுகி யென்னும் மஹா ஸர்ப்பத்தைக் கடை கயிறாகப் பூட்டிப் பாற்கடலைக் கடையலாயினர். அப்பொழுது மத்தாகிய மந்தரகிரி கடலினுள்ளே அழுந்திவிட, தேவர்களின் வேண்டுகோளினால் திருமால் பெரியதோர் ஆமை வடிவமெடுத்து அம்மலையின் கீழ் சென்று அதனைத் தனது முதுகின்மீது கொண்டு தாங்கி அம்மலை கடலில் அழுந்திவிடாமல் கடைதற்கு உபயோகமாம்படி அதற்கு ஆதாரமாக எழுந்தருளியிருந்தனன். இப்படி ஸ்ரீமந்நாராயணன் அக்கடலினிடையே மஹா கூர்மமாய் மந்தர பர்வதத்திற்கு ஆதாரமாய் எழுந்தருளியிருக்க, வாஸுகியின் வாலைப் பிடித்துக் கொண்ட தேவர்களும் தலையைப் பிடித்துக் கொண்ட அசுரர்களும் ஆகிய இருதிறத்தாரும் அதனை வலியப் பிடித்திழுத்துக் கடையவல்ல வலிமையில்லாதவராய் நிற்க, அது நோக்கி அத்திருமால்தான் ஒரு திருமேனியைத் தரித்துத் தேவர்கள் பக்கத்திலேயும் வேறொரு திருமேனியைத் தரித்து அசுரர்கள் பக்கத்திலேயும் நின்று வாஸுகியின் வாலையும் தலையையும் பிடித்து வலமும் இடமுமாக இழுத்துக் கடைந்தனன். அப்பால் அந்த ஸ்ரீமஹாவிஷ்ணு தந்வந்தரி யென்னும் தேவரூபத்தைத் தரித்து அம்ருத பூர்ணமான கமண்டலத்தைக் கையிலெடுத்துக் கொண்டு அந்த க்ஷீரஸமுத்ரத்திலிருந்து தோன்றினன். அப்பொழுது அசுரர்கள் தந்வந்தரியின் கையிலிருந்த அம்ருத கலசத்தைப் பலாத்காரமாகப் பிடுங்கிக்கொள்ள அந்த எம்பெருமான் ஜகன்மோஹனமான ஒரு பெண் வடிவத்தைத் தரித்து அசுரர்களை மயக்கி வஞ்சித்து அமுதத்தைக் கைக்கொண்டு அமரர்களுடைய கோஷ்டிக்கு மாத்திரம் ப்ரதாநித்தனன்.

[இப்படி எம்பெருமான் மோஹினீரூபத்தால் அசுரர்களை மயக்கித் தேவர்கட்கே அமிருதத்தைப் பங்கிட்டுக் கொடுத்து வருகையில், ராஹுவென்னும் ஓர் அசுரன் தான் இருக்கவேண்டிய அசுரர் கூட்டத்தை விட்டுத் தந்திரமாகத் தேவ கோஷ்டியினிடையிலே புகுந்து கையேற்று அமிருதத்தை வாங்கியுண்ண, அதனை ஸூர்ய சந்திரர்கள் குறிப்பித்த மாத்திரத்தில், எம்பெருமான் அவனை அதுப்பை

யாலடித்துத் தலைவேறு உடல்வேறாக்க, அம்ருத முண்டதனால் உயிர் நீங்காத அந்தத் தலையும் உடலும் விஷ்ணுவின் அநுக்ரஹத்தால் ராஹு கேதுக்கள் என்ற இரண்டு க்ரஹங்களாகி ஸூர்யன் முதலிய ஏழு க்ரஹங்களோடு சேர்ந்து, தம் மேற் கோள்சொன்ன ஸூர்யசந்திரர்க்குப் பகையாய்ச் சிற்சில காலத்தில் அவர் களைப் பிடித்துக் கொள்ளுகின்றன. அதுவே க்ரஹண மெனப்படுகின்றது— என்பதும் இங்கு அறியத்தக்கது ]

வேறொரு பலனையும் விரும்பாமல் எம்பெருமானையே பரம ப்ரயோஜன மாக விரும்ப வேண்டுவது ஸ்வரூப ப்ராப்தம். அங்ஙனம் தன்னை விரும்பாமல் வேறொரு அற்பபலனை விரும்பி அது பெறுவதற்காகத் தன்னைவந்து பணிவா ருண்டாகில் 'இவர்கள் நம்மையே பரமப்ரயோஜனமாகக் கொள்ளும் உத்தமாதி காரிகளாக இல்லாவிட்டாலும், வேறொரு பலனை விரும்பினர்களாகிலும், அப்பல னைப் பெறுவதற்கு வேறொரு க்ஷுத்ர தேவதையைத் தேடி ஓடாமல் நம்மிடம் வந்தார்களே; நம்மை உபேயமாகக் கொள்ளாவிடினும் உபாயமாகவாவது கொண் டார்களே' என்று திருவுள்ளமுவந்து அருமையான காரியங்களைச் செய்து அவர்களது மனோரதத்தை நிறைவேற்றுபவன் எம்பெருமான்—என்பது இந்தச் சரிதையினால் விளங்கும். இப்படிப்பட்ட பெருமையைப் பேசுமவர்கள் யாவர், அவர்களுடைய பெருமையைப் பேசுமவர்கள் இஹலோக பரலோகங்களிரண் டிலும் நம்மை உஜ்ஜீவிப்பிக்கும ஸ்வாமிகள். இஹலோகத்திற் பண்ணுமுபகார மாவது * நாட்டாரோடு இயல்வொழிந்தல்; பரலோகத்திற் பண்ணுமுபகார மாவது * அடியார்கள் குழாங்களிலே உடன் கூட்டுவது. ... (௯)

அளிக்கும்பரமனைக்கண்ணனை ஆழிப்பிரான்தன்னை *
துளிக்குநறுங்கண்ணித் தூமணிவண்ணனெம்மான்தன்னை *
ஒளிக்கொண்டசோதியை உள்ளத்துக்கொள்ளுமவர்கண்டீர் *
சலிப்பின்றியாண்டெம்மைச் சன்மசன்மாந்தரங்காப்பரே. (௰)

| | | | |
|---|---|---|---|
| அளிக்கும் பரமனை | உபகரிக்குமிடத்தில் தனக்கு மேலில்லாதபடி உபகரிக்குமவனும் | ஒளி கொண்ட சோதியை | அளவற்ற தேஜோரூப மான விக்ரஹத்தை யுடையவனுமான |
| கண்ணனை | க்ருஷ்ணனாகவந்து அவ தரித்தவனும் | எம்மான் தன்னை | எம்பெருமானை |
| ஆழி பிரான் தன்னை | திருவாழியைக் கையி லேந்தி மஹோபகாரங் கள் செய்பவனும் | உள்ளத்து கொள்ளுமவர் | நெஞ்சிலே தாங்கு மவர்கள் |
| துளிக்கும் நறு கண்ணி | தேன் வெள்ளமிடா நின்ற நறுமணம் மிக்க மாலையை யணிந்துள்ள வனும் | எம்மை | எம்மை |
| | | சலிப்பு இன்றி ஆண்டு | ஒருகாலும் கைவிடாமே அடிமை கொண்டு |
| தூ மணி வண்ணன் | அழுக்கற்ற மாணிக்கம் போன்ற வடிவை யுடையவனும் | சன்மம் சன்மாந்தரம் காப்பர் கண்டீர் | எத்தனை ஜன்மமானாலும் ரக்ஷிக்குமவர்களாவர். |

* * * [அளிக்கும்பரமனை.] ப்ரயோஜநாந்தரங்களை விரும்பாமல் அநந்ய ப்ரயோ ஜநரா யிருப்பார்க்குத் தன் வடிவழகை அநுபவிப்பிக்கும் உஜ்வல ஸ்வபாவனென

எம்பெருமானை அநுபவிப்பார் நமக்கு ஸ்வாமிகளென்கிறார். அளிக்கும் பரமன் என்றது—அளிக்கும் விஷயத்தில் தனக்கு மேற்பட ஒருவனுமில்லாதவன் என்றபடி. அதாவது— உலகத்தில் ரக்ஷகர் என்று பேர் சுமப்பவர்கள் பலருண்டாகிலும் எம்பெருமானே அத்விதீயரக்ஷகன் என்பது கருத்து: (அல்லது) பிறர்க்குக்கொடுக்கும் விஷயத்தில் தனக்கு மேலில்லாதவன்—தன்னையே கொடுப்பவன் என்றுமாம். தன்னையே கொடுப்பதுமுண்டோ வென்ன, கண்ணனை என்கிறார். கண்ணனாய்த் திருவவதரித்து ஒவ்வொருவர்க்கும் தன்னை முற்றாட்டாகக் கொடுத்தமை உணர்க.

ஆழிப்பிரான்தன்னை— பிறர்க்குத் தன்னையே கொடுப்பதுபோலத் தனது திவ்யாயுதத்தையும் அவர்களுக்கே தந்து உபகரிப்பவன். ஸூர்ய வம்சத்தவனான அம்பரீஷ சக்ரவர்த்தி ஸ்ரீகுலசேகரப் பெருமாளைப்போலே ராஜ்ய போகம் முதலியவற்றில் பரமவிரக்தனாய் பகவத்பாகவத ப்ரவணனாயிருக்க, அதனால் மிகவும் திருவுள்ளமுவந்த எம்பெருமான் தனது திருவாழியாழ்வானை அவ்வரசனது மாளிகையில் இருந்துகொண்டு அவனுக்கு ரக்ஷை பண்ணிக் கொண்டு போரும்படி நியமித்திருந்தான். இப்படி யிருக்கையில் அவ்வரசன் ஸம்வத்ஸர ஸாத்யமான ஒரு த்வாதசீவ்ரதத்தை அநுஷ்டிக்க விரும்பி அப்படியே ஓராண்டளவும் அநுஷ்டித்து ஸம்வத்ஸராந்த த்வாதசி திதியில் எண்ணிறந்த அந்தணர்கட்கு தக்ஷிணை கொடுத்து அவர்களது அநுமதி பெற்றுப் பாரணைபண்ணப் புகுமளவில் துர்வாஸரென்னும் முனிவர் காட்சி தந்தார். மாமுனிவர் அதிதியாக வந்தாரே யென்று பெருமகிழ்ச்சி கொண்ட அம்பரீஷர் அவரை நல்வரவேற்றுப் பாரணைக்கு எழுந்தருள வேண்டினார். அம்முனிவர் அதற்கு இசைந்து 'இதோ மாத்யாஹ்நிகாநுஷ்டானம் முடித்துவருகிறேன்' என்று சொல்லி யமுனைக்குச் சென்றவர் நெடும்போது த்யானத்தில் இருந்துவிட்டார்; த்வாதசிதிதி முடிவதற்குள் பாரணை பண்ணாவிடில் வ்ரத லோபம் நேர்ந்துவிடுமே யென்றும், அதிதியை உபேக்ஷித்துப் பாரணை பண்ணிவிட்டால் பெரும்பாதகம் நேருமே என்றும் சிந்தித்து இன்னது செய்வதென்று தோன்றாமல் அடித்துக் கொண்டிருக்கின்ற அம்பரீஷர் தர்மசாஸ்த்ர நிபுணர்களைத் திரட்டி மேல் செய்ய வேண்டுவதைப்பற்றி ஆராய்ந்தளவில் "அபோ ஶ்நாதி தந்நைவாஸிதம் நைவாஸிதஞ்" என்ற வேதவாக்கியத்தைக் கொண்டு ஜலபாரணை பண்ணுவதென்று நிஷ்கர்ஷித்து, தீர்த்தமாத்ர பானத்தாலே வ்ரதத்தைத் தலைக்கட்டி அன்னபாரணைக்காக அம்முனிவரின் வரவை எதிர்பார்த்திருந்தார். ஸாவகாசமாக அநுஷ்டானங்களை முடித்துவந்த முனிவர் 'அரசர் தலைவன் தீர்த்தபாரணை பண்ணிவிட்டான்' என்றறிந்து மிக்க சீற்றமுற்றுத் தமது சிரஸ்ஸில் நின்றும் ஒரு சடையை யெடுத்து அதனால் காலாக்நி ஸத்ரு சமானவொரு க்ருத்யையை உண்டாக்கி, அதனை அம்பரீஷரைக் கொல்லுமாறு ஏவினர். தன்னைக் கொல்வதாகவந்த அந்த க்ருத்யையைக் கண்டும் ராஜா சிறிதும் சலிக்கவில்லை. அவ்வரசனது ரக்ஷைக்காக எப்போதும் க்ருஹத்திலேயே ப்ரதிஷ்டிதராயிராநின்ற திருவாழியாழ்வான் ஒரு நொடிப்பொழுதில் அந்த க்ருத்யையை நசித்துவிட்டு அந்த துர்வாஸரையும் நலிவதாக மிக்க வேகா

பத்துடன் அவரைத் தூக்கிக்கொண்டு செல்ல, அஞ்சியோடுமவர் எங்குப் போயும் சரணம் பெறாது எம்பெருமானைச் சரணம் புகுந்த வளவிலும் 'அம்பரீஷர் காலிலே விழுந்தாலன்றி இந்த ஆபத்து நீங்காது' என்றதிற்கு அவர் காலிலே விழுந்து க்ஷாமணம் பண்ணிக்கொண்டு உயிர்தப்பினார் முனிவர் என்ற கதையினால் எம்பெருமான் திருவாழியை அன்பர்க்கு ஆக்கிக் காத்தருளுந் திறம் அறியத்தக்கது.

இப்படியாக ஆச்ரிதரக்ஷணம் செய்தற்கென்றே தனிமாலை யிட்டிருப்பவனென்கிறது துளிக்குநறுங்கண்ணி யென்பதனால். இங்ஙனே ஆச்ரிதரக்ஷணம் செய்வதுதானே காரணமாக அவனுடைய திருமேனி புகர்பெற்று விளங்கும்படியை அருளிச்செய்கிறார் தூமணி வண்ணன், ஒளிக்கொண்ட சோதியை என்பவற்றால். —ஆக இப்படிப்பட்ட எம்பெருமானை உள்ளத்துக் கொள்ளுமவர் ஒரு சலனமில்லாதபடி எம்மையாண்டு இந்த ஜன்மத்தோடு ஜன்மாந்தரங்களோடு வாசியற எஞ்ஞான்றும் ரக்ஷிக்குமவர்கள் என்றாயிற்று

சன்ம சன்மாந்தரம்—வடசொல் தொடர். ... ... (சு)

சன்மசன்மாந்தரங்காத்து அடியார்களைக்கொண்டுபோய் *
தன்மைபெறுத்தித் தன்தாளிணைக்கீழ்க்கொள்ளுமப்பனை *
தொன்மைபிதற்றவல்லாரைப் பிதற்றுமவர்கண்டீர் *
நன்மைபெறுத்தெம்மை நாளுய்யக்கொள்கின்றநம்பரே. (எ)

| | | | |
|---|---|---|---|
| சன்மம் சன்மாந்தரம் காத்து | மாறிமாறிப்பல பிறப்பும் பிறவாதபடி காத்து | தொன்மை | இயற்கையான ஔதார்ய குணத்தை |
| அடியார்களை | அடியவர்களை | பிதற்ற வல்லாரை | வாய்வந்தபடி சொல்லித் திரியும் பாகவதர்களை |
| கொண்டுபோய் | (நித்ய விபூதியிலே) கொண்டுபோய் | பிதற்றுமவர் | வாய்வந்தபடி புகழுமவர்கள் |
| தன்மை பெறுத்தி | ஸ்வஸ்வரூப ப்ராப்தியைப் பண்ணிக் கொடுத்து | எம்மை | நம்மை |
| தன் தாள் இணை கீழ் | தனது திருவடிகளின் கீழே | நன்மை பெறுத்து | நன்மை பெறும்படி பண்ணி |
| கொள்ளும் | அடிமை கொண்டருளுகின்ற | நாள் | ஆத்ம தத்துவமுள்ள வரையில் |
| அப்பனை | ஸ்வாமியினுடைய | உய்ய கொள்கின்ற | உஜ்ஜீவிப்பிக்க வல்லவர்களாக |
| | | நம்பர் கண்டீர் | நம்பப்படுமவர்களாவர். |

* * * [சன்ம சன்மாந்தரம்.] அடியவர் திறத்து அவன் செய்தருளும் மஹோபகாரங்களை அநுஸந்தித்து அப்படிகளைப் பிதற்றவல்லாரைப் பிதற்றுமவர்கள் இவர் எனக்கு என்றைக்கும் ஸ்வாமிகளென்கிறார். அவரவர்கள் செய்துபோந்த கருமங்களுக்குப் பலனாக எத்தனையோ ஜன்மங்கள் நேர வேண்டியிருக்கும்; இருந்தாலும் ஸ்வல்பமான ஆபிமுக்யத்தையே கணக்கக்கொண்டு அந்த ஜன்மாந்தரங்கள் விளையாதபடி பரிஹரித்துத் தந்தருள்வன் எம்பெருமான்.

இங்கே ஈட்டு ஸ்ரீஸூக்திகள் இன்சுவையே வடிவெடுத்திருப்பனவாதலால் அவை எடுத்துக் காட்டப்படுகின்றன:—" [கொண்டுபோய் இத்யாதி.]

'மரணமானால்' என்கிறபடியே சரீரவிச்லேஷத்தளவும் பொறுத்திருந்து அந்திம ஸ்ம்ருதியும் பக்தியும் இவர்களுக்குப் பணியாக்காதே "அஹம் ஸ்மராமி" என்கிற படியே தானே நினைத்து, வழி தெரியாதபடியிருக்கிற சதாநிகையான காடியாலே 'ஹார்த்தாநுக்ருஹீத:' என்கிறபடியே தான் கூடக்கொண்டு புறப்பட்டு, அந்த சரீரவிச்லேஷ ஸமயத்தில் இவன்பட்ட க்லேசமெல்லாம் தீரும்படியாக அவ்வளவிலே ஒரு பரமாத்ம ப்ரவேசத்தைப் பண்ணுவித்து, சிறு ப்ரஜைகள் கொந்நால் தாயானவள் சிசிரோபசாரம் பண்ணுமாபோலே அவ்வளவிலே மேல்வழி போகைக்குத் தரிப்புண்டாம்படி பண்ணி "உயிர்கொண்டு உடலொழிய வோடும் போதோடி, அயர்வென்ற தீர்ப்பாம்" என்கிறபடியே சென்று மூகங்கொடுத்து, கர்ம ஸம்பந்தமறச் செய்தேயும் வித்யாமாஹாத்ம்யத்தாலே விரஜையளவும் ஸூக்ஷ்மசரீரம் கிடக்கும்படி பண்ணி, அர்ச்சிராதி கணங்களோடொக்க ஆனிட்டிராதே 'நயாமி' என்கிறபடியேதானே வந்து 'மாதவன்றன் துணையா நடந்தான்' என்கிற * கள்வன் கொல்லில் பிராட்டியைப்போலே தன்சிறகின் கீழே கொண்டு, வழியிலுள்ளார் சிரஸா வஹிக்கும்படி இவ்வருகுள்ளவற்றைக் கழித்துப் பரமபதத்திலே கொண்டுபுக்கு 'ஸ்வேந ரூபேணாபி நிஷ்பத்யதே' என்கிறபடியே ஸ்வஸ்வரூப ப்ராப்தியைப் பண்ணிக் கொடுத்து, பின்னையும் விடாதே யாவதாத்மபாவியாகத் தன் திருவடிகளின் கீழே யிட்டுக்கொண்டு, இதுதான் இவனுக்கு உபகரித்தானாயிருக்கை யன்றிக்கே தன் பேறாக நினைத்திருக்கும் மஹோபகாரகனை."

தொன்மையிதற்றவல்லாரை — தொன்மை — இயற்கையான குணம் என்றபடி. அதாவது இங்கு ஔதார்யகுணம். முன்னடிகளில் ஔதார்யம் பேசப்பட்டதாதலால் அதுவே யிங்குக்கொள்ளவுரியது. அக்குணத்திலே யீடுபட்டுப் புகழுமவர்களைப் புகழுமவர்கள் பாகவத சேஷத்வபர்யந்தமான பகவத் சேஷத்வஸம்பத்தையுண்டாக்கி நமக்கு அவன்திருவடிகளில் கைங்கர்யத்தை என்றென்றும் நடத்தக்கடவ பெரியார் என்றதாயிற்று. (எ)

நம்பனைஞாலம்படைத்தவனைத் திருமார்பனை *
உம்பருலகினில்யார்க்கு முணர்வரியான்தன்னை *
கும்பிநரகர்களேத்துவரேலு மவர்கண்டீர் *
எம்பல்பிறப்பிடைதோறு எம்தொழுகுலம்தாங்களே. (அ)

| | |
|---|---|
| நம்பனை | நம்பப்படுமவனும் |
| ஞாலம் படைத்தவனை | (தன்னை ஆச்ரயித்து அநுபவிக்கைக்குறுப்பாக) ஜகத்ஸ்ருஷ்டியைப் பண்ணுமவனும் |
| திரு மார்பனை | பிராட்டியைத் திருமார்பிலே உடையவனும் |
| உம்பர் உலகினில் | மேலுலகங்களில் |
| யார்க்கும் | எப்படிப்பட்டவர்களுக்கும் |
| உணர்வு அரியான் தன்னை | அறியமுடியாத பெருமையையுடையவனுமான எம்பெருமானை |
| ஏத்துவர் | துதிக்குமவர்கள் |
| கும்பி நரகர்கள் ஏலும் | கும்பீபாக நரகவாஸிகளே யானாலும் |
| அவர் தாங்கள் | அவர்கள் |
| எம் | எமது |
| பல் | பலவகைப்பட்ட |
| பிறப்பு இடை தோறு | ஜன்மவகைதோறும் |
| எம் தொழு குலம் கண்டீர் | யாம் தொழும் படியான குலீநராவர். |

* * * [நம்பனை] அவனுடைய ஸகலஸம்பத்துக்கும் ஆதாரமான ச்ரிய:பதித்வத்தை அநுஸந்தித்து அதிலே ஈடுபட்டிருக்குமவர்கள் குலம் குலமாக எனக்கு நாதர் என்கிறார். எப்படிப்பட்ட நிலைமையிலும் சேதநர்க்குத் தஞ்சமாக நம்பப்படுமவனும், ஜகத்தையெல்லா முண்டாக்குவதுஞ் செய்து இந்நீர்மைக்கு அடியான ச்ரிய:பதித்வத்தை யுடையவனும், மேலானவுலகங்களில் எத்தனையேனும் மேம்பாடுடைய பிரமன் முதலியோர்க்கும் உபாஸ்யனாயிருப்பவனுமான எம்பெருமானை ஏத்துமவர்கள் கும்பீபாக நரகத்திற்குச் செல்லுதற்குரிய பாவங்களைச் செய்தவர்களாயிருந்தாலும் அவர்கள் எமது தொழுகைக்கு உரிய சிறந்த குலத்திற் பிறந்தவர்களாகக் கொள்ளப்படுவர்கள் என்றதாயிற்று.

கும்பீநரகர்கள் என்பதற்கு இரண்டுவகையாகப் பொருள்கூறுவதுண்டு; ஆறாயிரப்படியில் "கும்பீநரகபாதகாநுபவார்ஹமான பாபங்களைப் பண்ணினரேயாகிலும்" என்றருளிச்செய்திருக்கிறபடியே, கும்பீபாக நரகத்தில் துன்பங்களை யநுபவித்தற்கேற்ற பாவங்களைச் செய்தவர்கள் என்பது ஒருபொருள்; இப்பொருளில், அவர்கள் இவ்வுலகத்திலேயே யுள்ளவர்கள் என்பது பெறப்படும். 'கும்பீபாக நரகத்திலே கிடப்பவர்கள்' என்பது மற்றொருபொருள். "கும்பீபாகத்திலே துக்காநுபவம் பண்ணா நிற்க, திருநாமத்தைச் சொல்லக்கூடுமோ வென்னில்; க்லேசாதிசயத்தாலே அம்மே! அப்பா! என்னக் கூடாதோ வென்று காணும் இவர்க்கு நினைவு." என்ற ஈட்டு ஸ்ரீஸூக்தி காண்க. "மஹாபாப பலமான கும்பீபாகநரகத்திலே கிடக்கும் அங்கே திருநாமத்தைச் சொல்லுமவர்களாகில்" என்பது இருபத்திநாலாயிரப்படி யருளிச்செயல். கும்பீபாக நரகத்திலுள்ளவர்களை ஆழ்வார் எங்ஙனே தொழக்கூடும்? என்று கேள்விபிறக்கும்; அவர்கள் திருமார்பனை ஏத்தினர்களா இல்லையா என்பதை ஆழ்வார் எங்ஙனே தெரிந்து கொள்வது? என்றும் கேள்விபிறக்கும். பாகவதர் திறத்தில் ஆழ்வார்க்குள்ள ப்ரதிபத்தி விசேஷத்தைத் தெரிவிப்பது மாத்திரத்தில் விச்ராந்தமான இந்த வசநவ்யக்திகளில் கேள்விகேட்கலாகா தென்பர் பெரியோர். (8)

குலம்தாங்குசாதிகள் நாலிலும்கீழிழிந்து * எத்தனை
நலந்தானிலாத சண்டாளசண்டாளர்களாகிலும் *
வலந்தாங்குசக்கரத்தண்ணல் மணிவண்ணற்காளென்றுஉள்
கலந்தார் * அடியார்தம்அடியார் எம்மடிகளே. (௯)

| | | | |
|---|---|---|---|
| குலம் தாங்கு | ஸகல குலங்களுக்கும் ஆதாரமான | அண்ணல் | ஸ்வாமியான |
| சாதிகள் நாலிலும் | பிராம்மணாதி ஜாதிகள் நான்கிலும் | மணி வண்ணற்கு | நீலமணி நிறத்தனான எம்பெருமானுக்கு |
| கீழ் இழிந்து | கீழே போந்து | ஆள் என்று | சேஷப்பட்டிருக்கின்றோமென்று |
| எத்தனை நலம் தான் இலாத | மிகவும் தாழ்வின் எல்லையிலே நின்ற | உள் கலந்தார் | உண்மையான ஸ்வரூபஜ்ஞானமுடையவர்களுக்கு |
| சண்டாளர் சண்டாளர் ஆகிலும் | சண்டாளரிலும் கடைகெட்ட சண்டாளர்களே யானாலும், | அடியார் தம் | அடிமைப்பட்டவர்களுக்கு |
| வலம் தாங்கு சக்கரத்து | வலத்திருக்கையில் ஏந்தப்பட்ட திருவாழியையுடைய | அடியார் | அடிமைப்பட்டவர்கள் |
| | | எம் அடிகள் | எமக்குத் தலைவராவர். |

* * * [குலந்தாங்குசாதிகள்.] கையுந்திருவாழியுமான அழகைக்கண்டு அடிமை புக்கவர்களுடைய அடியார் எனக்கு ஸ்வாமிகளென்கிறார். ப்ராஹ்மண க்ஷத்ரிய வைச்ய சூத்ரர்களென்று நான்கு ஜாதிகள் ப்ரஸித்தங்களாகவுள்ளன; அவற்றிலும் இழிந்த சண்டாளர்களிலும் மிக நீசரான சண்டாளர்களாயிருந்தாலும் அவர்கள் "வடிவார்சோதி வலத்துறையும் சுடராழியும் பல்லாண்டு" என்று திருவாழியாழ்வானுடைய சேர்த்தியில் ஈடுபட்டுப் பல்லாண்டு பாடுமவர்களாகில் அவர்களின் தாஸாநுதாஸர்கள் எமக்கு ஸ்வாமிகள் என்றாராயிற்று.

இப்பாசுரத்தைப்பற்றிக்கொண்டு இக்காலத்தவர்கள் சில ஆக்ஷேபங்கள் கூறுவர்கள்: "எத்தனை நலந்தானிலாத சண்டாள சண்டாளர்களாகிலும்" என்று ஆழ்வார் அருளிச்செய்திருப்பதை நோக்கினால் ஆழ்வாரருளிச் செயலில் அன்புடையார் இதை அநுஷ்டானபர்யந்தமாகக் கொண்டுவர வேண்டியது ஆவச்யகமல்லவா? இங்ஙனே ஆழ்வார் அருளிச்செய்ததற்கு அர்த்தமுண்டா இல்லையா? இல்லையென்னில், ஆழ்வார் ஸ்ரீஸூக்தியை அவமதித்தபடியாகும். உண்டென்னில், அதன்படியே அநுஷ்டானத்திற் காட்டவேணுமல்லவா? என்று பலபல பேசுகிறார்கள். இவற்றுக்குப் பெரியோர் அருளிச்செய்யும் ஸமாதானமாவது:—"அமரவோரங்கமாறும் வேதமோர்நான்குமோதித், தமர்களில் தலைவராய சாதியந்தணர்களேனும், நுமர்களைப்பழிப்பராகில் நொடிப்பதோ ரளவிலாங்கே, அவர்கள் தாம் புலையர் போலும் அரங்கமாநகருளானே!" என்று தொண்டரடிப்பொடியாழ்வார் அருளிச்செய்கிறார்; 'சிறந்த ப்ராமணர்களாயிருந்தாலும் அவர்கள் பாகவத நிந்தை செய்பவர்களாயிருந்தால் அவர்கள் சண்டாளரேயாவர்' என்று இப்பாசுரத்தினால் சொல்லப்படுகிறது; அப்படிப்பட்ட பாகவத நிந்தகர்கள் எத்தனையோபேர்கள் இவ்வுலகில் காணப்படுகிறார்கள்; சண்டாளரைக் கண்டால் விலகுமாபோலே அவர்களைக்கண்டால் விலகவேணுமே; அப்படி யாரேனும் விலகுவாருண்டோ! அந்தப்பாசுரத்தின் பொருள் அநுஷ்டானத்திற்கு வருமாகில் இந்தப்பாசுரத்தின் பொருளும் அநுஷ்டானத்திற்குவரும்—என்று சிலபெரியோர்கள் கூறுகின்றார்கள்.

மற்றுஞ்சிலர் கூறுவதாவது—"கெடுமிடராயவெல்லாம் கேசவாவென்ன" என்று நம்மாழ்வார் அருளிச்செய்கிறார்; கேசவா! என்று ஒருகால் திருநாமஸங்கீர்த்தனம் பண்ணினமாத்திரத்திலே இடர்கள் யாவும் தொலைந்து போகின்றனவாக இதனால் ஏற்படுகின்றது; இது திருநாமஸங்கீர்த்தனத்தின் பெருமையைப் புகழ்ந்து கூறினபடியேயல்லது வேறில்லையன்றோ; அது போலவே இங்கும் பாகவதர்களின் பெருமையைப் புகழ்ந்து கூறுகிறபடியேயல்லது வேறில்லை. கேசவாவென்ன மாத்திரத்தாலேயே இடராய வெல்லாம் கெடுமாகில் சாந்த்ராயணம் முதலிய கருமங்களினால் பாபபரிஹாரம் செய்து கொள்வது எதற்கு? என்று கேள்விபிறந்தால், என்னவிடை? சாஸ்திரங்களில் விதிக்கப்பட்ட வர்ணாச்ரமதருமங்களை அநுஷ்டித்தே தீரவேண்டும் என்று விடையாகில், ப்ரக்ருதத்திலும் அதுவேவிடையாகும். "[illegible] [illegible] [illegible] [illegible] —[illegible] வைதிகாசாரம் மநஸாபி ந லங்கயேத்" என்றும் "[illegible] [illegible]—[illegible] குலமர்யாதாம் [illegible]" என்றும், "[illegible] [illegible]

[illegible] காயாகாய வ்யவஸ்திதௌ—தஸ்மாச் சாஸ்த்ரம் ப்ரமாணம் தே கார்யாகார்ய வ்யவஸ்திதௌ" என்றும், "[illegible] ச்ருதி: ஸ்ம்ருதிர் மமைவாஜ்ஞா யஸ்தாமுல்லங்க்ய வர்த்ததே, ஆஜ்ஞாச்சேதீ மம த்ரோஹீ மத்பக்தோபி ந வைஷ்ணவ:" என்றுமுள்ள பிரமாணங்களுக்குக் கட்டுப்பட்டவர்கள் சாஸ்த்ரங்களுக்கும் அவற்றிற்காட்டிலும் பிரபலமான சிஷ்டாசாரங்களுக்கும் மாறாக நடந்துகொள்ள இயலாது—என்பதாம்.

திருமழிசைப்பிரான், திருப்பாணாழ்வார், நம்பாடுவான் போல்வாரான பரம விலக்ஷணாதிகாரிகளை உத்தேசித்தே அவதரித்த பாசுரங்களைக் கொண்டு லோக ஸேஷாபம் செய்ய நினைக்கலாகாது என்று அஸ்மதாசார்யர் அருளிச் செய்யக் கேட்டிருக்கை. விலக்ஷண பாகவதர்களுக்குப் பண்டைக் குலம் தவிர்ந்து 'தொண்டக்குலம்' என்று ஒரு சிறந்த நற்குலம் உண்டாகின்றதென்பது உண்மை. ... ... ... ... (க)

அடியார்ந்தவையமுண்டு ஆலிலையன்னவசஞ்செய்யும் *
படியாதுமில்குழவிப்படி எந்தைபிரான்தனக்கு *
அடியாரடியார்தம்மடியாரடியார் தமக்கு
அடியாரடியார்தம் * அடியாரடியோங்களே.

(கo)

| | |
|---|---|
| அடி ஆர்ந்த வையம் | (த்ரிவிக்ரமாவதார காலத்தில்) தன் திருவடியோடு ஸம்பந்தம் பெற்றதான வுலகை |
| உண்டு | (பிரளயகாலத்தில்) திருவயிற்றிலே வைத்து |
| ஆல் இலை | ஆலந்தளிரில் |
| அன்னவசம் செய்யும் | திருக்கண் வளர்ந்தருளுகின்ற |
| படி ஆதும் இல் | சிறிதும் உபமானமில்லாத |
| குழவிப் படி | சிறு குழந்தைப் பருவமுடைய |
| எந்தை பிரான் தனக்கு | எம்பெருமானுக்கு, |
| அடியார் அடியார் தம் அடியார் அடியார் தமக்கு அடியார் அடியார் தம் அடியார் அடியோங்கள் | ஏழுதலைமுறையளவான அடிமையின் எல்லையிலே நிற்பவர்களுக்கு நாங்கள் அடிமைப்பட்டவர்கள். |

• • • [அடியார்ந்தவையமுண்டு.] இவ்வுலகத்தை ஒருகால் அளந்தருளி ஒருகால் உண்டருளி ஆலிலையில் கண்வளர்ந்தருளின பெருமானுடைய திருக்குணங்களுக்குத் தோற்று அடிமையாயிருப்பாருடைய தாஸதாஸ சரமாவதிதாஸன் அடியேன் என்கிறார்.—அடியார்ந்தவையமுண்டு= எம்பெருமான் அமுது செய்தவுலகம் அவன்றனது திருவடியளவேயானது என்று ஏகோக்தியாகச் சொல்லுதற்குப் பாங்காக அருளிச் செய்கிறபடி. "தன்படிக்குக் காற்கூறும் போராததை யிறே அமுது செய்தது" என்ற ஈட்டு ஸ்ரீஸூக்தி காண்க. பிரளயங்கொள்ளாதபடி உலகங்களைத் திருவயிற்றிலே வைத்து நோக்கி ஓர் ஆலந்தளிரிலே கண் வளர்ந்தருள்வதாக நூற்கொள்கையாதலால் ஆலிலையன்னவசஞ்செய்யும் என்றார். வயிறார உண்டதனால் வரும் உறக்கம் அன்னவசம் எனப்படும்.

படியாதுமில்குழவிப்படி = ஆலமாமரத்தினிலைமேல் துயின்ற பாலகனுக்கு யசோதை பிள்ளைகளும் ஒப்பன்று என்பர். அக்கடித கடநாஸாமர்த்தி

| | | | |
|---|---|---|---|
| அன்று | முன்பொருகால் | அவன் தொண்டர் மேல் முடிவு | பாகவத விஷயத்தில் முடிவான |
| இவர்க்கு | பஞ்சபாண்டவர்களுக்கு | இவை பத்து | இப்பதிகத்தை |
| அருள் செய்த | க்ருபை பண்ணின | ஆர | நெஞ்சிலே பொருந்த |
| நெடியோனை | திருமாலை நோக்கி, | கற்கிற்கில் | கற்கவல்லாராகில் |
| தென் குருகூர் சடகோபன் குற்றேவல்கள் | அழகிய திருநகரிக்குத் தலைவரான ஆழ்வாருடைய கைங்கர்ய ரூபமாய் | சன்மம் | பிறப்பு |
| அடி ஆர்ந்த | வைலக்ஷண்ய ஸம்பந்நமான | செய்யாமை | மறுபடியும் உண்டாகாதபடி |
| ஆயிரத்துள் | ஆயிரம் பாசுரத்தினுள்ளும் | முடியும் | முடிந்து போம். |

... [அடியோங்கு.] இத்திருவாய்மொழியை ஓதவல்லவர்கள் இனி ஒருகாலும் பிறவார் என்று பலனுரைத்துத் தலைக்கட்டுகிறது. பாண்டவர்களை அரக்குமாளிகையில் அகப்படுத்தியும் சூதிலே தோற்பித்தும் வனவாஸாதிகளைப் பண்ணுவித்தும் இவ்வழிகளாலே தங்களுடைய ராஜ்யப்ரதிஷ்டை உயர்ந்து வரும்படியான துரியோதநாதியர் நூற்றுவரும் முடியும்படி பஞ்ச பாண்டவர்களுக்குப் பலவகை உபகாரங்களைப் பண்ணின எம்பெருமானைக்குறித்து ஆழ்வார் அருளிச்செய்த வாசிக கைங்கர்ய ரூபமான ஆயிரத்தினுள்ளும் பாகவத சேஷத்வ பர்யந்தமாகப் பேசின இத்திருவாய்மொழியை நெஞ்சிலே படியும்படி கற்க சக்தராகில் பாகவத சேஷத்வத்திற்கு இடையூறான பிறவி அறுபடும் என்றதாயிற்று.

ஈற்றடியில் ஆர என்பதற்கு 'நெஞ்சிலே படியும்படி' என்று பொருள் சொன்னதிற் காட்டிலும் 'ஒரு பாட்டும் நழுவவிடாமே பூர்த்தியாக' என்று பொருள் சொல்வது சிறக்கும். "அடியார்தம்மடியாரெம்மடிகளே" என்ற ஒன்பதாம் பாசுரமானவுடனே, விபுணர்களான அத்யாபகர்களுங்கூட "அடியார்த்தலையமுண்டு" என்ற பத்தாவது பாசுரத்தை மறதியினால் விட்டிட்டு "அடியோங்கு நூற்றுவர்வீய" என்ற பதினோராம் பாசுரத்தை அநுஸந்திப்பதுண்டாதலால் ஸர்வஜ்ஞரான ஆழ்வார் 'அப்படி ஒரு பாசுரத்தை நழுவவிட வேண்டா; ஆரக் கற்க வேணும்' என்று உத்போதனம் செய்தருளுகிறார் போலும்.

இதில் ஒவ்வொரு பாசுரத்திலும் எம்பெருமானைப் பற்றின ப்ரஸங்கமும் ப்ரபலமாக வுண்டாகிலும் அது உபலக்ஷண கோடியிலேயாய்ப் பாகவத சேஷத்வ ப்ரதிபாதனத்திலேயே பர்யவஸாநம் என்பது தோன்ற "தொண்டர்மேல் முடிவு" எனப்பட்டது. 'கற்க கிற்கில்' என்ற இரண்டு சொற்கள் சேர்ந்து 'கற்கிற்கில்' என்று ஒரு சொற்றன்மையதாயிற்று. ... ... ... (*)

ஏழாந் திருவாய்மொழி உரை முற்றுப்பெற்றது.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.



ஶ்ரீ:

# த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்நாவளி.

ஸ்பீதாலோகாதிபூம்நா ப்ருதுலபுஜயுஜா திவ்யமால்யாஸ்த்ரபாஜா
ஸத்வஸ்த்ராகல்பக்லுப்த்யா த்ரிதஶஸரஸக்ருதா ரக்ஷணைகப்ரவ்ருத்த்யா ।
முக்தைருத்தம்ஸிதாங்க்ர்யா ஸ்திரதயிததயா ஶ்யாமயா நித்யஸத்த்வா
ஶௌரேர்கோஷ்ட்யா ஶ்ரிதாநாம் ஸ்வஶுபதநுஜுஷா ஸம்ஸ்திதம் தம் வ்யதாநீத் ॥

[இந்தச்லோகத்தில் முதல்மூன்று பாதங்களிலுமுள்ள த்ருதீயாந்த பதங்கள் பத்தும் நான்காமடியிலுள்ள கோஷ்ட்யா என்பதற்கு விசேஷணங்கள். ஒவ்வொரு பாசுரத்திலும் ஒவ்வொருவிதமாக விசேஷிக்கப்பட்ட பகவத் சாந்நிதியில் ஈடுபட்ட பாகவதர் திறத்திலே ஈடுபட்டவர்களை ஆழ்வார் தமக்கு சேஷிகளாக அருளிச் செய்தாரென்று கருத்துக் காண்க.

1. ஸ்பீதாலோகாதிபூம்நா. * பயிலுஞ் சுடரொளி மூர்த்தியை * செழிப்புடையதான சோதியின் அதிசயத்தை யுடையதுமாய்.

2. ப்ருதுபுஜயுஜா. * தோளுமோர் நான்குடை * பெரிய பல (நான்கு) திருத்தோள்களை யுடையதுமாய்.

3. திவ்யமால்யஅஸ்த்ரபாஜா. * கறுந்துழாய்ப் போதனைப் பொன்னெடுஞ் சக்கரத் தெந்தைபிரான்தன்னை * திவ்யமான திருத்துழாய் மாலையும் திரு ஆயுதங்களையு முடையதுமாய்.

4. ஸத்வஸ்த்ராகல்பக்லுப்த்யா. * உடையார்ந்த வாடையன். * அழகிய திருப்பீதாம்பரத்தையும் திருவாபரணங்களையு முடையதுமாய்.

5. த்ரிதசரஸக்ருதா. * அமரர்கட்கு அருமை யொழிய அன்றாரமு தூட்டியவப்பனை. * தேவர்களுக்கு போக்யமான அமுதத்தைக்கொடுப்பதுமாய்.

6. ரக்ஷணைகமுக்யவத்யா. * அளிக்கும் பரமனைக் கண்ணனை. * அடியார்களைக் காத்தருள்வதில் நோக்குடையதுமாய்.

7. முக்தை: உத்தம்ஸிதஅங்க்ர்யா. * அடியார்களைக் கொண்டுபோய்த் தன்மை பெறுத்தித் தன் தாளிணைக்கீழ்க் கொள்ளுமப்பனை. * தன்னாலே முக்தி பெறுவிக்கப்பட்ட அடியார்களாலே சிரோபூஷணமாக்கிக் கொள்ளப்பட்ட திருவடிகளை யுடையதுமாய்.

8. ஸ்திரத்ருதரமயா. * திருமார்பனை. * சாச்வதமாகத் திருமார்விலே தாங்கப்பட்ட பிராட்டியை யுடையதுமாய்.

9. ச்யாமயா. * சக்கரத்தண்ணல் மணிவண்ணற்கு. * நீலமணிபோலே சாமளமுமாய்.

10. நித்யஸத்யா. * ஆலிலையன்னவசஞ் செய்யும் படியாதுமில்குழவிப் படி. * பிரளயகாலத்திலும் இருப்பதுமான.

[சௌரேः காந்த்யா.] எம்பெருமானது திருமேனி யொளியினால். [ஜிதாநாம்] தோற்கடிக்கப் பட்டவர்களுக்கு. திருமேனியழகில் ஈடுபட்டவர்களுக்கு என்றபடி. [ஸ்வபாவஹேமதநுஜஸ்வாமிதாம் அர்வமம்ஸ்த.] தாம்மாலே கொண்டாடப்பட்ட ஜநங்களுக்கு ஸ்வாமிகளாயிருக்குந் தன்மையை ஆழ்வார் இசைந்தருளினார் என்றபடி. இதனால் ஸ்ரீவைஷ்ணவ தாஸதாஸ தாஸாநுதாஸத்வத்தை இத் திருவாய்மொழியில் ஆழ்வார் அநுஸந்தித்தார் என்றதாயிற்று. ... (௯)

மாப்புல்பிள்ளை திருவடிகளே சரணம்.

ஸ்ரீ:

## திருவாய்மொழி நூற்றந்தாதி.

பயிலுந் திருமால் பதந்தன்னில், நெஞ்சம்
நயலுண்டு நிற்கும் நதியர்க்கு—இயலுடனே
ஆளானார்க் காளாகும் மாற னடியதனில்
ஆளாகார் சன்மம்முடியா.

| | | | |
|---|---|---|---|
| பயிலும் | அடியவர்களோடு கலந்து பழகுந் தன்மையுள்ள | ஆள் ஆகும் | அடிமை செய்யப்பெற்ற |
| திருமால் | எம்பெருமானுடைய | மாறன் | ஆழ்வாருடைய |
| பதம் தன்னில் | திருவடிகளில் | அடி அதனில் | திருவடிகளில் |
| நெஞ்சம் நயலுண்டு நிற்கும் | மனம் பதிந்து நிற்கிற | ஆள் ஆகார் | அடிமை செய்யப் பெறாதவர்களுடைய |
| நதியர்க்கு | பாகவதர்களுக்கு | சன்மம் | பிறவி |
| இயலுடனே ஆள் ஆனார்க்கு | முறையே அடிமையா யிருக்குமவர்களுக்கு | முடியா | (ஒருகாலும்) முடிவடைய மாட்டாது. |

எம்பெருமானது திருவடிகளில் நெஞ்சுபதிந்து அவகாஹித் திருக்கப்பெற்ற பாகவதர்களுக்கு தாஸாநுதாஸராகத் தம்மை அநுஸந்தித்த நம்மாழ்வாருடைய திருவடிகளில் அடிமைபூண்டிருக்கும் பாக்கிய மற்றவர்களுடைய பிறவித்துயர் ஒருகாலும் முடிவு பெறமாட்டாது; அவர்கள் நித்ய ஸம்ஸாரிகளாகவே கிடப்பர்கள் என்றபடி.

“ஆளாகார் சன்மம் முடியா” என்றது ஆளாகுமவர்களுடைய சன்மம் உடனே முடிந்துவிடு மென்ற குறிப்பு. சன்மம் முடிவதாவது முக்திஸாம்ராஜ்யம் பெறுவதாம்.

பயிலுந்திருமால் — ‘பயிலும்’ என்பது திருவுக்கும் விசேடணமாகலாம், திருமாலுக்கும் விசேடணமாகலாம். திருவுக்கு ஆகில், இணைபிரியாதிருக்கின்ற திருவினிடத்தில் மால்கொண்டவன் என்றபடியாம். [நயலுண்டு] ‘நைவல்’ என்னுஞ் சொல் ‘நயல்’ என்று மருவிக்கிடக்கிற தென்றும், பதிந்திருத்தல் என்பது அதன்பொருள் என்றும் ஆன்றோர் கூறுவர். நதீயः என்னும் வடசொல் நதியரென விகாரப்பட்டது. .... .... .... (௨௭)

ஜீயர் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ:

## த்ராமிடோபநிஷத் ஸங்கதி.

[illegible]
[illegible]
[illegible]
[illegible]

(கருத்து.) கீழ்த் திருவாய்மொழியில் அர்ச்சாவதார ஸௌலப்யத்தை யருளிச் செய்து இப்படி ஸுலபமான விஷயத்திலே யீடுபடுவாரில்லையே யென்று வருந்தின ஆழ்வாருடைய வருத்தத்தைத் தீர்த்தருள்வதற்காக எம்பெருமான் பேரருள் கொண்டு சில ஸ்ரீவைஷ்ணவர்களை ஆழ்வார்க்குக் காட்டியருளினான்; அவர்கள் எம்பெருமானுடைய திருக்கல்யாண குணங்களையும் திவ்ய சேஷ்டிதங்களையும் அநுபவிப்பதையே இயற்கையாக வுடையராயிருந்தனர். அப்படிப்பட்ட ஸ்ரீவைஷ்ணவர்களை ஆழ்வார் ஸேவித்து அவர்களையே தமக்குக் குலநாதராகக் கூறி ஏழாந் திருவாய்மொழியில் மிகவும் மகிழ்ந்தார் என்றதாயிற்று.

ஜீயர் திருவடிகளே சரணம்.



ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## திருவாய்மொழி—மூன்றாம்பத்து,
## எட்டாந் திருவாய்மொழி—முடியானே.

உரையவதாரிகை.—கீழ் ஆறாந் திருவாய்மொழியான * செய்யதாமரைக் கண்ணனில் "அன்று தேர்கடவிய பெருமான் கனைகழல் காண்பதென்றுகொல் கண்களே," என்று பகவத் விஷயத்திலே தமக்கு உண்டான விடாயை வெளியிட்ட ஆழ்வார்க்கு எம்பெருமான் ஸ்ரீவைஷ்ணவர்களைக் காட்டிக் கொடுத்து ஒருவாறு ஸமாதானம் பண்ணினபடி கீழ்த் திருவாய்மொழியில் சொல்லிற்று. அதில் ஸ்ரீவைஷ்ணவர்களை அநுபவித்துப் போந்த ஆழ்வார் அவர்களுக்கு விஷயமான பகவத் விஷயத்தின் சீர்மையையும் பாசுரந்தோறும் முன்னடிகளால் அநுபவித்துவந்தாராகையாலே அவ்வநுபவம் பழைய விடாயை அதிகரிக்கச் செய்தது. "என்றுகொல் கண்கள் காண்பதுவே" என்னும்படி கண்களுக்கு மாத்திரம் உண்டாயிருந்த விடாய் மற்றையிந்திரியங்களெல்லாவற்றுக்குமாயிற்று. அதுதானும் ஒரு விலக்ஷணமான படியிலேயாயிற்று. அதாவது என்னென்னில்; ஒரு இந்திரியத்தினுடைய வ்ருத்தியை மற்றோரிந்திரியம் ஆசைப்படும்படியாயும் சேர்ந்து, தம்மிலும் விடாய்த்த கரணங்களும் கரணங்களிலும் விடாய்த்த தாமுமாய் இப்படியொரு விலக்ஷணமான நிலைமையைப் பெறும்படியாயிற்று.

பஹு குடும்பியானவொருவன் க்ஷாமகாலத்திலே தன்பசிக்கு ஆற்றமாட்டாதே மக்கள் பசிக்கு ஆற்றமாட்டாதே அவர்தின் வாயில் சோற்றைத் தான்பறித்து உண்பது தன்வாயில் சோற்றை அவை பறித்துண்பதாய், 'என் பசிக்கு என் செய்வேன்? என் மக்கள் பசிக்கு என் செய்வேன்' என்னுமா போலே தாமும் தம்முடைய கரணக்ராமமுமாக நோவுபட்டுக் கூப்பிடுகிறபடியை இத்திருவாய்மொழி பேசுகின்றது.

இப்பதிகத்தினால் ஆழ்வாருடைய பக்தி பாரம்யலக்ஷணம் என்பது பெறப்படும். ஆசார்ய ஹ்ருதயத்தில் (இரண்டாம் ப்ரகரணத்தில் "அவிஜ்ஞ௭மென்னுமது கரும்பேட்ட ஈரியாவுலர்த்த வென்னப்பட, சித்தம் சித்தாய் அல்லலென்று நிற்க, கரணங்கள் முடியானேயிலவையாக, உடலம் ஆத்ம தர்மங்கொள்ள, காற்றுங் கழியுங் கட்டியழக் கொண்ட பெருங்காதலுக்குப் பத்திமை நூல்வரம்பில்லையே." என்ற சூர்ணிகை இங்கு அநுஸந்திக்க உரியது.

ஆழ்வானுடைய வரதராஜஸ்தவத்தில் "அக்ஷ த்வக்ஷ நிமிஷோஜ்ஜித ஜிஹ்வா விஹ்வலா ஸ்ரவணவக்த்ரவ்யூஹௌ। நாஸிகா ச்வஸி கரீய தமேதி ஹாரவ்யாயாம ஸமஜ்ஞோஸ்மிக்வலா— த்வக் ச த்ருக் ச விபோஸதி ஜிஹ்வா விஹ்வலா ச்ரவணவத் பரஸ்ருத்தௌ, நாஸிகா த்வஸி கரீச! தவேதி ப்ராப்துயாம் கதம் இமாம் ஸ்விதவஸ்தாம்." (24) என்ற ச்லோகமும் இங்கு நினைக்கத் தக்கது.

இங்கே ஈட்டு ஸ்ரீஸூக்திகள் காண்மின்;—"இந்த்ரியங்களும் தனித்தனி சேதந ஸமாதியாலே விடாய்க்கும்படியாயிற்று பகவத் விஷயத்தில் இவர்க்குப் பிறந்த வாஸனை. இதர விஷயங்களில் வாஸனை விடாயைப் பிறப்பியாநின்றால் குணாதிக விஷயத்திற் சொல்ல வேண்டாவிறே.........ஒரு இந்திரியத்தின் வ்ருத்தியை இந்த்ரியாந்தரம் ஆசைப்படக்கூடுமோ வென்னில், சக்ஷுஃச்ரவா: (பாம்பு) கண்ணாலே காண்பதுஞ் செய்து கேட்பதுஞ் செய்யாநின்றதிறே. அதுவுமவன் கொடுத்ததே. அது நமக்குத் தட்டென்ன அவன் தந்தால்? ஒரு தேசவிசேஷத்திலே தன்னை யநுபவிப்பார்க்குக் கொடாநின்றானிறே தம்மையே யொக்க அருள வேண்டுகையாலே. * ஊனுசெய் கண்கள் கொண்டொன்று பேசித் தூமொழியிசைகள் கொண்டொன்று நோக்கியிறே அவன்றன்படி. ஆறு இன்னகை மெடுத்தால் பல வாய்த்தலைகளாலும் போகச் செய்தேயும் கடலிற்புகும் அம்சம் குறைவற்றுப் போமாப்போலே இவருடைய அபிநிவேசாதிசயம் இவருடைய கரணங்களாகிற வாய்த்தலைகளாலே பெருகுகிறபடி." ... (*)

முடியானே மூவுலகும் தொழுதேத்துஞ்சீ
ரடியானே * ஆழ்கடலைக்கடைந்தாய் புள்ளூர்
கொடியானே * கொண்டல்வண்ணா! அண்டத்தும்பரில்
நெடியானே * என்றுகிடக்குமென்னெஞ்சமே. (க)

| | |
|---|---|
| என் நெஞ்சம் | எனது மனமானது; |
| முடியானே | (உபய விபூதி நாயகத்வ லக்ஷணமான) திருவபிஷேகத்தை யுடையவனே! |
| மூ உலகும் தொழுது ஏத்தும் சீர் அடியானே | மூவுலகத்தவர்களும் வணங்கித் துதிக்கப் பெற்ற சிறப்புள்ள திருவடிகளை யுடையவனே! |
| ஆழ் கடலை கடைந்தாய் | (தேவர்களுக்கு அமுத மளிப்பதற்காக) ஆழமான கடலைக் கடைந்தவனே! |
| புள் ஊர் கொடியானே | கருடப் பறவையை ஊர்தியாகவும் கொடியாகவு முடையவனே! |
| கொண்டல் வண்ணா | நீலமேகம் போலும் நிறத்தை யுடையவனே! |
| அண்டத்து உம்பரின் நெடியானே | பரமபதத்திலுள்ள நித்யஸூரிகளுக்கு மஹா புருஷனே! |
| என்று கிடக்கும் | என்று அநுஸந்தித்து உருகிக் கிடக்கின்றது. |

* * * [முடியானே.] தம்முடைய திருவுள்ளம் எம்பெருமானைக் காணவேணுமென்று ஆசைப்பட்டுப் பெறாமையாலே நிர்வேதம் கொண்டு கிடக்கிறபடியை அருளிச் செய்கிறார். "என்று" என்பதை முடியானே...! இத்யாதியான ஒவ்வொரு விளியோடும் கூட்டுக: என் நெஞ்சம் முடியானே யென்று கிடக்கும், மூவுலகும் தொழுதேத்தும் சீரடியானே என்று கிடக்கும் — என்றிங்ஙனே தனித்தனி வாக்கியமாக யோஜிப்பது. எழுலகுக்கும் தனிக்கோல் செலுத்துமவன் என்பதைக் கோட்சொல்லித் தரக்கடவதான திருவபிஷேகமும் தானுமான அழகை யநுபவிக்க நெஞ்சு பாரித்திருக்கின்றமையை முடியானே! என்பதனால் தெரிவிக்கிறார்.

மூவுலகும் தொழுதேத்தும் சீரடியானே! என்று கிடக்கும் என்னெஞ்சம் = "குணமுள்ளவர்களைக் கைப்பற்றுவது, தோஷமுள்ளவர்களைக் கைவிடுவது" என்கிற கொள்கை கொள்ளாமையில்லாதவனாதலால் குணவான்களோடு துஷ்டர்களோடு வாசியற அனைவரும் வந்து பணிந்து ஏத்தப்பெற்ற திருவடிகளை யுடையவன் எம்பெருமான்; அந்த நிலைமையிலே தமது திருவுள்ளம் ஈடுபட்டிருக்கும் படியைக் கூறினராயிற்று. "முடியானே—சீரடியானே" என்ற சேர்த்தியழகு நோக்கத்தக்கது. * பொங்கோதஞ்சூழ்ந்த புவனியும் விண்ணுலகும் அங்காதுஞ் சோராமே ஆள்கின்றமைக்கு லக்ஷணமாகக் கவித்த திருவபிஷேகத்திலே கண்ணைச் செலுத்தினால் உடனே திருவடிகளிலே விழும்படியாயன்றோ இருப்பது.

அங்ஙனம் திருவடிகளிலே விழுமவர்களுக்குத் தன் திருமேனி நோவவும் ஆளுந்தொழில் செய்து உதவிபுரியும் பெருங்குணம் காட்டப்படுகின்றது ஆழ் கடலைக் கடைந்தாய்! என்று. திருவடிகளின் போக்யதையிலேயே நெஞ்சு ஆழங்காற்பட்டுக் கிடக்க வேண்டியது ப்ராப்தமாயிருந்தும் அங்ஙனன்றிக்கே அதைமறந்து ப்ரயோஜநாந்தரத்திலே நெஞ்சு சென்றார்க்கும் உடம்பு நோவக் காரியம் செய்துதரும் பெருங்குணத்திலே தமது திருவுள்ளம் ஈடுபட்டிருக்கும் படியைக் கூறியவாறு.

புள்ளூர் கொடியானே! — திருவடிவாரத்திலே வந்து தொழமாட்டாதவர்கள் இருக்குமிடங்களிலே யெழுந்தருளிக் காட்சி தருவதற்குப் பாங்காகப் பெரிய திருவடியைக் கையாளாக வுடையனாயிருக்கும் பெருமையிலே யீடுபட்டபடி.

"அருளாழிப் புட்கடவீர் அவர்வீதி யொருநாள்" என்று விரும்புவார் விருப்பத்தின்படியே விரைவேற்றுதற்குப் பாங்காக வேதாத்மாவான விஹகேச்வரனை வாஹனமாகவும் த்வஜமாகவும் உடையவனே! என்று என்னெஞ்ச மிடக்குமென்கிறார்.

ஊர்தி என்கிற சொல் ஊர் என்று கடைக் குறைத்தலாய்க் கிடக்கிறதென்னலாம். (ஊர்தி—வாஹனம்.)

கொண்டல்வண்ணா! — பெரிய திருவடியை நினைத்தவாறே அவன்மீது எம்பெருமான் எழுந்தருளியிருக்கும்படியும் நினைவுக்கு வந்து நிற்குமே; பொன்னிறவண்ணனான புள்ளரையன்மீது கார்முகில்வண்ணனான பெருமான் காட்சி தரும்போதைப் பரபாக சோபையிலே நெஞ்சைப் பறிகொடாதிருக்க முடியாதே. "காய்சினப் பறவையூர்ந்து பொன்மலையின் மீமிசைக் கார்முகில்போல்" என்று அநுபவிப்பவரிறே இவ்வாழ்வார்.

அண்டத்தும்பரில் நெடியானே! — பறவையரையன்மீது பொலியும் பெருமானைச் சேவித்தவாறே 'இவனே பரத்பரன்' என்று அறுதியிட வேண்டும்படியன்றோ இருக்கும்; "பறவையேறு பரம்புருடா" என்பரே பெரியாழ்வாரும் இவ்விடத்தில். "[illegible] —கேசித் தத்வவிசேஷ[illegible] [illegible] இத்யேவம் சலசேதஸாம் கரத்ருதம் பாதாரவிந்தம் ஹரே: தத்வம் தர்சயதீவ ஸம்ப்ரதி [illegible] தார்க்ஷ்ய: ச்ருதீநாம் நிதி:" என்று திருக்கடிகை, ஸ்ரீ தொட்டையாசார்ய ஸ்வாமியருளிய ச்லோக ரத்னம் நினைக்கத்தகும். (இதன் கருத்தாவது :— பெரிய திருவடி தனது இரண்டு கைகளிலும் எம்பெருமானது திருவடிகளை ஏந்திக்கொண்டு காட்சி தருவது எங்ஙனே உத்ப்ரேக்ஷிக்கலாம்படியிராநின்றதென்னில்; பரதத்துவம் எது என்பதை நிஷ்கர்ஷிக்கப் புகுந்தவர்களில் சிலர் பரமசிவனையும், சிலர் நான்முகனையும், சிலர் ஸ்ரீமந்நாராயணனையும் பரமபுருடனாகச் சொல்லுகையாலே ஒருவகையான நிஷ்கர்ஷமில்லாமல் தடுமாறவேண்டியிருக்கின்றதே! என்று நிலை தளும்பியிருக்குமவர்கள் திண்ணிய தெளிவு பெறுமாறு வேதஸ்வரூபியான விஹகராஜன் ஸ்ரீமந்நாராயணனொருவனே பரதத்துவம் என்று உணர்த்துவான் போன்று அப்பெருமானது திருவடிகளைத் தன்கைகளில் ஏந்திக்கொண்டிருந்து காட்டுகின்றான் என்னலாம்படி யுள்ளது என்கை.)

என்றுகிடக்கும் என்னெஞ்சமே — எம்பெருமானது படிகளை இங்ஙனம் ஒவ்வொன்றாகச் சொல்லி என்னெஞ்சம் அலமருகின்றது; இதற்கு என் செய்வேன்! என்கிறார். அப்பெருமான்றானே வந்து காட்சி தந்தாலன்றி அவனைக் காணமுடியாதென்று அறிந்திருந்தும் அந்தோ! நெஞ்சு அலைபாயாநின்றதே! என்கிறார். ... ... ... ... ... (க)

நெஞ்சமேநீணகராக இருந்தவென்
தஞ்சனே! * தண்ணிலங்கைக்கு இறையைச்செற்ற
நஞ்சனே! * ஞாலம்கொள்வான் குறளாகிய
வஞ்சனே! * என்னுமெப்போதுமென்வாசகமே. (உ)

என் வாசகம் — எனது வாக்கானது,

நெஞ்சமே நீள் நகர் ஆக இருந்த என் தஞ்சனே — மனத்தையே பெரிய நகரமாகக் கொண்டு அதிலே தங்கியிருக்கின்ற எனது நற்றுணைவனே!

தண் இலங்கைக்கு இறையை செற்ற நஞ்சனே — தண்ணிதான இலங்கா புரிக்குத் தலைவனாயிருந்த இராவணனைத் தொலைக்கும் விஷயத்தில் நஞ்சானவனே!

ஞாலம் கொள்வான் குறள் ஆகிய வஞ்சனே — (மாவலியிடமிருந்து) பூமியைக் கொள்ளும் பொருட்டு வாமன மூர்த்தியான வஞ்சகனே!

என்னும் எப்போதும் — என்று எப்போதும் சொல்லாநின்றது.

* * * [நெஞ்சமே.] வாக்கானது எம்பெருமானை நோக்கி 'ஸ்வாமின்! நெஞ்சு தேவரீரை நினைக்க அதற்கு அருள் செய்தாற்போலே நானும் தேவரீரை நினைக்க அருள் செய்யவேணும்' என்று அலற்றுகின்றது என்கிறார். நெஞ்சுக்கு அருள் செய்தது போல எனக்கும் அருள் செய்ய வேணுமென்று வாக்கு விரும்புவதாகப் பாசுரத்தில் எங்குள்ளது? என்னில்; "நெஞ்சமே நீணகராகவிருந்த" என்பதில் இவ்வர்த்தம் உய்த்துணரத்தக்கது. 'எஞ்ஞான்றும் நெஞ்சிலேயிருந்து போமித்தனையோ? என் பக்கலிலும் ஒருகால் இருக்கலாகாதோ?' என்ற கருத்து இதில் அமைந்துளது. "பிறர் அகத்திற்கே போகின்றவரே!" என்று ஒருவனைக் குறித்துச் சொன்னால் "எம் அகத்திற்கும் ஒருநாள் வந்தாலாகாதோ" என்கிற கருத்து கிடைப்பதுபோல. 'நெஞ்சமே' என்ற ஏகாரத்தினால்—வேறு இந்திரியங்களிலும், பரமபதம் திருப்பாற்கடல் முதலியவற்றிலும் எம்பெருமான் விருப்பமற்றிருக்குந்தன்மை பெறுவிக்கப்படும். "கல்லும் கனைகடலும் வைகுந்தவானாடும், புல்லென்றொழிந்தன கொல் ஏபாவம்—வெல்ல நெடியான் நிறங்கரியான் உள்புகுந்து நீங்கான், அடியேனதுள்ளத்தகம்." என்ற பெரிய திருவந்தாதிப்பாசுரம் இங்கு அநுஸந்திக்க வுரியது.

என் தஞ்சனே! — இப்பாசுரம் வாக்குறுப்பு சொல்லுவதேயானாலும் நெஞ்சின் உதவியில்லாமல் அது தனியே சொல்ல முடியாததாதலால் நெஞ்சும் இதில் அந்வயித்திருக்கின்றதென்றே கொள்ளவேணும்; அந்த நெஞ்சின் வாய்மொழியாலே என் தஞ்சனே! என்கிறது; அதாவது, தன்னையே நீணகராகக் கொண்டு இருக்கப் பெற்ற உபகாரத்தை நினைந்து சொல்லுகிறபடி—என்று சில

சொல்லுவர்கள்; அதில் ஸ்வாரஸ்யமில்லை; என்நஞ்சனே! என்றவிடத்தில் என் என்பது வாக்கையே குறிப்பிடும்; அவனையே தான் கூப்பிடும்படி பண்ணின உபகாரத்தை நினைத்துத் நஞ்சனே! என்கிறது. இங்கே ஈடு:—“இப்படி கூப்பிடப் பண்ணின உபகாரகத்வத்தை நினைத்துச் சொல்லுகிறார்; ஸம்ஸாரிகளில் இப்படி கூப்பிடுகிறாரில்லையிறே.” என்பதாம்.

இங்கே “அழுநீர் துளும்பக் கடலும் மலையும் விசும்பும் துழாய் திருமாலென்றும் எங்கே காண்கேனென்றும் இவரலமாப்பு அவர்களுக்குப் புத்ரவியோகத்திலே” என்ற ஆசார்யஹ்ருதயஸூக்தி அநுஸந்தேயம். (இதன் கருத்தாவது—எம்பெருமானைப் பிரிந்த வருத்தத்தினால் கண்ணும் கண்ணீருமாய்க் கடலோடு மலையோடு ஆகாசத்தோடு வாசியற எங்குந்தேடி செஞ்சு கலங்கி ‘திருமாலே!’ என்று கூப்பிட்டு ‘எங்கே காண்கேன் ஈன்துழாயம்மான்தன்னை’ என்று இவ்விதமாக ஆழ்வார்படும் ஆற்றாமையெல்லாம் ரிஷிகளுக்குப் புத்ரவியோகத்திலேயாயிருக்கும்: வஸிஷ்ட பகவான் புத்திரனிறந்த வருத்தத்தினால் மரணத்தை விரும்பி மலையிலேறி விழுவது நெருப்பிலே குதிப்பது, கழுத்தில் கல்லைக் கட்டிக்கொண்டு கடலிலே விழுவது ஆகவிப்படியெல்லாம் தமோதிநரென்பதும், வேதவ்யாஸ பகவான் புத்திரவியோகம் பொறுக்கமாட்டாமல் ‘புத்திரனே!’ என்று வாய்விட்டுக் கூப்பிட்டு அழுதுகொண்டு காணப் பெறுமையால் அலமந்து திரிந்தாரென்பதும் புராணப்ரஸித்தம்.)

தண்ணிலங்கைக்கு இறையைச் செற்ற நஞ்சனே != தண்மையாவது— குளிர்ச்சியும் நிஹீனத்தன்மையும் அறிவில்லாமையுமாம். இப்பொருள்களாவும் இலங்கைக்குச் சேரும். குளிர்ச்சியைச் சொன்னது போக்யதையைச் சொன்னவாறு; இலங்காபுரியின் போக்யதையை மஹாவிரக்தனான திருவடியே கொண்டாடினான்; “ஸ்வர்க்கோऽயம் தேவலோகோऽயம் இந்த்ரஸ்யேயம் புரீ பவேத், ஸித்திர் வேயம் பரா ஹி ஸ்யாத் இத்யமந்யத மாருதி:” என்றது காண்க. ஸ்வர்க்கோயம் தேவலோகோயம் இந்த்ரஸ்யேயம் புரீ பவேத், ஸித்திர் வேயம் பரா ஹி ஸ்யாத் இத்யமந்யத மாருதி:” என்றது காண்க.

வாக்கானது தண்ணிலங்கைக்கிறையைச் செற்றநஞ்சனே! என்று சொல்லுவதன் கருத்து யாதெனில்; மஹாபாபியான இராவணனையும் நோக்கி தேவரீர் ஹிதமான பல வார்த்தைகள் அருளிச் செய்ததுண்டே; அப்படி என்னையும் நோக்கி ஏதேனுஞ் சில ஸ்ரீஸூக்திகள் அருளலாகாதோ? என்ற குறிப்பாம்.

ஞாலங்கொள்வான் குறளாகிய வஞ்சனே != மாவலியாலே கொள்ளை கொள்ளப்பட்டிருந்த பூமியை மீட்டுக்கொள்ளும் உபாயம் அறியுமவனே!. இங்கே ஈட்டு ஸ்ரீஸூக்தி:—“ராவணனைப்போலே தலையை அறுக்கிட்டது ஔதார்ய மென்பதொரு குணலேசமுண்டாகையாலே, இவன் கையிலே ஒரு தர்மபாலமுண்டாயிருந்ததென்று இவனை யழியாதே ஸர்வாதிகனான தன்னை அர்த்தியாக்கி இந்திரனுக்கு ராஜ்யத்தை வாங்கிக் கொடுத்தவிராகு.” என்பதாம். இங்கே “தைத்யானாம் தாநவேந்த்ராணாம் ஸர்வாஸாமிதி ஸேவிதுமஹம் வாமதோயீ துதோ வித்தி தைத்யேந்த்ராணாம் தாநவேந்த்ரஸ்ய சாஸிதுர்முநே மயாஸ் வாமகோர்த்தி வ

த்வமாவிஶ:" (ஸ்ரீரங்கராஜஸ்தவம்) என்ற பட்டர் ஸ்ரீஸூக்தி அநுஸந்தேயம்: ஸ்ரீராமக்ருஷ்ணாதி அவதாரங்களில் ஆச்ரிதர்களுடைய இஷ்ட ப்ராபணத்திற்கும் அநிஷ்ட நிவாரணத்திற்கும் எம்பெருமான் யாசகவ்ருத்தியை அவலம்பிக்கவில்லையே; இந்த அவதாரத்தில் மாத்திரம் அதை ஏன் அவலம்பித்தார்? என்கிற சங்கைக்குப் பரிஹாரமாக இஃது உள்ளது: மஹாபலியானவன் மற்ற அரக்கர்களைப் போலன்றிக்கே ஔதார்யமென்று ஒரு சிறந்த குணமுடையவனாயிருந்ததனால் அந்தக் குணத்தையும், இந்திரன் பக்கலிலுள்ள யாசகத்வத்தையும் குறிக்கொண்டு அவ்விரண்டையும் ஸபலமாக்குவதற்காக தேவரீர்தாமே யாசகராய்ச் சென்றீர் என்றவாறு.

வாக்கானது ஞாலங்கோள்வான்குறளாகிய வஞ்சனே! என்று சொல்லுதல் கருத்து யாதெனில்; மூவடிவேண்டி மாவலியிடஞ் சென்றபோது தேவரீர் அவ்வசுரனை நோக்கி அழகிய பேச்சுக்கள் பேசிற்றுமே; அங்ஙனே என்னோடும் சிறிது பேசலாகாதோ என்பதாம்.

என்றும் எப்போதும் என் வாசகமே = எனது வாக்கின் வ்ருத்தி எப்போதும் இதுவேயாயிற்று; வாமநாவதாரத்தின் வஞ்சன சாதுரியத்தை நினைத்த பின்பு ராமாவதாரத்தின் செவ்வையிலும் செல்லுகிறதில்லை, ... (௭.)

வாசகமேயேத்தவருள்செய்யும் வானவர்தம்
நாயகனே! * நாளிளந்திங்களைக் கோள்விடுத்து *
வேயகம்பால்வெண்ணெய்தொடுவுண்ட ஆனாயர்
தாயவனே! * என்றுதடவுமென்கைகளே. (௮.)

| பதம் | பொருள் |
| --- | --- |
| என் கைகள் | எனது கைகளானவை, |
| வாசகமே ஏத்த அருள் செய்யும் வானவர் தம் நாயகனே | வாக்கு மாத்திரமே துதிக்கும்படியாக அதற்கு அருள் செய்கின்ற தேவாதி தேவனே! |
| நாள் இள திங்களை கோள்விடுத்து | புதிய இளைய உதய சந்திரன் போலப் பற்களின் ஒளியைப் பரவவிட்டு |
| வேய் அகம் பால் வெண்ணெய் தொடு உண்ட | மூங்கிலால் செய்த வீடுகளில் வெண்ணெயைக் களவு செய்து அமுது செய்த |
| ஆன் ஆயர் தாயவனே | கோபால க்ருஷ்ணனே! |
| என்று தடவும் | என்று தடவுகின்றன. |

* * * [வாசகமேயேத்த.] தமது கைகளுக்கு வாக்கின் வ்ருத்தியிலும் தம் வ்ருத்தியிலுமுண்டான சாபலத்தை அருளிச் செய்கிறார். "வாசகமே யேத்த அருள் செய்யும்" என்றவிடத்து வாசகமே என்ற ஏகாரம்—வாக்கு மாத்திரமே தேவரீரை ஏத்தும்படியிருக்க வேணுமோ? (கைகளாகிய) நாங்களும் ஏத்தும்படி அருளலாகாதோ? என்ற கருத்தைக் காட்டும். 'வானவர்தம் நாயகனே!' என்ற அடுத்த விளியின் சேர்த்தியையும் நோக்கி நம்பிள்ளை அழகாக அருளிச் செய்கிறபடி பாரீர்—"நித்யஸூரிகள் ஏத்தவிருக்கிற உனக்கு வாக்கு ஏதேனும் பச்சையிட்டதுண்டோ?" என்று. ஆழ்வாருடைய திருவாக்கு ஏத்துகிறப் போலவும் நித்யஸூரிகளின் வாக்கு ஏத்துகிறப்போலவும் நாங்களும் ஏத்தும்படியருள் செய்ய வேணுமென்று கைகளின் ப்ரார்த்தனை போலும்.

நாளிளந்திங்களைக் கோள்விடுத்து — இதற்கு ஆபாத ப்ரதீதியில் ஒரு பொருள் தோன்றும்; அதாவது, சந்திரனுக்கு நேர்ந்த துன்பத்தைப் போக்கின வரலாறு ஒன்று உண்டாதலால் அது இங்கு அநுஸந்திக்கப்படுகின்றதாக. (சந்திரன் தக்ஷமுனிவனது புத்திரிகளாகிய அசுவினி முதலிய இருபத்தேழு நக்ஷத்ரங்களையும் மணஞ் செய்து கொண்டு அவர்களுள் ரோஹிணி யென்பவளிடத்து மிகவுங் காதல் கூர்ந்து அவளுடனே எப்பொழுதுங்கூடி வாழ்ந்திருக்க மற்றை மகளிரின் வருத்தத்தை நோக்கிச் சினங்கொண்ட அம்முனிவன் 'க்ஷய மடைவாயாக' என்று சபிக்க, அச்சாபத்தால் சந்திரன் பதினாறுகலை வடிவாகவுள்ள தனது உடல் நாளடைவில் குறைபவனாகி அங்ஙனம் தனக்கு விரைவில் நேரக்கடவதான அழிவைப் போக்கிக் கொள்ளுதற்கு வேறுபாயமொன்றுங் காணாமல் சிந்தித்து ஸ்ரீரங்கக்ஷேத்ரத்தை யடைந்து அங்குள்ள நவதீர்த்தங்களில் ஒன்றும் கோயிலின் வடபுறத்தே யுள்ளதுமான புண்ய தீர்த்தத்தில் நீராடி அதன்கரையில் ஒரு புன்னைமரத்தின் கீழ் இருந்து ஸ்ரீரங்கநாதனைக் குறித்துத் தவஞ்செய்ய, அந் நம்பெருமான் அவனுக்குப் ப்ரத்யக்ஷமாகி, மீண்டும் கலைகள் நாள்தோறும் வளர்ந்து வரும்படி அநுக்ரஹித்தனன்: அத்திவ்ய தீர்த்தம் இதனால் சந்திரபுஷ்கரிணி யென்று பெயர் பெற்றது. "தேம்பலிளந்திங்கள் சிறை விடுத்து" என்றார் திருமங்கையாழ்வாரும். சீவக சிந்தாமணியிலும் "கோள்வாய் மதியம் நெடியான் விடுத்தாங்கு" என்று திருமால் சந்திரனுக்குக் கோள் விடுவித்ததாகக் கூறுதல் காண்க.) இந்தப் பொருள் இங்கு ஆபாதப்ரதீதியில் தோன்றக்கூடுமாயினும், இங்கு இதுவன்று பொருள். "அபிநவ பூர்ண சந்த்ரகிரணம் போலே திருமுத்தினொளி புறப்படும்படி திருப்பவளத்தைத் திறந்து" என்பது ஆறாயிரப்படி யருளிச்செயல். இப் பொருளையே ஸகல ஆசாரியர்களும் அருளிச் செய்துள்ளார்கள். இதுவே ரஸவத்தரம். இங்கு உபமேயமான வஸ்து சொல்லப்படாதிருப்பினும் திங்கள் என்னும் உபமாந வாசகம் திருமுத்தாகிற உபமேயத்தையே லக்ஷணையினால் தெரிவிக்கும். "தாவி வையங் கொண்ட தடந்தாமரைகட்கே" என்றவிடமும் காண்க.

நாளிளந்திங்களைக் கோள்விடுத்தது எப்பொழுது என்னில், வேயகப்பால் வெண்ணெய் தொடுவுண்ட காலத்தில் என்க. அதாவது—கண்ணபிரான் "படலடைத்த சிறுகுரம்பை நுழைந்து புக்குப் பசுவெண்ணெய் களவுகாணப் புகுமிடத்தில் தன்நிறத்தின் இருட்சியாலும் அவ்விடத்தின் இருட்சியாலும் வெண்ணெயிருக்குமிடம் தெரியாமல் தடவாநிற்கையில் யாத்ருச்சிகமாகக் கையிலே வெண்ணெய்த்தாழிகள் தட்டின உவப்பினால் பல்லைத்திறந்து சிரிக்க நேரும்; பூர்ணசந்திரனுடைய கிரணம்போலே திருமுத்துக்களின் ஒளி புறப்படவே அந்த வொளியையே கைவிளக்காகக் கொண்டு அமுது செய்வன் என்றுணர்க. "உறியார்ந்த நறுவெண்ணெயொளியால் சென்று அங்குண்டானை" என்ற பெரிய திருமொழியிலும் 'ஒளியால்' என்றதற்கு இங்ஙனமே பொருளுரைக்கப்பட்டது காண்க. கண்ணபிரானுடைய திருமுத்துக்கள் நாளிளந்திங்களை யொத்திருக்குமென்பது "செக்கரிடை நுனிக்கொம்பில் தோன்றும் சிறுபிறைமுளைப்போல, நக்க செந்துவர்வாய்த் திண்ணைமீதே நளிர் வெண்பல் முளையிலக" என்ற பெரி

யாழ்வார் திருமொழியினுலும் அறியத்தக்கது. கோள் வீத்து—தேஜஸ்ஸைப் புறப்படவிட்டு என்றபடி.

தோடுண்ட = களவினுல் உண்ட: "மாயை தோடு பட்டிமை வஞ்சனையாகும்" [பிங்கலந்தை—பண்பிற் செயலிற் பகுதி வகை—135.] என்றது காண்க.

என்றுதடவும் என்கைகள் = ஆயர் வெண்ணெய் களவு செய்யப்புகுந்த இடத்தே வழியைக்கட்டிப் பிடித்துக்கொள்ளத் தேடுகின்றன என்கைகள் என்று ஸமோக்தியாகப் பொருள் கூறுவர். (௩)

கைகளாலாரத் தொழுதுதொழுதுன்னை *
வைகலும்மாத்திரைப்போதும் ஓர்வீடின்றி *
பைகொள்பாம்பேறி உறைபரனே! * உன்னை
மெய்கொள்ளக்காண விரும்புமென்கண்களே. (௪)

| | | | |
|---|---|---|---|
| என் கண்கள் | எனது கண்களானவை, | வைகலும் | நாள்தோறும் |
| பை கொள் பாம்பு ஏறி உறை பரனே | படங்கொண்ட திருவனந்தாழ்வான் மீதேறி உறையும் பரமபுருஷனே! | மாத்திரை போதும் ஓர் வீடு இன்றி | க்ஷணகாலமும் இடைவிடாமல் |
| உன்னை | தேவரீரை | உன்னை மெய் கொள்ள காண | உன்னை மெய்யாகவே காண்பதற்கு |
| கைகளால் ஆர தொழுது தொழுது | கையாரப் பரிபூர்ண நமஸ்காரஞ் செய்து | விரும்பும் | விரும்புகின்றன. |

* * * [கைகளாலார.] கண்களானவை 'கைகளுடைய பரிமாற்றமும் வேணும், தம் வ்ருத்தியான காட்சியும் வேணும்' என்னுகின்றன வென்கிருர். "கண்கள் கைகளாலாரத் தொழுது காணவிரும்பும்" என்று மூலமுள்ளது. கைகளால் தொழவேணுமென்பதைக் கண்கள் ஆசைப்படுவது எங்ஙனே என்று விமர்சிக்க வேணும்; விமர்சித்தால், கைகளின் வ்ருத்தியையும் கண்கள் ஆசைப்பட்டமை விளங்கும்.

"மாத்திரைப்போதும் ஓர் வீடின்றிவைகலும்" என்பது மத்யமதீபந்யாயத்தாலே முதலடியினும் ஈற்றடியினும் அந்வயிக்கும்; அநவரதமும் கைகளால் தொழவேணுமென்றும், அநவரதமும் காணவேணுமென்றும் விரும்புகின்றவாறு.

"கைகளாலாரத் தொழுது தொழுது" என்றன்னதனுல் ஸக்ருத்ப்ரணாமஸம்ப்ரதாயம் பொருத்தமற்றது என்று சிலர் சொல்லப்பார்த்தார்கள். இங்கு நாம் ஸாரமாகச்சிலவிஷயங்கள் தெரிவிக்க விரும்புகிறோம். ஸம்ப்ரதாயங்களில், ஒவ்வொரு ப்ரமாணத்தில் நோக்காக ஒவ்வொரு ஆசாரமும் வெவ்வேறாகவே நிகழ்ந்து வருகின்றது எந்த ஆசாரத்தையும் பழிக்க நாம் விரும்புகின்றிலோம். * ஹம்ஸவத்ப்ரவ்ருத்தி விரோதிஷுப்ரவ்ருத்தி நிவ்ருத்தியிலே உத்கடமான ஊற்றமுடைய வொருவகுப்பும், நிவ்ருத்தியிலன்றிக்கே ப்ரவ்ருத்திகளிலேயே உத்கடமான ஊற்றமுடைய மற்றொரு வகுப்பும் எம்பெருமானுடைய தர்சனத்திலேயுள்ளது. பக்தியில் தலைநின்ற ஆழ்வார் போல்வாருடைய திவ்ய வாக்குகளில்

ப்ரஸ்யத்திலே அந்த வசனங்களைக் கைகொள்ளவியலாகக் காணலாம். “[illegible]—ஏக: க்ருஷ்ணநமஸ்காரோ முக்தி தீரஸ்ய தேசிக:.” இதுபோன்ற காலக்ஷேப வசனங்களை ஸ்ரீதேசிகன் உதாஹரித்துக் காட்டிவிட்டு, இப்படியிருக்க இங்கு நமோநம: நமோநம: என்று பலகால் அருளிச் செய்வானேன்? என்று சங்கித்துக் கொண்டு தாமே அழகாக ஸமாதானமும் அருளியுள்ளார். அதாவது இரண்டு வகையாக ஸமாதானம் திருவுள்ளம்பற்றுகிறார். அதிமாத்ரமான பக்தியில் தலைநின்று சாதிக்கிறார் என்பது முதல் ஸமாதானம். “அத்யந்தபக்தியுக்தாநாம் ந சாஸ்த்ரம் நைவ ச க்ரம:” என்றதில் நோக்காக இந்த ஸமாதானம் அவதரித்தது. இரண்டாவது ஸமாதானமாவது—‘[illegible]—ப்ரசம்ஸாயாம் ப்ரதிஜ்ஞாயாம் ப்ரலாபே தர்ஜநேபி ச, பயே ச விஜயே சைவ பௌந:புந்யம் அலங்க்ருதி:” என்கிற ஒரு காரிகையை எடுத்துக் காட்டி முடித்தது.

இந்த காரிகையின் பொருளை அறிஞர்கள் ஆராய வேண்டும். இதன் பொருள் யாதெனில்; ஸ்தோத்ரம் செய்யும்போதும் ப்ரதிஜ்ஞை செய்யும் போதும் அழும்போதும் வெருட்டும்போதும் அச்சந்தோற்றச் சொல்லும் போதும் வெற்றிதோற்றச் சொல்லும்போதும் ஒரு சொல்லையே அடுத்தடுத்துச் சொல்வதானது அலங்காரமாகும் என்பதே இதன் பொருள். ஒருமுறை நமஸ்கரிப்பது கூடாதென்கிற திருவுள்ளம் ஸ்ரீதேசிகனுக்கு இருந்திருக்குமாயின் இந்த காரிகையை இங்கெடுத்துக் காட்ட ப்ரஸக்தியே யிராது. பின்னை எங்ஙனே சொல்லியிருக்கவேணுமென்னில், “சாஸ்த்ரங்கள் ஸக்ருத்ப்ரணாமத்தை நிஷேதித்து அநேகவார ப்ரணாமத்தை விதிக்கையாலே அதற்கிணங்க ‘நமோநம: நமோநம:’ என்கிறார் என்று தேசிகன் அருளிச் செய்திருக்கவேண்டும். அப்படி அருளிச் செய்யாததோடு அந்த அபிப்ராயத்திற்கு நேர் எதிராகவும் அருளிச் செய்துள்ளார். ஒருவன் அழுகிறகாலம் அஞ்சுகிறகாலம் முதலானவற்றில் ஒன்றையே திருப்பித்திருப்பிச் சொல்வதை நாம் காண்கிறோம். ‘பாம்பு பாம்பு பாம்பு’ என்று பலமுறை சொன்னாலும் உள்ளது ஒரு பாம்பேயல்லது பல பாம்புகள் வந்துவிடமாட்டா; அங்குப் பலமுறை சொல்வதோடு இங்கு நமோ நம: என்று பலமுறை சொல்வதோடு வாசியில்லை யென்பதை தேசிகன் ஸ்பஷ்டமாகக் காட்டியருளினர்.

இவையெல்லாம் ஒருபுறமிருக்க, இங்கு முக்கியமாகக் குறிக்கொள்ள வேண்டியதொன்றே. “என்பிழைத்தாள் திருவடியின் தகவினுக்கு” என்றவிடத்து ஈட்டில் “தேவரீர்க்ருபைக்குத் தண்ணீர்த்துரும்பாக ஏதேனும் ப்ரதக்ஷிண நமஸ்காராதிகள் பண்ணிற்றுண்டோ?” என்று நம்பிள்ளை யருளிச் செய்ததை யன்றி நோக்கத்தக்கது. ஸ்வப்ரவ்ருத்திகளை அதிகப்படுத்திக் கொள்வதானது தாராளமாக ப்ரஸரிக்கக்கூடிய பகவத்க்ருபைக்கு ப்ரதிபந்தகமாகுமோ என்கிற சங்கை எம்பெருமானுடைய படியை நன்குணர்ந்த ஆசாரியர்கட்கு உண்டு. “பிறர்களுக்கு அரிய வித்தகன்” என்றவிடத்து ஈட்டில் “நம்முடையவர்கள்

எம்பெருமானையே உபாயமாகப் பற்றிருக்க, அல்லாதார் அசேதநக்ரியாகலாபங்களைப் பற்றுகிறப்போலேயிறே துர்யோதனன்கிலே" என்றருளிச் செய்கிறார். இவற்றை யும், "காம்பறத் தலை சிரைத்து உன்கடைத் தலையிருந்து வாழுஞ் சோம்பரை யுகத்திபோலும் சூழ்புனலரங்கத்தானே!" என்ற தொண்டரடிப் பொடியாழ்வார் பாசுரம் முதலியவற்றையும் ஊன்றி நோக்குமிடத்து, "ஸாத்யமான வரையில் ஸ்வப்ரவ்ருத்தி பாஹுள்யத்தைக் குறைத்துக்கொள்வது நலம்" என்று ஆசாரி யர்கள் திருவுள்ளம் பற்றினார்களென்பது விளங்குகின்றது.

நம்முடைய ஆர்த்தியின்கனத்தைக் கண்டாலல்லது எம்பெருமானுக்குக் கருணைபிறவாதென்றும், ஸ்வப்ரவ்ருத்தி பாஹுள்யத்தை விட்டே ஆர்த்தியின் கனத்தைக்காட்ட வேணுமென்றும் கருதிய மஹான்கள் அக்கருத்துக் கிணங்க நடந்து கொள்ளுகிறார்கள். உபயஸம்ப்ரதாயங்களிலுமுள்ள அநுஷ்டானங்களை ஆராயுமிடத்து, ஒரு சாரார் பரஸ்வரூபத்திலே நோக்காகவும், மற்றொரு சாரார் ஸ்வஸ்வரூபத்திலே நோக்காகவும் நடந்துகொள்வதாகத் தேறுகின்றது.

"இத்தலையைப்பார்த்தால் கலக்கச்செய்ய வேண்டியிராநின்றது; அத்தலை யைப்பார்த்தால் செய்வதுகளையும் மிகையாயிரா நின்றது" என்று பட்டருளிச் செய்வாதலால், இத்தலையைநோக்கி ஒருஸம்ப்ரதாயமும் அத்தலையைநோக்கி ஒரு ஸம்ப்ரதாயமும் நடந்துவருவதாகக் கொள்வதே அழகியது. ஆகவே பரஸ் பரம் இகழ்ச்சியின்றியே யிருக்க ப்ராப்தம்.

தொழுது தொழுது என்ற இவ்விடத்தில் ஈடு — "ப்ரயோஜநாந்தரத்துக்கா கத் தொழில் ப்ரயோஜநத்தளவிலே தீரும்; ஸாதநபுத்த்யா தொழில் ஸாத்யம் ஸித்தித்தளவிலே மீளும். அங்ஙனன்றிக்கே இதுவே யாத்ரையாய்" என்பதாம்.

மெய்கொள்ளக்காண என்றவிடத்து ஈட்டில் "பத்தும்பத்தாக மெய்யேகா ண" என்கிற ஸ்ரீஸூக்தி காண்கிறது. பத்தும் பத்தாக என்றது 'உள்ளது உள்ளப டியாக' என்றபடி. அச்சொற்றொடர்க்கு இப்பொருள் எங்ஙனே கிடைக்குமென் னில், கேண்மின்; அருளிச்செயல்களில், பாணாஸுரனுடைய தோள்களைத் துணி த்தவரலாறும் அநுஸந்திக்கப்படுகிறது; இராவணன் தலைகளையறுத்த வரலாறும் அநுஸந்திக்கப்படுகிறது; முந்தினதைப் பேசுமிடங்களில் "வாணனாயிரந் தோள் து ணித்த" என்றும் "வாணனக்கரந்தூறு தோள்களைத்துணித்த" என்றும் அருளிச் செய்யக்காண்கிறோம். பிந்தினதைப் பேசுமிடங்களில் "கதிர்நீள் முடிபத்து மறுத்து" என்றும் "தென்னிலங்கைக்கிறைவன் சிரங்கள் ஐயிரண்டும்" என்றும் அருளிச்செய்யக் காண்கிறோம். முந்தினதில் ஆயிரந்தோள் துணித்ததாகச் சொன்னதில் உண்மையில் ஆயிரமில்லை; பரமசிவனது ப்ரார்த்தனையினால் சில தோள்களைத்துணியாதே விட்டிட்டதாகப் புராணங்கள் கூறுதலால் இங்கு ஆயிர மென்றது சிறிது குறைந்த தொகையையே காட்டும். இராவணன் தலைகள் பத்து மறுத்தானென்றதில் இங்ஙனே குறை கொள்ளவேண்டியதில்லை; பத்தும் பத் தாகவே கொள்ளத்தகும். இதிலிருந்தே "பத்தும் பத்தாக" என்ற வழக்குச்சொல் ஏற்பட்டது. 'உள்ளது உள்ளபடியேயாக' என்கிற கருத்துத் தேறுகின்றது. இந்த நுட்பமறியாத சிலர் (பழைய ஸ்ரீகோசங்களில்) "பற்றும் பற்றாக" என்று மாறுபாடாகப் பதிப்பித்துள்ளார்கள்; இது திருத்திக் கொள்ளத்தக்கது. ... (௪)

கண்களால்காண வருங்கொலென்றாசையால் *
மண்கொண்டவாமனன் ஏறமகிழ்ந்துசெல் *
பண்கொண்டபுள்ளின் சிறகொலிபாவித்து *
திண்கொள்ளவோர்க்கும் கிடந்தென்செவிகளே. (௩)

| | |
|---|---|
| என் செவிகள் | எனது காதுகளானவை, |
| கண்களால் காண வரும் கொல் என்று ஆசையால் | கண்களால் காணும்படி வருவனோ என்று ஆசையினால், |
| மண் கொண்ட வாமனன் ஏற | (மாவலியிடம்) பூமியைக் கவர்ந்த வாமனன் (தன்மீது) ஏறுதலால் |
| மகிழ்ந்து செல் | மகிழ்ச்சியோடு செல்கின்ற |
| புள்ளின் | கருடனுடைய |
| பண் கொண்ட | ஸாம, வேத, ஸ்வர ப்ரகாரமான |
| சிறகு ஒலி | சிறகின் தொனியை |
| பாவித்து | நினைத்து |
| கிடந்து | பரவசமாய்க் கிடந்து |
| திண் கொள்ள ஓர்க்கும் | உறுதியாக கிரஹிக்கின்றன. |

• • • [கண்களாற்காண.] காணவும் வேணும், கேட்கவும் வேணுமென்று செவிகள் ஆசைப்படுகின்றன வென்கிறார். இப்பாசுரத்தில் செவிகள் எழுவாயா தலால் முதலடியிற் கூறப்பட்டுள்ள ஆசை செவிகளுக்குண்டான ஆசையாகவே கொள்ளத்தக்கது. செவிகளானவை தமக்குக் கண்கள் முளைக்கவேணுமென் றும் அவற்றாலே காணவேணுமென்றும் ஆசைப்படுகிறபடி. அன்றியே, தாமே கண்களாக மாறி ஆசைப்படுகிறபடியுமாம். கண்ணாரக் கண்டுகளிக்க எழுந் தருள்வனோ வென்கிற ஆசையாலே, செவிகளானவை, எம்பெருமான் பெரிய திரு வடியின்மீது ஏறிக்கொண்டு எழுந்தருள்வதாகவும், எம்பெருமானைச் சுமந்து கொண்டு பெரியதிருவடி மகிழ்ச்சியாலே சிறகுகளையடித்துக்கொண்டு விரைந்து ஓடி வருவதாகவும் பாவனை கொண்டு அந்தச் சிறகொலியைக் கேட்க அதிலேயே ஊற்றமுற்றிருக்கின்றன வென்கிறார்.

மண்கொண்ட வாமனன் ஏற = வாமநமூர்த்தியாவது த்ரிவிக்ரமமூர்த்தி யாவது பெரியதிருவடியின் மீது ஏறியெழுந்தருளினதாக எங்கும் ப்ரஸித்தி யில்லை; அப்படியிருக்க "வாமனன் ஏற" என்று இங்கு அருளிச்செய்தது என்? என்னில்? வாமநன் என்கிற வ்யக்தியில் நோக்காக அருளிச்செய்வதன்று; அவனுடைய செயலில் மாத்திரமே இங்கு நோக்கு; தன்னுடைமையைப் பெறு தற்குத்தான் இரப்பாளனுப் செல்லுதல் என்னும் குணவிசேஷத்தையுடைய னை எம்பெருமான் என்றபடி. 'பெரிய திருவடியின் மீது ஏறிக்கொண்டு எம் பெருமான் ஆங்காங்கு யாத்திரை செல்வதானது தன்னுடைமையைத் தான் இரந்து பெறுதற்கு' என்று ஆழ்வாருடைய நினைவு போலும்.

செல் என்பது புள்ளுக்கு அடைமொழி; செல்கின்ற புள் என்றபடி.

பண்கொண்ட புள் = வாஹநபரிஷ்காரங்களையுடைய புள் என்றும், ப்ருஹத், ரதந்தரம் முதலிய ஸாமங்களை வடிவாகக் கொண்ட புள் என்றும் இருவகையாகப் பொருள்படும், இரண்டாவது பொருள் மிகச்சிறக்கும். "வேதாத்மா விஹகேஶ்வர:" என்றார் ஆளவந்தார். "ஸாமவேதஶிரோமணி..." இத்யாதி வேத

வாக்கியத்தினால் கருத்மானுடைய வேதமயத்வம் என்று உணரத்தக்கது. பின்னைப் பெருமாளையங்காரும் திருவரங்கத்து மாலையில் (88) "சிரஞ் சேதனன்விழி தேகஞ் சிறைபின் சினைபதங்கள், தாரதோள்களுரு வடிவம் பெயரேசர் சாமமுமாம், பார்த்தே தமதடியார்க்குள்ள பாவங்கள் பாற்றியருள், சார்ந்தேயளிக்கு மரங்கர் மூர்த்திச் சுவணனுக்கே." என்ற செய்யுளினால் விவரித்தனர்.

சிறகு ஒலி பாவித்து = ஆழ்வார்க்கு எம்பெருமான் மீதும் ஞாபகமில்லை, அவனைத் தாங்குகிற பெரியதிருவடியின்மீதும் ஞாபகமில்லை, அப்பெரியதிருவடியின் சிறகின் மீதும் ஞாபகமில்லை; சிறகின் ஒலி யொன்றிலேயே ஞாபகம் செல்லாநின்றது போலும். இங்கு "பூங்கொள் திருமுகத்து மடுத்தூதிய சங்கொலியும், சார்ங்கவில் நாணொலியும் தலைப்பெய்வது எஞ்ஞான்று கொலோ" என்ற நாச்சியார் திருமொழிப்பாசுரம் அநுஸந்திக்கவுரியது. ருக்மிணிப்பிராட்டிக்கு ஒரு ஒலியிலே ஞாபகம்; ஸீதாபிராட்டிக்கு ஒரு ஒலியிலே ஞாபகம், பராங்குசநாயகிக்கு ஒரு ஒலியிலே ஞாபகம் என்று அஸ்மதாசார்யர் ஸாக்ஷாத்காரமாக உபந்யஸித்தருளக் கேட்டிருக்கை. கண்ணபிரானையன்றி மற்று எவனையும் கனவிலும் கருதாதிருந்த ருக்மிணிப்பிராட்டிக்கு சிசுபாலனோடு விவாஹம் நடப்பதாகக் கோடித்து விந்தமாயிருந்த ஸமயத்தில் கண்ணபிரானது வரவை எதிர்பார்த்திருந்த அவளது மனம் முறிந்துபோய் இனி நாம் உயிர் துறப்பதே நல்லுபாயமென்று நிச்சயித்திருந்த க்ஷணத்தில் கண்ணபிரான் பதறி ஓடி வந்து புறச் சோலையிலே நின்று தன் பாஞ்சஜந்யத்தை யூதியருள அதன் ஒலி ருக்மிணிப்பிராட்டியின் செவியிற்புகுந்து பேரின்பம் பயந்தது; இராவணன் ஸீதையிடம் வந்து இராமபிரான் இறந்தானாக ஒரு பொய்க் கூற்றுக்கூறி மாயாசிரஸ்ஸைக் காட்டினபோது அப்பிராட்டி வருந்திக்கிடக்கும் க்ஷணத்திலே இராமபிரான் கடற்கரையிலே நின்று தனது சார்ங்கவில்லை ஒலிப்பிக்க, அவ்வொலியானது ஸீதையின் செவியிற்புகுந்து பேரின்பம் பயந்தது; இவைபோல இவ்வாழ்வார்க்குப் பெரியதிருவடியின் சிறகொலியே பேரின்பம் பயப்பதாம். சிறகொலி பாவித்தலாவது—சிறகின் ஒலியே செவியில் பட்டுக்கொண்டிருப்பதாக நினைத்தலும், சிறகொலி எப்போது செவியில்படும் என்று அதிலே ஞாபகமாயிருத்தலுமாம்.

திண்கொள்ள ஓர்க்கும் = எதிரே நின்று யாரேனும் ஏதாகிலும் பேசிக்கொண்டிருந்தாலும் அதைச் சிறிதும் செவிப்படாமல் புள்ளின் சிறகொலி செவியிற் படுவதையே குறிக்கொண்டிருக்கும்படியைக் கூறியவாறு. வேறொன்றில் நெஞ்சு செலுத்தாமல் ஒன்றிலேயே அவதானம் வைப்பது திண்கொள்ள வோர்த்தலாம். இவ்விடத்து இருபத்தினாலாயிரப்படியில் "பாதாழ்வான் ஜிதிலையப்பதத்துக்குச் செவிமடுத்துக்கொடு கிடந்தாப்போலே" என்றருளியது காண்க. ... ... ... ... ... (௬)

செவிகளாலார நின்கீர்த்திக்கனியென்னும்
கவிகளே * காலப்பண்தேன் உறைப்பத்துற்று *
புவியின்மேல் பொன்னெடுஞ்சக்கரத்துன்னையே *
அவிவின்றியாதரிக்கும் எனதாவியே.

(௭)

| | |
|---|---|
| எனது ஆவி | என் பிராணனானது, |
| நின் | உன்னுடைய |
| கீர்த்தி கனி என்னும் கவிகளே | கீர்த்தியாகிய பழம் என்னலாம்படியான கவிகளையே |
| காலம் | காலத்திற்கு ஏற்ற |
| பண் | பண்களாகிற |
| தேன் | தேனிலே |
| உறைப்ப | மிகவும் செறிய |
| துற்று | கலந்து |
| செவிகளால் ஆர | காதுகளால் பூர்ணமாக அநுபவிக்க |
| புவியின் மேல் | பூமியின்மீது |
| பொன் நெடு சக்கரத்து உன்னையே | அழகிய பெரிய திருவாழியையுடைய தேவரீரையே |
| அவிவு இன்றி | இடையறாமல் |
| ஆதரிக்கும் | விரும்பாநிற்கும். |

* * * [செவிகளாலார.] என்னுடைய ஆவியானது உன்னுடைய கீர்த்தியைக் கேட்கவேணுமென்று விரும்புகின்றதென்கிறார். இப்பாசுரத்தில் ஆவி என்பது எழுவாயாதலால் 'செவிகளாலார' என்று கூறப்பட்ட ஆசை ஆவிக்கு உண்டான ஆசையாகக் கொள்ளத்தக்கது. ஆவியானது தனக்குச் செவிகள் முளைக்கவேணுமென்றும் அவற்றாலே எம்பெருமானுடைய கீர்த்திக் கவிகளைக் கேட்கவேணுமென்றும் ஆசைப்படுகிறபடி. அன்றி, தானே செவியாக மாற ஆசைப்படுகிறபடியுமாம். 'செவிகளாலார' என்றது செவிகள் வயிறு நிறையும்படியாக என்றபடி. கீர்த்தியாவது கொண்டாடிக் கூறப்படும் திருக்குணங்களாம்; அவற்றைப் பற்றிப் பரமரஸிகர்களான பக்தர்கள் இயற்றும் கவிகள் பரமபோக்யமாக இருக்குமாதலால் "கனியென்னுங் கவிகள்" என்றார். "கவியென்னுங் கனிகள்" என்று சொல்லவேண்டிய முறை ப்ராப்தமாயிருக்க அங்ஙனம் கூறாது "கனியென்னுங் கவிகள்" என்றது கனிகளினும் மிக்க போக்யதாதிசயம் கவிகளில் இருக்கும்படியைக் காட்டுதற்காம். இங்கு ஈடு காண்மின்;— "கவி கனிபோலிருக்கையன்றிக்கே கனி கவியாயிற்றென்கிறதிறே போக்யதாதிசயத்தாலே."

காலப்பண் தேனுறைப்பத் துற்று = கனிகள் இயற்கையிலே மதுரங்களாகவேயிருந்தாலும் செருக்கர் தேனிலே தோய்த்து உண்பர்கள்; அதுபோலே பகவத்கீர்த்திக் கவிகளைக் காலோசிதமான பண்ணாகிற தேனிலே தோய்த்துச் சுவைக்க விரும்புகின்றபடி. வண்டுகள், குறிஞ்சி மருதம் காமரம் கந்தாரம் என்னும் பண்களைப் பாடுமாபோலே பக்தர்கள் பலவகைப்பட்ட பண்களிலே திருமொழிகளைப்பாடி உள்ளம் குளிரப் பெறுவர்களென்க. இம் * மெய்ம்மாம் பூம்பொழிலில் "பண்கள் தலைக்கொள்ளப்பாடி" என்றருளிச் செய்ததும் காண்க. இப்படிப்பட்ட அநுபவம் "[illegible]" இத்யாதிப்படியே திருநாட்டில் எளிதாயினும் இந்நிலத்திலேயே அது வாய்க்கவேணுமென்னும் பாரிப்பைப் புவியின்மேல் என்பது காட்டுகின்றது. "எங்கேனும் விடாய்த்தாரை எங்கேனும் விடாய் தீர்க்கவொண்ணாது; பசித்தவிடத்தே சோறிடவேணும்" என்பது ஈடு.

"பொன்னெடுஞ் சக்கரத்துன்னையே" என்றதனால் திருநாட்டில் காட்சி தந்தருளும்படியையே இங்கு அநுபவிக்கப் பெற்றேனாகவேணுமென்கிறது. "[illegible]— நம: பரமோதாராய சக்ரதாரிணே." என்ற ப்ரமாணத்தில் நோக்கு. .... ... ... (௪)

ஆவியே ஆரமுதே ! என்னையாளுடை *
தூவியம்புள்ளுடையாய் ! சுடர்நேமியாய் ! *
பாவியேன்நெஞ்சம் புலம்பப்பலகாலும் *
கூவியுங்காணப்பெறேன் உனகோலமே. (எ)

| | |
|---|---|
| ஆவியே | என் உயிராயிருப்பவனே ! |
| ஆர் அமுதே | அருமையான அமுதம் போன்றவனே ! |
| என்னை ஆள் உடை | என்னை அடிமை கொண்ட |
| அம் தூவி புள் உடையாய் | அழகிய சிறகுள்ள கருத்மானை வாஹனமாக வுடையவனே ! |
| சுடர் நேமியாய் | ஒளிமிக்க திருவாழியை யுடையவனே ! |
| உன கோலம் | உனது வடிவழகை |
| பாவியேன் | பாவியாகிய நான் |
| நெஞ்சம் புலம்ப பலகாலும் கூவியும் | மனம் துடிக்கப் பலகால் கூப்பிட்டும் |
| காண பெறேன் | கண்டு அநுபவிக்கப் பெற்றிலேன். |

* * *. [ஆவியே ஆரமுதே.] மஹாபாபியாகையாலே நெஞ்சின் விடாய் தீர்க்கவும் பெற்றிலேனான நான் நெடுகால் கூப்பிட்டவிடத்திலும் உன்னுடைய வழகு காணவும் பெற்றிலேன் என்கிறார். அதாவது—காணக்கூடிய பொழியத் தம்முடைய இழவு சொல்லுகிறபடி. —"ப்ரஜைகளின் இழவும் பசியும் சொன்னார் கீழ்; தம்மிழவும் பசியும் சொல்லுகிறார் மேல்." என்பது ஈடு.

உயிரைவிட்டுப் பிரிந்து தரித்திருக்கவொண்ணுமோ? உயிர்க்கும் உயிரான உன்னைவிட்டு எங்ஙனே தரித்திருக்க வல்லேன் என்கிறார் ஆவியே! என்றதனால். உயிராயிருப்பதோடுகூட போக்யதையும் அளவற்றிருப்பதனால் தரிக்கமுடியாமையை ஆரமுதே! என்பதனால் தெரிவிக்கிறார்.

என்னையாளுடை என்பதைப் புள்ளுடையானுக்கும் அடைமொழியாக்கலாம், புள்ளுக்கும் அடைமொழியாக்கலாம். பகவத் விஷயத்தில் அடிமையிற் காட்டிலும் பாகவத விஷயத்தில் அடிமையே சிறக்குமாதலால் புள்ளுக்கு அடைமொழியாக்குதல் சிறக்குமென்க. சுடர் நேமியாய்!—போக்யதைக்கும் விரோதி நிரஸனத்திற்கும் அமைந்த திருவாழியை யுடையவனே! என்றபடி.

பாவியேன் நெஞ்சம்= நெஞ்சு பகவத்விஷயத்தில் ஈடுபடாதிருந்தால் இழக்கவேண்டுமேயல்லது ஈடுபட்ட பின்பும் இழக்கக் காரணமில்லை; „லாபஸ்தேஷாம் ஜயஸ்தேஷாம் குதஸ்தேஷாம் பராபவ:। யேஷாமிந்தீவரச்யாமோ ஹ்ருதயே ஸுப்ரதிஷ்டித:— லாபம் தேஷாம் ஜயம் தேஷாம் குதஸ் தேஷாம் பராபவ:, யேஷாமிந்தீவரச்யாமோ ஹ்ருதயே ஸுப்ரதிஷ்டித:." என்கிறபடியே இழவு வரமாட்டாது; அப்படியிருக்க என்னெஞ்சு இழவு பட்டிருப்பது—அது எனக்குக் காரணமாகப் பெற்ற பாவத்தினாலே போலும் என்கிறார். புலம்ப= நெஞ்சானது காணப்பெறாத இழவோடே கூப்பிடுகிறபடி. "நேரே கடிக்கமலத்துள்ளிருந்தும் காண்கிலான், கண்ணனடிக்கமலந்தன்னை அயன்" என்னுமாபோலே * நெஞ்சத்துப் பேராது நிற்கும் பெருமானையன்றோ நெஞ்சு காணப்பெறாமல் கூப்பிடுகின்றது. பலகாலும்= ஒருகால் கூப்பிட்டாலும் இழக்கவேண்டாத விஷயத்திலே பலகால் கூப்பிடவேண்டியதாயிற்று; அப்படிப் பல

காலம் கூப்பிட்டும் உன கோலம் காணப்பெறேன். என்னுடைய ஸ்வரூபத்தை யிழந்தும் பேறுபெற்றிலேன் என்கை. 'அவன் தானாகவே வந்து அருள் செய்த போது செய்திடுக' என்று கொண்டு கூப்பிடாதேயிருக்க வேண்டுவது ஸ்வஸ்வரூபம்; ஆற்றாமையினாலே கூவினேனாதலால் ஸ்வரூபஹாநி பெற்றேன்; ஆயினும் பேறு பெற்றதில்லையே! என வருந்துகிறபடி.

இங்கே ஈட்டு ஸ்ரீஸூக்திகள் பரமபோக்யங்கள்;—"ஒன்று அபிமதம் பெற்றேனல்லேன், ஸ்வரூபம் பெற்றேனல்லேன் என்கிறார். 'ததஸ்த்வ ஸஹஸா—தத் தஸ்ய ஸத்ருசம் பவேத்' என்றிருக்கப் பெற்றேனல்லேன்; மடலூர்ந்தார் பெற்ற பேற்றைப் பெற்றேனல்லேன். என் ஸ்வரூபத்தையுமழித்தேன், அவன் ஸ்வரூபத்தையுமழித்தேன். அவன் நீர்மையையுமழித்தேன், என் சேஷத்வத்தையுமழித்தேன். அவனீச்வரத்வத்தையுமழித்தேன், என்னுடைய ஸமிதஸ்பத்வமும் போயிற்று இனிக்கொள்ள இருக்கிறாரார்? கொடுக்கவிருக்கிறாரார்? (உன கோலமே.) இரண்டு தலையையுமழித்துப் பெறவேண்டும் விஷயவை லக்ஷண்யம் சொல்லுகிறது. வ்யதிரேகத்தில் கண்ணுறங்குதல் சூது சதுரங்கங்களோடே போது போக்குதல் செய்யலாம் விஷயமாகப் பெற்றேனோ? * உண்டோ கண்கள் துஞ்சுதல் * என்றும் * என்னினைந்து போக்குவரிப்போது * என்றும் கண்ணுறங்காதே போது போக்கவுமரிதாயிறே யிருப்பது." .... ... (எ)

கோலமேதாமரைக்கண்ணதோர் அஞ்சன
நீலமே * நின்றெனதாவியை ஈர்கின்ற
சீலமே * சென்றுசெல்லாதன முன்னிலாம்
காலமே * உன்னையெந்நாள்கண்டுகொள்வனே. (அ)

| | | | |
|---|---|---|---|
| கோலமே | அழகுதானே வடிவெடுத்தாற் போன்றவனே! | ஈர்கின்ற | ஈடுபடுத்துகின்ற |
| தாமரைக் கண்ணது | தாமரை போன்ற திருக்கண்களையுடையதாகிய | சீலமே | சீலகுணமே வடிவெடுத்திருப்பவனே! |
| ஓர் அஞ்சனம் நீலமே | ஒப்பற்ற அஞ்சனமலை போன்ற நீலநிறமுடையவனே! | சென்று செல்லாதன முன்னிலாம் காலமே | இறந்தகாலம் எதிர்காலம் நிகழ்காலம் என்னும் முக்காலங்களுக்கும் நியாமகனே! |
| நின்று | நிலை நின்று | உன்னை | உன்னை |
| எனது ஆவியை | என் ஆத்மாவை | எந்நாள் | என்றைக்கு |
| | | கண்டு கொள்வன் | கண்டு அநுபவிப்பேன். |

* * * [கோலமே.] "பலகாலும் கூவியும் காணப்பெறேனுன கோலமே" என்ற தம்மைக் குறித்து எம்பெருமான் 'உம்முடைய அபேக்ஷிதம் பூர்த்தி செய்கைக்கீடான காலம் வரவேண்டாவோ?' என்று அருளிச் செய்ததாகக் கொண்டு, 'காலமும் நீயிட்ட வழக்கன்றோ? நான் இழக்கத் தகுமோ?' என்கிறார்.

கோலமே!— கோலம் என்று அழகுக்குப் பெயர்; அழகியவனே! என்று சொல்லவேண்டியிருக்க அழகே! என்றது—'அழகுதானே ஒரு வடி

வெடுத்தது' என்னலாம்படியிருக்கையாலே. இவ்விடத்தில் * तद्गुणसारत्वात्तु तद्व्यपदेशः प्राज्ञवत् * என்ற ப்ரஹ்ம ஸூத்ரத்தின் பொருள் அறியவுரியது. * सत्यं ज्ञानमनन्तं ब्रह्म * என்ற உபநிஷத்வாக்யம் பரமாத்மாவை ஜ்ஞாநம் என்று கூறினதும் * विज्ञानं यज्ञं तनुते * என்ற உபநிஷத்வாக்யம் ஜீவாத்மாவை விஜ்ஞானம் என்று கூறினதும் ஜ்ஞாநகுணமே மிகுந்திருக்கையாலே, என்பது ஸூத்ரத்தின் தாற்பரியம். "அழகே விஞ்சி அத்தையிட்டு நிரூபிக்க வேண்டும்படியிருக்கையாலே கோலமே யென்கிறார்" என்ற ஈடும் காண்க.

தாமரைக்கண்ணதோர் அஞ்சனநீலமே !— கீழ்ச் சொன்ன அழகுக்கு ஆச்ரயம் திருமேனி ; அந்தத் திருமேனிக்குள்ளே மிகச் சிறந்தது கண்ணழகு ; அதனை யநுபவிக்கிறபடி. "[illegible] புண்டரீகமேவ:" என்னலாம்படி யன்றோவிருப்பது. அஞ்சனநீலமே என்பதை இரண்டு வகையாக நிர்வஹிப்பர்கள். அஞ்சனமே, நீலமே ! என்று இரண்டு விளியாகப் பிரித்தல் ; அஞ்சன த்ரவ்யத்தின் நீலநிறத்தான் வடிவானவனே ! என்னுதல்.

நின்று எனதாவியை ஈர்கின்ற சீலமே !— கீழ் "வளவேழுலகின்முதலாய" என்கிற திருவாய்மொழியில் நாம் நைச்யாநுஸந்தானம் பண்ணி அகலப்புக, அப்போது கலந்து பரிமாறின சீலகுணத்தை அநுஸந்திக்கிறபடி. அல்லது, * செய்யதாமரைக் கண்ணனில் "நெஞ்சினால் நினைப்பான் யவன் அவனாகும் நீள்கடல் வண்ணனே" என்ற அர்ச்சாவதாரத்தின் சீர்மையை அநுஸந்திக்கிறபடியாகவுமாம்.

இப்படி அழகும் குணங்களுமுண்டானாலும் பெறுமிடத்தில் இன்னகாலமென்றில்லையோ வென்ன, சென்று செல்லாதன முன்னிலாங்காலமே ! என்கிறார். பூதகாலம் பவிஷ்யத்காலம் வர்த்தமானகாலம் என்னுமிவை காலமும் நீயிட்ட வழக்கன்றோ என்றபடி. மஹாபாரதத்தில் (உத்யோகபர்வத்தில்) த்ருதராஷ்ட்ரனை நோக்கி ஸஞ்ஜயன் கூறுகிறான்—" कालचक्रं जगच्चक्रं युगचक्रं च केशवः। आत्मयोगेन भगवान् परिवर्तयतेऽनिशम्॥ कालस्य च हि मृत्योश्च जङ्गमस्थावरस्य च। ईशते भगवानेकः सत्यमेतद्ब्रवीमि ते॥" என்று.

உனை எந்நாள்கண்டுகொள்வனே ?— "பூர்ணே சதுர்த்தசே வர்ஷே" என்று பரதாழ்வானுக்கு நாளிட்டுக் கொடுத்தாப்போலே எனக்கும் ஒருநாள் குறிப்பிட வேணுமென்கிறார். .... .... .... (அ)

கோளவனாய்மாவலி மூவடிதாவென்ற
கள்வனே * கஞ்சனைவஞ்சித்து வாணனை
உள்வன்மைதீர * ஓராயிரந்தோள்துணித்த
புள்வல்லாய் * உன்னைஎஞ்ஞான்று பொருந்துவனே. (௯)

| | |
|---|---|
| மாவலி | 'மஹாபலியே! |
| நான் | நான் |
| மூ அடி | மூன்றடி நிலத்தை |
| கொள்வன் | ஏற்றுக் கொள்வேன், |
| தா | கொடுப்பாயாக' |
| என்ற | என்று சொன்ன |
| கள்வனே | வஞ்சகனே!. |
| கஞ்சனை | கம்ஸனை |
| வஞ்சித்து | தொலைத்து |
| வாணனை | பாணாஸுரனை |
| உள் வன்மை தீர | மன வுறுதியானது அழியும் படி |
| ஓர் ஆயிரம் தோள் துணித்த | ஆயிரம் புயங்களையும் அறுத்த |
| புள் வல்லாய் | கருடவாஹனனே! |
| உன்னை | உன்னை |
| எஞ்ஞான்று | எக்காலம் |
| பொருந்துவன் | அடையப் பெறுவேன்? |

* * * [கொள்வன்நான்] அடியவர்களைக் காத்தருளு முபாயத்தை நன்குணர்ந்தவனும் ப்ரதிகூல நிரஸநத்தில் வல்லவனுமான உன்னை நான் சேருவது என்றைக்கு? என்கிறார்.

கொள்வன் நான் மாவலி மூவடிதாவென்ற கள்வனே!—ஸூரியமாணவனாகி மாவலிபக்கல் யாசகனாய்ச் சென்றகாலத்து முற்றமுன்னம் 'கொள்வன் நான்' என்றானும்; யாசகன் உதாரனைப் பலபடியாகப் புகழ்ந்து பேசிவிட்டு 'இன்ன பொருள் எனக்கு நீ தரவேணும்' என்று யாசிக்க வேண்டுவது முறைமையாயிருக்க, வாமனன் அங்ஙனம் ஒன்றும் புகழ்ந்து பேசாதே வாய்திறந்து பேசும்போதே 'கொள்வன் நான்' என்றானும்: என்றைக்கும் யாசித்தறியாதவனாதலால் இன்னபடி சொல்ல வேணுமென்று அறிந்திலன் போலும்.

வாமன மூர்த்தியின் மிக அழகிய வடிவத்தைக் கண்டு இவனுக்கு ஏதாவது தானம் பண்ணியே யாகவேணுமென்று குதூஹலங்கொண்ட மாவலி 'இவன் நம் பக்கலில் தானம் பெறுவனோ மாட்டானோ' என்று ஸந்தேஹித்திருக்க, அந்த நிலைமையைக்கண்ட வாமனன் அவனுடைய சங்கைதீரக் "கொள்வன் நான்" என்றானுமாம்.

மாவலி!— அணைமைவிளி. பெரியோரைப் பெயர்சுட்டிச் சொல்லலாகாது என்பது வாமன மூர்த்திக்குத் தெரியாதோ? 'மஹாப்ரபோ!' என்று சிறப்பாகவன்றோ சொல்லவேணும்; 'மாவலி!' என்று பெயரையிட்டுச் சொன்னது ஏன்? என்று சங்கித்துக் கொண்டு நம்பிள்ளை யருளிச் செய்வனகாண்மின்; "பிறந்தவன்றே பிக்ஷையிலே அதிகரிக்கையாலே பிரபுக்களை உபசரித்து வார்த்தை சொல்லி யறியானே; முன்பு ஒருவர்பாடே தாழ்வு சொல்லியறியான்; பிறகு பின்பு வாஸனை பண்ணுகைக்கு காலமில்லை; அத்தாலே மாவலி யென்கிறான். எல்லாரும் தன்னை உயரச் சொல்லுமதொழிய இப்படி சொல்லக் கேட்டறியாமையாலே 'இவனொரு பாலன் நம் முன்பேநின்று சிறு பேரைச் சொல்லி யழைத்தான்' என்று இனியனாய் முகத்தைப் பார்த்து 'உனக்கு வேண்டுவதென்?' என்றான்; 'மூவடி' என்று விடை கூறினான் வாமனன். (அது கேட்ட மாவலி) தன்பக்கல் யாசிக்க வருமவர்களில் இப்படி சிறுக அர்த்திப்பாரில்லாமையாலே அநாதரித்திருந்தான்; அப்படியாந்த பண்ணாதே தா என்கிறான்."

**என்றுகள்வனே!**—'இந்திரனே சரணம்புக்கு நின்றான்; ஈதாராநுரூப பாலனொருவன் அவனுடைய ராஜ்யத்தைப் பறித்துக் கொண்டான்; இவன்றான் ஔதார்யமென்பதொரு தர்மபாலத்தை ஏறிட்டுக் கொண்டிருக்கையாலே ராவணாதிகளைப்போலே இவனை யழிக்கும் வழியில்லை; என்ன செய்வது?' என்று பார்த்து, தன்னை யாசகனாக்கி, 'இவன் தேவகாரியம் செய்ய வந்தான்' என்று சுக்கிரன் முதலானோர் சொல்லி மறுக்கச் செய்தேயும் அவன் நெஞ்சில் படாதபடி அவனை வடிவழகாலும் பேச்சழகாலும் வாய்மானப் பண்ணின வஞ்சனங்களெல்லாவற்றையும் நினைத்துக் கள்வனே! என்கிறார்.

**கஞ்சனை வஞ்சித்து**— வஞ்சனை செய்வதென்பது தோஷமேயல்லது குணமன்றே; குணக்கடலான எம்பெருமான் வஞ்சித்தானென்றால் அழகாகுமோ? என்கிற சங்கையிலே நம்பிள்ளையருளிச் செய்கிறார்—"கம்ஸன் கோலின வஞ்சனத்தை அவன் தன்னோடே போக்கினவனே!" என்று. கம்ஸன் கண்ணபிரானுக்கு மாதுலனாகையாலே நேர்கொடுநேரே வந்து தீங்கு செய்யமாட்டாமல் பல க்ருத்ரிம வழிகளையும் செய்து பார்த்தான்; 'ஐயோ என்னுடைய மருமகன் இறந்துவிட்டானே' என்று கண்ணீர்விட்டு அழவேணுமென்று ஸமயம் பார்த்திருந்தான்; அவன் இங்ஙனே கோலியிருந்த வஞ்சனத்தை அவனோடே போம்படி பண்ணினானாயிற்று கண்ணபிரான்.

**வாணனையாயிரந்தோள்துணித்த** வரலாறு:— பலி சக்ரவர்த்தியின் ஸந்ததியிற் பிறந்த பாணாஸுரனுடைய பெண்ணாகிய உஷையென்பவள், ஒரு நாள் ஒரு புருஷனோடு தான் கூடியிருந்ததாகக் கனாக்கண்டு, முன் பார்வதி அருளியிருந்தபடி அவனிடத்திலிருந்த ஆசை பற்றியவளாய், தன் உயிர்த்தோழியான சித்திரலேகைக்கு அச்செய்தியைத் தெரிவித்து அவள் மூலமாய் அந்தப் புருஷன் க்ருஷ்ணனுடைய பௌத்திரனும் ப்ரத்யும்நனது புத்திரனுமாகிய அநிருத்தனென்று அறிந்துகொண்டு 'அவனைப் பெறுதற்கு உபாயஞ் செய்ய வேண்டும்' என்று அத்தோழியை வேண்ட, அவள் தன் யோகவித்தை மஹிமையினால் த்வாரகைக்குச் சென்று அநிருத்தனைத் தூக்கிக் கொண்டுவந்து அந்தப்புரத்திலே விட, உஷை அவனோடு போகங்களை அனுபவித்துவர, இச்செய்தியைக் காவலாளராலறிந்த அந்தப்பாணன் தன் சேனையுடன் அநிருத்தனை யெதிர்த்து மாயையினாலே பொருது நாகாஸ்திரத்தினாற் கட்டிப் போட்டிருக்க, த்வாரகையிலே அநிருத்தனைக்காணாமல் யாதவர்களெல்லாரும் கலங்கியிருந்தபோது, நாரதமுனிவனால் நடந்தவரலாறு சொல்லப்பெற்ற ஸ்ரீக்ருஷ்ண பகவான், பெரிய திருவடியை நினைத்தருளி, உடனே வந்துநின்ற அக்கருடாழ்வானது தோள்மேலேறிக் கொண்டு பலராமன் முதலானாரோடுகூடப் பாணபுரமாகிய சோணிதபுரத்திற் கெழுந்தருளும்போதே, அப்பட்டணத்தின் ஸமீபத்தில் காவல் காத்துக் கொண்டிருந்த சிவபிரானது பிரமதகணங்கள் எதிர்த்துவர, அவர்களை யெல்லாம் அழித்து, பின்பு சிவபெருமானால் ஏவப்பட்டதொரு ஜ்வர தேவதை மூன்று கால்களும் மூன்று தலைகளுமுள்ளதாய் வந்து பாணனைக் காப்பாற்றும் பொருட்டுத் தன்னோடு யுத்தஞ்செய்ய, தானும் ஒரு ஜ்வரத்தை

புண்டாக்கி அதன் சக்தியினாலே அதனைத் தூக்கிவிட்ட பின்பு, சிவபிரானது அநுக்ரஹத்தையுடைய பாணாஸுரனது கோட்டையைச் சூழ்ந்து கொண்டு காத்திருந்த அக்நிதேவர் ஐவரும் தன்னோடெதிர்த்துவர, அவர்களையும் நாசஞ்செய்து பாணாஸுரனோடு போர் செய்யத்தொடங்க அவனுக்குப் பக்கபலமாகச் சிவபெருமானும் ஸுப்ரஹ்மண்யன் முதலான பரிவாரங்களுடன் வந்து எதிர்த்துப் போரிட, கண்ணன் தான் ஜ்ரும்பணாஸ்திரத்தைப் பிரயோகித்துச் சிவன் ஒன்றுஞ் செய்யாமல் கொட்டாவி விட்டுக்கொண்டு சோர்வடைந்து போம்படி செய்து ஸுப்ரஹ்மண்யனையும் கணபதியையும் ஹுங்காரங்களால் ஒழித்து ஓட்டி, பின்னர் அநேகாயிரம் ஸூர்யர்க்கு ஸமமான தனது சக்ராயுதத்தைத் தொடுத்துப் பிரயோகித்து அப்பாணனது ஆயிரந்தோள்களையும் தாரைதாரையாய் உதிரமொழுக அறுத்து அவனுயிரையும் இறைப்பதாக இருக்கையில், பரமசிவன் அருகில்வந்து வணங்கிப் பலவாறு ப்ரார்த்தித்ததனாலே அவ்வாணனை நான்கு கைகளோடும் உயிரோடும் விட்டருளி, பின்பு அவன் தன்னைத் தொழுது அநிருத்தனுக்கு உஷையைச் சிறப்பாக மணம் புரிவிக்க அதன்பின் மீண்டுவந்தனன் என்பதாம். .... (கூ).

பொருந்தியமாமருதினிடைபோய எம்
பெருந்தகாய்! * உன்கழல்காணியபேதுற்று *
வருந்திநான் வாசகமாலைகோண்டே * உன்னையே
இருந்திருந்து எத்தனைகாலம்புலம்புவனே? (௧0)

| | | | |
|---|---|---|---|
| பொருந்திய | ஒன்றோடொன்று பொருந்தி நின்ற | காணிய | காணும் பொருட்டு |
| மா மருதின் இடை | பெரிய மருதமரங்களின் நடுவே | பேதுற்று | ஈடுபாடுடையேனாய் |
| போய | நுழைந்து சென்று அவற்றைத் தள்ளி முறித்த | வருந்தி | துக்கித்து |
| எம் பெருந்தகாய் | எம்பெருமானே! | வாசகம் மாலை கொண்டு | சொல் மாலைகளைக் கொண்டு |
| நான் | அடியேன் | உன்னையே | உன்னையே நோக்கி |
| உன் கழல் | உனது திருவடிகளை | இருந்து இருந்து | இடைவிடாது |
| | | எத்தனை காலம் | எவ்வளவு காலம் |
| | | புலம்புவன் | கதறுவேன்! |

* * * [பொருந்திய.] உன்னுடைய குணங்களுக்குத் தோற்று உன்னைக் காணப்பெறாத வ்யஸனத்தாலே துக்கப்படுகிற நான் இன்னமெத்தனை காலம் துக்கப்படக் கடவேனென்கிறார்.—தம்மில் தாம் செறிந்துநிற்கிற பெரிய மருத மரங்களின் நடுவே சென்று அவற்றை முறித்து உன்னை யெங்களுக்கு ஸ்வாமியாகத் தந்த பெரியவனே! உன்னுடைய திருவடிகளைக் காணவேணுமென்கிற ஆவலை உடையேனாய் அது நிறைவேறப் பெறாமையாலே மிகவருந்தி உன்னுடைய திருக்குணங்களுக்கு வாசகமான சப்த ஸந்தர்ப்பத்தைக் கொண்டு உன்னையே நோக்கி யிளைத்திருந்து எத்தனை காலம் கூப்பிடக்கடவேனென்கிறார்.

கண்ணன் குழந்தையா யிருக்குங் காலத்தில் துன்பப்படுத்துகின்ற பல விளையாடல்களைச் செய்யக்கண்டு கோபித்த யசோதை கிருஷ்ணனைத் திருவயிற்றில் கயிற்றினால் கட்டி ஒருரலிலே பிணித்துவிட, கண்ணன் அவ்வுரலை யிழுத்துக்கொண்டு தவழ்ந்து அங்கிருந்த இரட்டை மருதமரத்தின் நடுவே எழுந்தருளிய பொழுது அவ்வுரல் குறுக்காய் நின்று இழுக்கப்பட்டபடியினாலே அம்மரங்களிரண்டும் முறிந்து விழுந்தவளவில் முன் நாரதர் சாபத்தால் அம்மரங்களாய்க்கிடந்த நளகூபரன் மணிக்ரீவன் என்னும் குபேரபுத்திரர் இருவரும் சாபந் தீர்ந்து சென்றனர். இந்தக் குபேரபுத்திரர்கள் முன்பு ஒரு காலத்தில் பல அப்ஸரஸ் ஸ்த்ரீகளுடனே ஆடையில்லாமல் ஜலக்ரீடை செய்து கொண்டிருக்கையில் நாரதமாமுனிவர் அங்கு எழுந்தருள, மங்கையர் அனைவரும் நாணங்கொண்டு ஆடை யெடுத்து உடுத்து நிற்க, இந்த மைந்தர் மாத்திரம் மதுபான மயக்கத்தினால் வஸ்த்ரமின்றியே யிருக்க, நாரதர் கண்டு கோபங்கொண்டு 'மரங்கள் போலிருக்கிற நீங்கள் மரங்களாவீர்' என்று சபிக்க, உடனே அவர்கள் வணங்கி வேண்டிக் கொண்டதற்கு இரங்கி 'நெடுங்காலஞ் சென்றபின்பு திருமால் உங்களருகே நெருங்குஞ் சமயத்தில் இவ்வடிவ மொழிந்து முன்னை வடிவம் பெற்று நீங்குவீர்' என்று சாபவிடை கூறிப் போயினர். இப்படி சாபத்தினால் மரங்களான இவற்றில் கம்ஸனால் ஏவப்பட்ட இரண்டு அசுரர்களும் ஆவேசித்துக் கிடந்தனர் என்றும் புராணம் கூறுகின்றது. "ஒருங்கொத்தவிணை மருதமுன்னியவந்தவரை" என்றும், "பொய்ம்மாயமருதான அசுரரை" என்றும் பெரியாழ்வாரருளிச் செய்தனர்.

பொருந்திய மாமருதின்— மருது, மாமருது, பொருந்திய மாமருது என வகுத்துக் கொள்க. அதன் அருகே செல்வதும் அபாயத்திற்கு இடமாயிருக்க அதனிடையே தவழ்ந்து சென்றனே! என்று இன்று வயிறு பிடிக்கிறாராழ்வார். "மருதினிடைபோய எம் பெருந்தகாய்! உன்கழல் காணிய பேதுற்று" என்றது யமளார்ஜுந மத்யத்திலே தவழ்ந்து செல்லுகிற போதைத் திருவடி யழகை யநுபவிக்க ஆழ்வார் ஆசை கொண்டிருக்கும்படியைக் காட்டும். மருதினிடை போனதைப் பின்னை பராசர மஹர்ஷி (ஸ்ரீவிஷ்ணு புராணத்தில்) "யமளார்ஜுநயோர் மத்யே ஜகாம கமலேக்ஷண:—யமளார்ஜுநயோர் மத்யே ஜகாம கமலேக்ஷண:" என்றார்; கண்ணனுடைய திருக்கண்ணழகிலே தோற்றார் அவர்; திருவடி யழகிலே தோற்கிறார் ஆழ்வார். இங்கே ஈடு;—["ஜகாம கமலேக்ஷண:] புரிந்து பார்த்த கண்களைக் காண ஆசைப்பட்டான் ரிஷி; தவழ்ந்து போகிறபோதைத் திருவடிகளைக் காண ஆசைப்படுகிறாரிவர்."

காணிய— காண்கைக்காக என்றபடி. பேதுற்று—பேது—பைத்தியம்; அறிவு கலங்கி என்றபடி.

வருந்தி நான் வாசகமாலை கொண்டு— ஒரு சொல் எடுப்பது ஒரு மலை யெடுக்குமாபோலே யிருக்கிறதாம் ஆழ்வார்க்கு. .... .... .... (க0)

புலம்புசீர்ப் பூமியளந்தபெருமானை *
நலங்கோள்சீர் நன்குருகூர்ச்சடகோபன் * சோல்
வலங்கோண்டவாயிரத்துள் இவையுமோர்பத்
திலங்குவான் * யாவருமேறுவர் சொன்னாலே. (கக)

புலம்பு சீர் — (அனைவரும்) கொண்டாடத் தக்குரிய திருக் குணங்களையுடையனும்
பூமி அளந்த பெருமானை — பூமியை அளந்தவனான எம்பெருமானைக் குறித்து
நலம் கொள் சீர் — ஞானபக்தி முதலிய சிறப்பு வாய்ந்த
நன் குருகூர் சடகோபன் —;
சொல் — அருளிச்செய்த
வலம் கொண்ட — மிக்க ஆற்றலையுடைய
ஆயிரத்துள் — ஆயிரம் பாசுரங்களுள்
இவை ஓர் பத்தும் — இப்பத்துப் பாசுரத்தையும்
சொன்னால் — ஓதினால்
யாவரும் — (இன்னார் இனையார் என்னும் வாசியற) எல்லாரும்
இலங்கு வான் — சோதிமயமான பரம பதத்தை
ஏறுவர் — ஏறப்பெறுவர்.

* * * [புலம்புசீர்.] இத்திருவாய்மொழியின் இயல்மாத்திரத்தைக் கற்றவர்கள் ஆரேனுமாகிலும் இதில் ஆரம்பித்தபடியே யநுபவிக்கையில் தட்டில்லாத பரமபோக்யமான திருநாட்டிலே செல்வரென்று பயனுரைத்துத் தலைக்கட்டுகிறது. உலகெல்லாம் கொண்டாடும்படியான திருக்குணங்களையுடையனுய்க் கொண்டு, பூமியையளந்த ஸர்வேச்வரனைக் குறித்து ஆழ்வாரருளிச்செய்த ஆயிரத்துள் இவையுமோர் பத்து சொன்னால் யாவரும் இலங்குவான் ஏறுவர்.

இங்கு ஆழ்வார்க்கு நலங்கோள் சீர் என்று விசேஷணமுள்ளது; கரணங்களும் சேதநஸமாதியாலே விடாய்த்து, ஓர் இந்திரியத்தின் வ்ருத்தியை மற்றோரிந்திரியம் ஆசைப்பட்டு, இவையெல்லாவற்றின் வ்ருத்தியையும் தாம் ஆசைப்பட்டு இப்படி பகவத்விஷயத்திலே விடாய்க்கும் படியான ஸ்ரீவைஷ்ணவஸ்ரீயையுடையரான ஆழ்வார் என்றபடி.

வலங்கோண்ட வாயிரம் — வலம் என்றது வலிமை என்றபடி; ப்ரதிபாத்யவஸ்துவை உள்ளபடி ப்ரதிபாதிக்கவல்ல ஸாமர்த்தியத்தையுடையதென்றவாறு.

இயலில் "இவையுமோர்பத்திலங்குவான்" என்று நிறுத்துவது பொருட்சேர்த்திக்குப் பொருந்தாது.

பரமபதத்தில் நித்யஸூரிகளுக்கே ஸம்பவிக்கக்கூடிய நிலைமையை இத்திருவாய்மொழியில் ஆழ்வார் ஆசைப்பட்டதனால் "இலங்குவான் ஏறுவர்" என்று தேசவிசேஷப்ராப்தியைப் பயனுரைத்துத் தலைக்கட்டினரென்க. .... .... (கக)

எட்டாந் திருவாய்மொழி உரை முற்றுப்பெற்றது.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ:

# த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்நாவளி.

சித்தாக்ருஷ்டிப்ரவீணைரபிலபநஸுதைஸ் ஸ்பர்ஸவாஞ்சாம் துஹானை:
ஆதந்வாநைர்தித்ருக்ஷாம் ஸ்ருதிஹிதமதுரைராத்மநித்யாதரார்ஹை: ।
விஸ்லேஷாக்ரோசக்ருத்பி: ஸ்மரதரதிகரைஸ் தத்பதாயுஜ்யஸங்கை:
பாலவைவஸ்யம் குர்வாணை: ... ஸ்ரீபதிம் ... ॥

இந்த ச்லோகத்திலுள்ள த்ருதீயார்த்த விசேஷணபதங்களெல்லாம் குணங்களை என்கிற விசேஷ்யத்திலே அந்வயிப்பன. பகவத் குணங்களின் ஒவ்வொரு வகையான தன்மை ஒவ்வொரு பாசுரத்திலும் பேசப்பட்டதென்கிறார்.

1. சித்தாக்ருஷ்டிப்ரவீணை:— * என்றுடைக்குமென்னெஞ்சமே. * நெஞ்சை ஆகர்ஷிப்பதில் ஸமர்த்தங்களாய்;

2. அபிலபநஸுதை:— * என்று மெப்பொது மென்வாசகமே, * வாக்கினால் சொல்லவேணுமென்கிற இன்பத்தைப் பண்ணுமவையாய்;

3. ஸ்பர்ஸவாஞ்சாம் துஹானை:— * என்று தடவு மென்கைகளே, * கைகளால் தழுவவேணுமென்கிற ஆசையை வளர்ப்பனவாய்;

4. தித்ருக்ஷாம் ஆதந்வானை:— * மெய்கொள்ளக் காணவிரும்புமென் கண்களே, * காண வேணுமென்கிற விருப்பத்தை விளைப்பனவாய்;

5. ச்ருதிஹிதமதுரை:— * திண்கொள்ள வோர்க்கும் கிடந்தென் செவிகளே, * செவிக்கு இனியவையாய் (அதனை) மதுரங்களாய்;

6. ஆத்மநித்யாதரார்ஹை:— * உன்னையே அலிகின்றியாதரிக்கு மெனதாவியே, * ஆவி எப்பொழுதும் ஆதரிக்கவுரியனவாய்;

7. விஸ்லேஷாக்ரோசக்ருத்பி:— * பாவியேன் நெஞ்சம் புலம்பப் பலகாலும் கூவியுங்காணப்பெறேன் * பிரிவுகாலங்களில் கதறப்பண்ணுமவையாய்;

8. ஸ்மரத்அரதிகரை:— * நின்று எனதாவியையீர்கின்ற சீலமே. * நினைப்பவர்களுக்கு வைதில்யத்தை விளைப்பனவாய்;

9. தத்பதயுஜ்யஸங்கை:— * உன்னை பெருஞான்று பொருந்துவனே * தன்னொடு பொருந்துவதில் விருப்பத்தை விளைப்பனவாய்;

10. பாலவைவஸ்யம் குர்வாணை:— * பொருந்திய மா மருதினிடைபோய * மருதினிடையே தவழ்ந்து செல்லுதல் முதலிய சிறுச்சேவகங்களைச் செய்யும

வையாய் ; ஆக இப்படிப்பட்ட [மிலிதகுணகணை:] ஸஹாஸர்க்காரகபாவத்தாலே ஒன்றோடொன்று கூடி இனியவையான குணஸமூஹங்களினால், [நித்யத்ருஶ்யாங்கம்] எப்போதும் காண வேணுமென்று விரும்பத்தக்க திவ்யமங்கள விக்ரஹத்தையுடையவனாக [ஆஹ] ஆழ்வார் எம்பெருமானையருளிச் செய்தார்.

அப்புல்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

## த்ரமிடோபநிஷத் ஸங்கதி.

ஷஷ்டே ஸதஷிதாஸ்யநகேதா ஹரிஶாஸ்தாஸாத்மா
ஜாதா ஸ்வேதராய தத்யஜநாவஹேநாகாஸ் ।
உத்ஸ்த்தா ஸுகரவெண்ணரவி காயேந்தி
ஸோகா த்ருஶ்யெரக்ஷஜகதீ வாக்தாஸ்ஷ்டெஸைகாக ॥

(கருத்து.) மேல் * செய்யதாமரைக்கண்ணனாய் என்கிற ஆறாந்திருவாய்மொழியில் " அன்று தேர் கடவிய பெருமான் கனைகழல்காண்பதென்றுகொல் கண்களே " என்று கட்கண்ணாலே தன்னைக் காண்பதற்குக் கோர்த்த ஆசையை ஒருவாறு அடக்கப்பார்த்த எம்பெருமான் * பயிலுஞ்சுடரொளியில் கிழுமபடி தாமமான ஸ்ரீவைஷ்ணவர்களைக் காட்டிக் கொடுக்க, அநந்தரம் ஆஸ்ருத்தமான பாகவத ஸம்ஶ்லேஷம் * வொயயனுக்ஷ பாரவஶ்யம் பண்ணித் தரிக்கைக்கு உடலன்றிக்கே பகவத் குணங்களுக்கு ஸ்மாரகமாய்க் கிளர்ந்திறந்த விடாய்க்கு உத்தம்பகமாகவே அங்ஙனம் கரைபுரண்ட காதலானது கரணக்ராமங்களையும் விடாய்க்கச் செய்து யிருந்த அவஸ்தத்தை விளைந்ததாய்த்து எட்டாந் திருவாய்மொழியில்.

ஜீயர் திருவடிகளே சரணம்.

---

ஸ்ரீ:

## திருவாய்மொழி நூற்றந்தாதி.

முடியாத வாசைமிக முற்று கரணங்கள் *
அடியார்தம்மைவிட் டவன்பால்—படியா *
ஒன்றொன்றின் செயல்விரும்ப உள்ளதெல்லாம் தான்விரும்ப *
நன்னியதே மாறன்றன் சொல்.

| பதம் | பொருள் |
|---|---|
| முடியாத ஆசை மிக | ஆராதகாதல் அதிசயிக்க |
| மூத்த கரணங்கள் | எல்லா இந்திரியங்களும் |
| அடியார் தம்மை விட்டு | பாகவதர்களை விட்டு |
| அவன் பால் | அவ்வெம்பெருமான் பக்கலிலே |
| படியா | படிந்து |
| ஒன்றொன்றின் செயல் விரும்ப | ஒரு கரணம் மற்றொரு கரணத்தின் வ்ருத்தியை ஆசைப்பட |
| உள்ளதெல்லாம் தான் விரும்ப | கரணங்களின் வ்யாபாரங்களையும் ஆழ்வார் தாமுடைய காதலை விரும்ப |
| மாறன் தன் சொல் | ஆழ்வாருடைய ஸ்ரீஸூக்தி |
| துன்னியது | (வருத்தத்தினால்) நெருக்க மூற்றது. |

* செய்யதாமரைக்கண்ணனும் என்கிற திருவாய்மொழியில் "என்றுகொல் கண்கள் காண்பதுவே" என்று கிளர்ந்த ஆசை * பயிலுஞ்சுடரொளியில் தணியாதே அதிகரிக்க, பாஹ்யம் ஆப்யந்தரம் என்னும் வாசியின்றிக்கே ஸகல கரணங்களும் * எம்மையாளும்பரமர் * எம்மையாளுடைநாதர் * எம்மையாளுடையார்கள் * எம்பெருமக்கள் * எம்மையளிக்கும் பிராக்கள் * எம்மைச் சன்மசன்மாந்தரங் காப்பர் * எம்மை நாளுய்யக் கொள்கின்ற நம்பர் * எம் தொழுகுலந்தாங்கள் * அடியா செம்மடிகள் * அடியார் தம்மடியாரடியோங்கள் * என்றிப்படி ஸகல ப்ரகாரத்தாலும் சேஷிகளாக அநுஸந்திக்கப்பட்ட ஸ்ரீவைஷ்ணவர்களைவிட்டு எம்பெருமான் பக்கலிலே யவகாஹித்து, [கரணங்களும் தாமும் தத்விஷயத்திலே ப்ரவணராய்] ஓர் இந்திரியத்தினுடைய வ்ருத்தியை மற்றையிந்திரியங்களுமாசைப்பட்டும் அவையெல்லாவற்றினுடைய வ்ருத்தியையும் தாமாசைப்பட்டும் ஆழ்வார் அவஸரத்தோடே அருளிச் செய்யும்படியாயிற்று என்றபடி.

"முடியாதவாசைமிகு" என்றும் பாடமுண்டு; அப்போது கரணங்களுக்கு அடைமொழியாக அந்வயிக்கும். படியா—செய்யா வென்னும் வாய்பாட்டிறந்தகால வினையெச்சம்; படிந்து என்றபடி. 'துன்னியது' 'துன்றியது' என இருவகையான பாடமும் காண்கிறது. பொருள் ஒன்றே; நிர்வேதம் மிக்கது என்றபடி.

மூன்றாமடியில் 'தாம் விரும்ப' என்ற பாடம் சந்தியிலுள்ள மாறன் என்ற ஒருமைக்குச் சேராது; தான் என்பதே பொருத்தம். .... (உஉ)

ஜீயர் திருவடிகளே சரணம்.



ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## மூன்றாம்பத்து—ஒன்பதாந் திருவாய்மொழி

## சொன்னால் விரோதம்.

உரையவதாரிகை:—ஆழ்வார் சில ஸமயங்களில் தம்முடைய இழவுக்கு வருந்துவர்; சில ஸமயங்களில் ஸம்ஸாரிகளின் இழவுக்கு வருந்துவர். கீழ்த் திருவாய்மொழியில் தம்முடைய க்லேசங்களுக்குக் கதறினார்; இத் திருவாய்மொழியில் ஸம்ஸாரிகளின் க்லேசங்களுக்குக் கதறுகிறார். கவி பாடும்படியான திறமையைப் பெற்றுவைத்து அந்தத் திறமையை பகவத் விஷயத்திலே செலுத்தாமல் க்ஷுத்ர பலன்களை விரும்பி அற்ப மனிதர் விஷயத்திலே செலுத்தி 'நரஸ்துதி செய்பவர்கள்' என்று இழிவான பெயரைப் பெற்று உலாவுவாரைக் கண்டு வருந்தி, அவர்களையும் உபதேசத்தாலே திருத்தி பகவத் விஷயத்தில் கவிபாடுகின்றவர்களாக ஆக்கி உய்விப்பான் வேண்டி அவர்களை விளித்து 'இப்படி நீங்கள் உங்களுடைய வாக்கை க்ஷுத்ர விஷயங்களில் உபயோகித்து அதோகதியடைவது தகுதியன்று; * உயர்வறவுயர்நல முடையவனை எம்பெருமான் விஷயத்திலே உங்கள் கவன சாதுரியத்தைச் செலுத்துவதே நன்று—என்று உபதேசித்தருளுகிறார் இத்திருவாய்மொழியில்.

உலகத்தில் ஜ்ஞாதாக்களாக இருப்பது அரிது; அது வாய்த்தாலும் கவி பாடும்படியான ஸாமர்த்தியம் பெறுவது மிகவும் அரிது. அந்த ஸாமர்த்தியம் பெற்றவர்கள் வருத்த விஷயத்தில் தங்கள் வாக்கை விநியோகப்படுத்தாமல் க்ஷுத்ர நரஸ்துதிகளிலே விநியோகிப்பது மிகவும் அருவருக்கத்தக்கதாகும். வடமொழியில் ப்ரதாபருத்ரீயம் என்கிற ஒரு க்ரந்தம் மிகவும் ப்ரஸித்தமானது. இதை இயற்றிய கவியின் பாண்டித்யமும் கவித்திறமும் மிக வியக்கத்தக்கதே. ஆயினும் இந்த க்ரந்தம் எம்பெருமானுடைய குண கீர்த்தனத்தில் அமைந்திருந்தால் அழகிதாயிருக்கும். அங்ஙனன்றியே, அல்ப ப்ரயோஜனத்தைக் கணிசித்து ஒரு க்ஷுத்ர ப்ரபுவை விஷயீகரித்து இந்த நூல் பிறந்ததாதலால் பகவத்பக்தர்கள் ஜுகுப்ஸைப் படும்படியாகவுள்ளது. இப்படிப்பட்ட கர்ஹணீய க்ரந்தங்கள் உலகிற் பலபல வுள்ளன. இத்தகைய நூல்களை இயற்றும் கவிகள் பக்கலில் ஆழ்வார்க்குண்டாகும் சீற்றம் அபாரம்.

ஆழ்வார், தம்முடைய திருவாக்கு பகவத் விஷயத்திலே உபயோகப்படுகின்ற வளவுக்கு உகந்து, மற்றையோர் எக்கேடு கெட்டாலும் அதைப்பற்றிச் சிந்தியாமல் "ஆராலுமாதாலுஞ் செய்ய, அகலிடத்தை ஆராய்ந்து அது திருத்தலாவதே !" என்று பெரிய திருவந்தாதியில் தாமே அருளிச் செய்தபடி ஸம்ஸாரிகளைப்பற்றிக் கவலை கொள்ளாமல் இருக்கலாம்; அப்படியிருக்கும் ப்ரக்ருதியன்று ஆழ்வாரது.

ஆசார்ய ஹ்ருதயத்தில் (மூன்றாம் ப்ரகரணத்தில்) "கண்ணுதாரமெய்யில்……………அடைவுகெட அநுபவஸ்தர்க்கு உபதேசிக்கிறவிது ஞாலத்தார் பந்த புத்தியும் ஆர்த்தலுங்கண்டு ஆற்றாமையும் மிக்க க்ருபையுமிறே." என்கிற சூர்ணிகையினால் விமுகரான ஸம்ஸாரிகளுக்கும் ஆழ்வார் உபதேசித்தருள்வதற்குக் காரணங்கள் நிரூபிக்கப்பட்டன காண்க.

ஆழ்வார்தாம் அநுபவிக்கும் பகவத் விஷயம் தனியே அநுபவிக்கக் கூடிய தல்லாமையாலே „ஏகஸ்வாது ந புஞ்ஜீத [illegible] — மச்சித்தா மத்கதப்ராணா: போதயந்த: பரஸ்பரம்'' என்று கீதாசார்யன் பணித்தபடியே பிறரோடு கூடவிருந்தே போதுபோக்கித் தரிக்க வேண்டியவரான தாம் அப்படிப்பட்ட அதிகாரிகளைப் பெறுதற்காக நாற்புறமும் கண்வைத்துப் பார்த்தார். எல்லாரும் ஸம்ஸாரிகளா யிருந்தனர். நரஸ்துதியிலே ஊன்றி அல்ப ப்ரயோஜனங்களைப் பெற்று ஒழிபவர்களா யிருந்தனர்; அன்னவர்களைக் கண்டவாறே § வாளாலறுகாணத் தேளறுமாப்போலே தம் இழவை மறந்தார். பிறர்படும் அநர்த்தம் கண்டால் அத்தைப் பரிஹரித்துப் பிறகு தம் இழவைப் பரிஹரித்துக் கொள்ள நினைக்குமவராகையாலே உபதேசத்தாலே அவர்களையும் திருத்திக் கைக்கொள்ளப் பார்க்கிறார். உபதேசித்தவளவிலும் அவர்கள் திருந்தக்காணாமையாலே 'இவர்களைப்போலன்றியே நான் எம்பெருமானையே கவிபாடப் பெற்றேனே!' என்று தம்மைப்பற்றின உகப்போடே தலைக்கட்டுகிறார். .... .... .... .... (*)

சொன்னால்விரோதமிது ஆகிலும்சொல்லுவன்கேண்மினோ *
என்நாவிலின்கவி யானொருவர்க்கும்கொடுக்கிலேன் *
தென்னாதெனாவென்று வண்டுமுரல்திருவேங்கடத்து *
என்னானையென்னப்பன் எம்பெருமானுளனாகவே. (க)

| | | | |
|---|---|---|---|
| இது | இப்போது நான் சொல்லும் ஹிதவார்த்தை யானது | வண்டு | வண்டுகளானவை |
| சொன்னால் | சொல்லப்புகுமாகில் | தென்னா தெனா என்று | தென்னா தென்னா வென்று ஆளத்தி வைத்து |
| விரோதம் | உங்களுக்கு அநிஷ்டமாக இருக்கும்; | முரல் | ரீங்காரஞ் செய்யப் பெற்ற |
| ஆகிலும் | ஆனாலும் | திருவேங்கடத்து | திருமலையிலே |
| சொல்லுவன் | (உங்கள் அநர்த்தத்தைப் பொறுத்திருக்கமாட்டாமையினால்) சொல்லியே தீர்வேன்; | என் ஆனை | என்னுடைய யானை போன்றவனும் |
| கேண்மின் | காது கொடுத்துக் கேளுங்கள்; | என் அப்பன் | எனக்கு மஹோபகாரகனுமான |
| | | எம்பெருமான் | ஸ்வாமி |

---

§ ஒருவன் தேள் கொட்டி சோர்ந்துவாரா நிற்க எதிரே யொருவன் வாளால் வெட்டுப்பட்டு சோர்ந்துவந்தால் அந்தப் பெருநோவைக் கண்டவாறே தேள் கொட்டின சிறு நோவு தணியுமாபோலே என்றபடி.

| | | | |
|---|---|---|---|
| உளனாக | என் கவிக்கு இலக்கா யிருக்கும்போது | யான் | நான் |
| என் நாவில் இன் கவி | எனது நாவினின்று உண்டான மதுர மான கவிகளை | ஒருவர்க்கும் | வேறொருவர்க்கும் |
| | | கொடுக்கிலேன் | கொடுக்கமாட்டேன். |

* * * [சொன்னால்விரோதமிது.] வேறு சிலரைக் கவி பாடுகின்றவர்களுக்கு ஹிதமுரைக்க இழிந்த ஆழ்வார், அவர்களுக்கு ருசி பிறக்கைக்காகத் தம்முடைய மதத்தை முற்றமுன்னம் அருளிச் செய்கிறார். தொடங்கும்போதே 'சொன்னால்விரோதமிது' என்கிறார்—நீங்கள் சில ப்ரயோஜனங்களை நினைத்து நரஸ்துதி செய்யாநிற்க, அதைத் தவிருமாறு நான் உரைக்குமிது உங்களுக்கு விரோதமாகவே யிருக்கும் என்றபடி. மூலத்தில் "சொன்னால் விரோதம்" என்றுள்ளதே யல்லது, இன்னார்க்கு விரோதம் என்று ஸ்பஷ்டமாக இல்லை: 'உங்களுக்கு விரோதமாகும்' என்பது போலவே 'சொன்னால் எனக்கு விரோதமாகும்' என்பதாகவும் கொள்ளலாம். இவர்க்கு என்ன விரோதம் என்னில்; நரஸ்துதியைப்பற்றி நெஞ்சினால் நினைப்பதும் வாயினால் சொல்வதுமே தமக்கு ஸ்வரூப விரோதம் என்று இவர் திருவுள்ளம்.

**ஆகிலும் சொல்லுவன்** = சொன்னால் விரோதமேயாகிலும் நீங்கள்படும் அனர்த்தம் பொறுத்திருக்க மாட்டாமையாலே சொல்லாதிருக்க கில்லேன்.—தன் பக்கலிலே விபரீத புத்தியைப் பண்ணிநிற்கிற பாபிஷ்டனான ராவணனைக் குறித்துப் பிராட்டி ஹிதோபதேசம் பண்ணினாப் போலவும், பாபிகளில் தலைவனான இரணியனைக் குறித்தும் அஸுரபுத்திரர்களைக் குறித்தும் ப்ரஹ்லாதாழ்வான் ஹிதோபதேசம் பண்ணினாப் போலவும், தன்னைத் திரஸ்கரித்த ராவணனைக் குறித்து விபீஷணாழ்வான் ஹிதோபதேசம் பண்ணினாப் போலவும் விமுகரானாரையும் குறித்து ஆழ்வார் ஹிதோபதேசம் பண்ணுகிறார் அவர்களையும் விடமாட்டாத கரையாலே.

**கேண்மினோ** = பால்குடிக்கக் கால் பிடிப்பாரைப் போலே அவர்களுடைய ஸ்வரூபலாபத்திற்குத் தாம் யாசகராய் நிற்கிறார். நான் சொல்வதைக் கேட்டபின் அப்படியே அனுஷ்டிக்க வேண்டிவருமே என்று நீங்கள் சிந்திக்க வேண்டா: அனுஷ்டிக்கவுமாம், அனுஷ்டியா தொழியவுமாம்; என் பேச்சுக்குக் காது கொடுத்தால் போதும் என்கிறார். கடலோசைக்குக் காது கொடுக்கிற நீங்கள் அப்படியே என்வார்த்தைக்கும் காது கொடுக்கலாகாதோ வென்கிறார்.

"ஆகிலும் சொல்லுவன் கேண்மினோ" என்று அவர்களுக்கு ஏதோ ஹிதமருளிச் செய்பவர்போலத் தொடங்கின ஆழ்வார் (அடுத்த அடிகளில்) அவர்கள் செய்யவேண்டியதை அருளிச் செய்யாமல் தம்முடைய நிலைமையைப் பேசுகிறார்; 'நாங்கள் இருக்கவேண்டிய நிலைமையைப்பற்றி நீர் ஏதுக்குச் சொல்லுகிறீர்?' என்று அவர்கள் சீறுவர்களோ வென்கிற அச்சத்தினால் போலும். வழிதவறிப் போமவர்கள் வழியே போவாரொருவனைக் கண்டால் நாமும் அப்படியே போகவேணு மென்று ஆசைப்பட வேண்டாவோ? நான்

இருக்கிறபடி கண்டீர்களே; இப்படியே யன்றோ நீங்களுமிருக்கவேணும் என்கைக்காகச் சொல்லுகிறபடி.

**என்னாவில் இன்கவி—** ஆழ்வாருடைய கவியானது விஷய வைலக்ஷண்யத்தாலே தம்மையும் ஈடுபடுத்துகிறதாயிற்று. "பாலேய்தமிழரிசைகாரர் பத்தர்பரவுமாயிரம்" "ஆயிரத்துளிப்பத்துங் கேட்டு ஆரார்வானவர்கள் செவிக்கினிய செஞ்சொல்லே" "யானாய்த் தன்னைத் தானபாடித் தென்னாவென்னு மென்னம்மான்" என்று தமிழ்ப்பண்டிதர்கட்கும் இசைகாரர்கட்கும் பக்திமான்களுக்கும் நித்யஸூரிகட்கும் எம்பெருமானுக்கும் போக்யமாகிற முகத்தாலே ஆழ்வார்தமக்கும் (தம் கவி) போக்யமாவது குற்றமன்று.

**யான் ஒருவர்க்கும் கொடுக்கிலேன்—** எம்பெருமானொருவனையே துதிக்கப் பிறந்த நான் வேறொருவரையும் துதிக்கமாட்டேன் என்றபடி. 'எம்பெருமானையே துதிப்பேன்' என்று அந்வயமுகத்தாலே சொல்லாமல் இப்படி வ்யதிரேக முகத்தாலே சொல்லுவதில் ஒரு கருத்து விசேஷமுண்டு; எம்பெருமானைத் துதியாமலிருந்தாலுமிருக்கலாம், பிறரைத் துதிக்கலாகாது என்பதாம். "மறந்தும் புறந்தொழாமாந்தர்" என்றும் "கடன்மல்லைத் தலசயனத்துறைவாரை யெண்ணாதே யிருப்பாரை இறைப்பொழுது மெண்ணோமே" என்றும், "கண்ணன் கண்ணமங்கை நகராளன்கழல்சூடி யவனை யுள்ளத்து, எண்ணாத மானிடத்தை யெண்ணாதபோதெல்லாம் இனியவாறே" என்றுமுள்ள பாசுரங்கள் காணத்தக்கன.

திருவேங்கடமுடையானே என் கவிக்கு விஷயமாகக் கூடியவன் என்கிறார் பின்னடிகளால். எம்பெருமானை வருணிப்பதோடு அவன் எழுந்தருளியிருக்கும் தலத்தை வருணிப்பதோடு, அங்குள்ள சேதநாசேதநங்களை வருணிப்பதோடு வாசியற எல்லாம் தமது கவிக்குப் பரமோத்தேச்யம் என்னுமிடத்தைப் பின்னடிகளில் ஆழ்வார் காட்டியிருக்குமழகு காணத்தக்கது.

**என் ஆனை—** அநுபவ ரஸிகர்களான ஆழ்வார்கள் எம்பெருமானை யானையாகப் பலவிடங்களிலும் பேசுவர்கள். யானைக்கும் எம்பெருமானுக்கும் பல படிகளாலே ஸாம்யமுண்டு ;—

1. யானை, எத்தனை தடவை பார்த்தாலும் பார்க்கும்போதெல்லாம் அபூர்வவஸ்து போலவேயிருந்து பரமாநந்தம் பயக்கும்; எம்பெருமானும் "எப்பொழுதும் நாள் திங்களாண்டூழியூழி தொறும், அப்பொழுதைக்கப்பொழுதென்னாராவமுதமே" என்னும்படி யிருப்பன்.

2. ஆனையின்மீது ஏற வேண்டியவன் ஆனையின் காலைப்பற்றியே ஏறவேண்டும்; எம்பெருமானிடம் சென்று சேரவேண்டியவர்களும் அவனது திருவடியையே பற்றிச் சேரவேண்டும்.

3. ஆனை தன்னைக் கட்டத் தானே கயிறு எடுத்துக்கொடுக்கும்; "எட்டினொடிரண்டெனுங் கயிற்றினால்" (திருச்சந்த விருத்தம்) என்கிறபடியே எம்

பெருமானைக் கட்டுப்படுத்தும் பக்தியாகிற கயிற்றை அவன்தானே தந்தருளுவன். „ [illegible]." "மதிநலமருளினன்."

4. யானையை சிராட்டினாலும் அடுத்த க்ஷணத்திலே அழுக்கோடே சேரும்; எம்பெருமான் சுத்த ஸத்வமயனாய்ப் பரமபவித்திரனாயிருக்கச் செய்தேயும் *பொய்ந்நின்ற ஞானமும் பொல்லா வொழுக்குமழுக்குடம்பு முடைய நம் போல்வாரோடே சேரத் திருவுள்ளமாயிருப்பன் வாத்ஸல்யத்தாலே. „ [illegible] ஸ்ரீரங்கராஜ [illegible]." என்ற ஸ்ரீரங்கராஜஸ்தவ ச்லோகத்தின்படியுமாம்.

5. யானையைப் பிடிக்கவேண்டில் பெண் யானையைக்கொண்டே பிடிக்க வேண்டும்; பிராட்டியின் புருஷகாரமின்றி எம்பெருமான் வசப்படான்.

6. யானை, பாகனுடைய அநுமதியின்றித் தன்பக்கல் வருமவர்களைத் தள்ளிவிடும்; எம்பெருமானும் "வேதம் வல்லார்களைக் கொண்டு விண்ணோர் பெருமான் திருப்பாதம் பணிந்து" என்கிறபடியே பாகவதர்களை முன்னிட்டுப் புகாதாரை அங்கீகரித்தருளான்.

7. யானையின் பாஷை யானைப் பாகனுக்கே தெரியும்; எம்பெருமானுடைய பாஷை திருக்கச்சிநம்பி போல்வார்க்கே தெரியும். (பேரருளாளப் பெருமாளோடே பேசுமவரிறே நம்பிகள்.)

9. யானை உண்ணும்போது இறைக்கும் அரிசி பலகோடி அாறுயிரம் எறும்புகளுக்கு உணவாகும்; எம்பெருமான் அமுது செய்து சேஷித்த ப்ரஸாதத்தாலே பலகோடி பக்தவர்க்கங்கள் உஜ்ஜீவிக்கக் காண்கிறோம்.

10. யானைக்குக் கைநீளம்; எம்பெருமானும் * அலம்புரிந்த நெடுந் தடக்கையனிறே. "நீண்ட அத்தக்கருமுகிலை யெம்மான்றன்னை." (பெரிய திருமொழி. 2—5—2.)

11. யானை இறந்த பின்பும் உதவும்; எம்பெருமானும் தீர்த்தம் ப்ரஸாதித்துத் தன்னுடைச் சோதிக் கெழுந்தருளின பின்பும் இதிஹாஸ புராணங்கள் அருளிச் செயல்கள் மூலமாகத் தனது சரிதைகளை உணர்த்தி உதவுகின்றானிறே.

12. யானைக்கு ஒரு கையேயுளது; எம்பெருமானுக்கும் கொடுக்கும் கையொழியக் கொள்ளுங் கை இல்லையிறே. „ [illegible]."

13. பாகனுக்கு ஜீவனங்கள் ஸம்பாதித்துக் கொடுக்கும் யானை; எம்பெருமானும் அர்ச்சக பரிசாரகப்ரப்ருதிகளுக்கு.

இங்ஙனே மற்றும் பல உவமைப் பொருத்தங்களுங் கண்டு கொள்க.

இப்பாசுரத்தில் திருவேங்கடமுடையானைச் சொன்னது பரவ்யூஹ விபவ அந்தர்யாமி அர்ச்சாவதாரரூப பஞ்சப்ரகாரவிசிஷ்டனான எம்பெருமானைச் சொன்னபடி. .... .... .... .... (க)

சிடம் காட்டி மதிப்புரை வாங்கப் பார்த்தான்; அவன் எழுதினது நன்றாக இல்லாமற் போனாலும் வெகு நன்றாயிருக்கிறதென்றே சொல்லியாக வேண்டும்; இல்லாவிடில் அவன் ப்ரபுவாகையாலே ஏதேனும் தீங்கிழைக்க நினைப்பனோ வென்றாசங்கித்தார் நஞ்சீயர்; உத்தமாச்ரமியான நாம் இதில் அகப்பட்டுக் கொள்வானேன் என்றெண்ணி நம்பிள்ளையை நோக்கி 'நீர் இவ்வுரையைக் கேட்டு ஸம்பாவனை பண்ணும்' என்று நியமிக்க, ஜீயருடைய திருவுள்ளத்தை உணர்ந்த பிள்ளைதாமும் அங்ஙனே அவ்வுரையை வாசிக்கக்கேட்டு அவனுடைய மனம் உகக்குமாறு கொண்டாடிக் கூறவேணுமென்று கருதி, "இவ்வுரை ஆழ்வாருடைய திருவுள்ளக் கருத்துக்குப் பொருத்தமாகவே மிக நன்றாக அமைந்திருக்கின்றது" என்று அருளிச் செய்ய, அது கேட்ட அவ்வுரைகாரன் [ராஜன்] "ஆழ்வார் வேறொரு காரியமுமில்லாமல் பிரபந்தம் பேசினார்; நான் இராஜ காரியங்கள் பலவற்றையும் நோக்கிக் கொண்டே இடையிடையில் இது எழுதினேன்; ஆதலால் ஆழ்வார்க்கும் எனக்கும் எவ்வளவு வாசியுண்டென்று ஆலோசித்தருளவேணும்" என்றானாம். "தன்னை யொன்றாகத் தன் செல்வத்தை வளாமதிக்கும்" என்றவிடத்திற்கு இது மிகவும் பொருத்தமான ஸம்வாதம்.

**இம்மானிடரை** என்னவேண்டியிருக்க "இம்மானிடத்தை" என்று அஃறிணையாகச் சொன்னது அலக்ஷ்யதா புத்தியினால். இங்கு ஈட்டு ஸ்ரீஸூக்தி காண்மின்;—"(இம்மானிடத்தை) மநுஷ்யரென்று சொல்லவும் பாத்தம் காண்கிறிலர் காணும். அசேதநங்களைச் சொல்லும்படியிலே சொல்லுகிறார். தன்னை மெய்யாகவறியாதவன் அபிப்ராயமிறே."

**இம்மானிடத்தைக் கவிபாடி என்?**— அற்ப மனிதர்களிடத்தில் உள்ள குற்றங்களை மறைத்து இல்லாத நற்றங்களை ஏறிட்டுக் கவிபாடுவதனால் கவிபாட்டுண்கிறவர்களுக்கு ஓர் அவமானம் தேறுமேயல்லது வேறில்லை; ஏனென்னில், கூறப்படுகிற நற்றம் உண்மையாகவிருந்தால் குறையில்லை; குற்றம் நிறைந்திருக்குமிடத்திலே ஏறிட்டுக் கூறப்படும் நற்றமேயாதலால் இந்த நற்றங்களைப் பிறர் கேட்கும்போது உண்மையான குற்றமே நினைவுக்கு வரும்; அங்ஙனம் குற்றம் நினைவுக்கு வருவதற்காகவே கவிபாடினதாகத் தேறுகின்றமையால் இதனால் அவமானமேயாயிற்று பலிப்பது; ஆக, கவிபாடுகிற வியாஜத்தினால் அவர்களை அவமானப்படுத்தி வைப்பதில் என்ன லாபம்? என்கிறாராழ்வார்.

பின்னை யாரைக் குறித்துக் கவிபாடவேணுமென்ன, திருக்குறுங்குடி யெம்பெருமானைக் குறித்துக் கவிபாடவேணுமென்கிறார் பின்னடிகளில். திருக்குறுங்குடி யென்றது ஸகல திவ்ய தேசங்களுக்கும் உபலக்ஷணம். பரவாஸுதேவனையும் க்ஷீராப்தி நாதனையும் ராமக்ருஷ்ணாதியவதாரங்கள் செய்தவனையும் ஸர்வாந்தர்யாமியாயும் கோயில் திருமலை பெருமாள் கோயில் முதலிய திவ்யதேசங்களில் கோயில் கொண்டெழுந்தருளி யிருப்பவனையுமுள்ள ஸர்வேச்வரனொருவனையே கவிபாடவேணுமென்றபடி.

**குறுங்குடி** = பாண்டிநாட்டுத் திருப்பதிகள் பதினெட்டினுள் ஒன்று. குறுகியவனான வாமனனது க்ஷேத்ரமாதலால் இத்தலத்திற்குக் குறுங்குடியென்று பெயர் வந்ததென்பர். இத்தலத்திலுள்ள எம்பெருமான்களுள் ஒரு எம்பெருமான் ஸ்ரீபாஷ்யகாரர் (உடையவர்) பக்கலிலே திருமண்காப்பு சாத்திக் கொண்டு வேதார்த்தமுங் கேட்டு சிஷ்யனாய் 'நாமும் நம்பி ராமானுசனையுடையோம்' என்கையாலே அப்பெருமானுக்கு வைஷ்ணவநம்பி யென்று திருநாமம். ஆனதுபற்றியே வைஷ்ணவவாமந க்ஷேத்ரம் என்றும் இத்தலம் வழங்கப்படும். "வைஷ்ணவவாமநத்தில் நிறைந்த நீலமேனியின் ருசிஜநக விபவ லாவண்யம் பூர்ணம்" என்ற ஆசார்யஹ்ருதய திவ்யஸூக்தி காண்க. நம்மாழ்வாருடைய திருவவதாரத்திற்குக் காரணமாயிருந்தவரும் இத்தலத்து நம்பியே.

**கண்ணன் குறுங்குடி** = கண்ணபிரானாகிய ஸர்வேச்வரன் 'என்னது' என்று அபிமானித்து நித்யவாஸம் செய்யப்பெற்ற குறுங்குடி என்று ஆசார்யர்கள் திருவுள்ளம் பற்றின பொருள். "**கண், நண், குறுங்குடி** என்று வியாக்யானம் பண்ணினார்கள் தமிழர்" என்ற பட்டர் ஸ்ரீஸூக்தியும் காண்க. 'கண்ணனுடைய குறுங்குடி' என்று பொருள் கொள்ளுமிடத்தில் ஸ்வல்பம் அநுபபத்தியுண்டு; "தேவதத்தனுடைய க்ருஹத்திலுள்ள தேவதத்தன்" என்று வ்யவஹரிக்க வொண்ணாதாப்போலே 'ஸர்வேச்வரனுடைய குறுங்குடியிலுள்ள ஸர்வேச்வரன்' என்கிற வ்யவஹாரமும் ஒண்ணாதாகையாலே கண், நண் என்று பிரித்து விசேஷணமாக்கிப் பொருள் சொல்வதே பொருந்தும் என்று சிலர் கருதக்கூடும்; அப்படியில்லை; '**கண்ணன்குறுங்குடி**' என்றே ப்ரஸித்தியென்று வைத்துப் பொருள் சொல்வதில் ஆசார்யர்களின் நோக்கு என்றுணரவேணும்.

குளன்—குளம்; மகரனகரப்போலி. .... .... (உ)

ஒழிவொன்றில்லாத பல்லூழிதோறூழிநிலாவ * போம்
வழியைத்தரும் நங்கள் வானவரீசனைநிற்கப்போய் *
கழியமிகநல்ல வான்கவிகொண்டுபுலவீர்காள் ! *
இழியக்கருதி ஓர்மானிடம்பாடலென்னாவதே ? (ங)

| | |
|---|---|
| ஒழிவு ஒன்று இல்லாத | ஒழிவு சிறிதுமில்லாத |
| பல் ஊழி ஊழி தோறு | கணக்கற்றுள்ள கல்பங்களிலும் |
| நிலாவ | நிலைநின்று அநுபவிக்கும்படி |
| போம் | செல்லக்கடவதான |
| வழியை | வழிபாடாகிய கைங்கர்யத்தை |
| தரும் | தந்தருள்கின்ற |
| நங்கள் வானவர் ஈசனை நிற்க | நமது தேவாதி தேவனான பெருமானிருக்க, |
| போய் | அவனை யுபேக்ஷித்து |
| கழிய மிக நல்ல | மிகவும் இனிய |
| வான் கவி கொண்டு | திவ்யமான கவிகளைக் கொண்டு |
| புலவீர்காள் | பண்டிதர்களே ! |
| இழிய கருதி | அதோகதியையடைய நினைத்து |
| ஓர் மானிடம் | அற்ப மனிதர்களை |
| பாடல் | பாடுவதால் |
| ஆவது என் | (உங்கட்கு) உண்டாகும் பயன் யாது ?. |

* * * [ஒழிவொன்றில்லாத.] பரமவிலக்ஷணனும் மஹோபகாரகனுமான எம்பெருமானிருக்க அவனைவிட்டு அற்பமனிசரைக் கவிபாடி என்ன பலன்? என்கிறார். ஒரு விச்சேதமில்லாதபடி யாவதாத்மபாவியான காலமெல்லாம் நிலைநின்று அநுபவிக்கும்படி செல்லக் கடவதாயுள்ள வழிபாடான கைங்கரியத்தைத் தந்தருளி நம்மை ஆட்கொள்பவன் எம்பெருமான்; இங்ஙனே கைங்கரியம் செய்கிற நித்யஸூரிகளை ஒரு நாடாகவுடையவன்; இப்படிப்பட்ட எம்பெருமான் விஷயத்தில் எத்தனையூழிகாலம் கவிபாடினாலும் ஏற்றிருக்கும்; பாடுவதற்கும் மெய்யான திருக்குணங்கள் எல்லைகடந்தவையுண்டு; பாடுகிறவர்களுக்கும் ஸகலபுருஷார்த்த ஸித்தியுண்டு; பாட்டுக்கும் மிக்க சிறப்புண்டு; இப்படியிருக்க, தகாத விஷயங்களைத் தேடித்திரிந்து மானிடம் பாடி அதோகதியை யடையப் பார்க்கிறீர்களே, இதுவென் கொல்! என்கிறார்.

வழியைத்தரும் என்பதற்கு அர்ச்சிராதி மார்க்கத்தைக் கொடுத்தருள்கின்ற என்று பொருள் சொல்வாருமுளர்.

வானவரீசனை நிற்க— வானவரீசனைவிட்டு என்றபடி. இனி, 'ஈசனை' என்ற ஐகாரத்தைச் சாரியையாக வைத்து முதல் வேற்றுமைப் பொருள் கொள்ளுதலுமொன்று. "இவன் நம்மை நோக்கி ஒரு கவிபாடுவனோ" என்று எம்பெருமான் ஆசையோடிருக்க— என்று ரஸமயமான பொருள்கூறுவர் நம்பிள்ளை.

நிற்கப்போய் என்றவிடத்து, 'போய்' என்பதற்கு ஈட்டில், "புறம்பே பாடுகைக்கு விஷயம் தேடிப்போய்" என்று அருளிச்செய்து விட்டு மேலே பணித்த ஸ்ரீஸூக்திகள் பரமரஸம்;— "இவன் கவி பாடி (ட) வாராநின்றான் என்று கேட்டவாறே கழியப்போம்— இவன் கவி கேட்டு ஏதேனும் தனக்குக் கொடுக்க வேண்டுகிறதாகக் கொண்டு; இவனும் அவன் புக்கவிடம்புக்கு இத்தைக் கேட்பித்து ஒன்று பெற்றேனாய் விடவேணும் என்று தொடர்ந்து போமே; ஆக, அவன் போக இவன் போக, போகா நிற்குமித்தனை."— ஒரு அற்பனை மஹாதனிகனாக நினைத்து ஒரு கவிபாணவன் அவன் விஷயமாக ஒரு நூல் எழுதி அதை அந்த ப்ரபுவினிடத்தில் வாசித்துக் காட்டி ஏதேனும் வெகுமதி பெறவேணுமென்றெண்ணிப்போக, இதனையறிந்த அந்தப்ரபு 'இக்கவியின் கண்ணில் நாம் தென்பட்டால் அவன் தனது நூலை வாசித்துக்காட்ட அவகாசம் கொடுக்க நேர்ந்துவிடும்; பிறகு ஏதேனும் காசு கொடுக்கவும் வேண்டிவரும்; ஆதலால் நாம் இவனுக்குப் புலப்படாமே அப்பால் போய்விடுவதே நலம் என நினைந்துத் தன்னை மறையப்பார்ப்பன்; அவனை விடாமல் பிடிப்பதே கருமம் என்று கவியும் தொடர்ந்து செல்வன்; ஆக அவன் போவதும் இவன் போவதுமாய், போக்கேயாயிருக்குமென்றதாயிற்று.

கழியமிகநல்ல— "சாலவுறுதவ நனிகூர்கழி மிகல்" என்ற நன்னூற் சூத்திரப்படிக்கும், "கழியமிக்கதோர் காதலள்" இத்தியாதிப் பிரயோகங்களின் படிக்கும் கழிய என்பதற்கு 'மிகவும்' என்கிற பொருள் ப்ரஸித்தம்; கழியமிக—

அத்யந்தம் என்றபடி. இப்பொருள் கிடக்க, நம்பிள்ளை ரஸமாக வேறொரு பொருளும் அருளிச் செய்கிறார் ;— (சட்டில்) "[கழியமித்யாதி.] கவிபாட்டுண்கிறவனுக்கு இல்லாத நன்மைகளைவிட்டுச் சொல்லுகையாலே அவனுக் கடங்காததாயிருக்குமிறே ; இவன் ஆரைச் சொல்லுகிறது, நம்மையன்று போலும் என்று ப்ரமித்திருக்குமிறே; ஆகையாலே இவனைவிட்டுக் கழிய," என்கிற ஸ்ரீஸூக்திகள் காண்க. "[illegible]—அர்பதாரதந் ருணக்கிற பகவதி ந, ததத்கர்க்க சௌர்யைः பரேஷாம் ஸ்துத்யத்வாத்." என்ற ஸ்ரீரங்கராஜஸ்தவ ஸ்ரீஸூக்தியின்படியே பகவானைப்பற்றிச் சொல்ல வேண்டியவற்றை யெல்லாம் அற்பமனிசர் திறத்திலே ஏறிட்டுச் சொன்னால் அவை அந்த வ்யக்திகளை விட்டுக் கழிந்து போவது ப்ராப்தமேயாம்.

வான்கவி— திவ்யமான கவி என்றபடி. 'கவி' என்கிற சொல்—பாடல்களை இயற்றும் பண்டிதரையும், அப்பண்டிதரால் இயற்றப்படும் பாடல்களையும் சொல்லும் ; "இன்கவி பாடும் பரமகவிகளால்" என்ற பாசுரத்தில் 'கவிபாடும்' 'கவிகளால்' என்றவற்றாலும் இதனையறியலாம்.

புலவீர்காள்!— நீங்கள் விவேகிகளல்லவோ ? நல்லபாடல்களை அற்பர்கள் விஷயத்திலே உபயோகப்படுத்தலாகாதென்று அறியீர்களோ? அஸ்தானத்திலே அருமருந்தன்ன வாக்கைச் செலுத்தலாமோ ? என்பது குறிப்பு.

இழியக்கருதி— நான்கு நிகளிலும் நீங்கள் ஏதோ உயர்ந்நிலை அடைய வேணுமென்று கருதினாலும் உண்மையில் அதோகதியையடையக் கருதுவதாகவே எனக்குப் புலப்படுகிறது என்று காட்டுகிறபடி. "அறிவுடையராகில் நின்ற நிலைக்கு மேலே ஓர் ஏற்றம் தேடிக்கொள்ளுமதொழிய, கீழேபோய் அவஹதிக்கத் தேடுவாருண்டோ?" என்பது ஈடு.

ஓர் மானிடம்பாடல் என்னுவது ?= ஒரு அற்பனைப்பாடுகை உங்களுடைய விவேகத்திற்குச் சேருமோ? அதனால் உங்களுக்குத்தான் ஒரு ப்ரயோஜனமுண்டோ? கவிக்குத் தான் ஏற்றிருக்கிறதோ? எதற்காக அபிமானமாய்ப் பாடுகிறீர்கள் என்றவாறு. ... ... ... (ங)

என்னாவதெத்தனைநாளைக்குப்போதும் ? புலவீர்காள் ! *
மன்னுமனிசரைப் பாடிப்படைக்கும்பெரும்பொருள் *
மின்னார்மணிமுடி விண்ணவர்தாதையைப்பாடினால் *
தன்னாகவேகொண்டு சன்மஞ்செய்யாமையுங்கொள்ளுமே. (ச)

| | | | |
|---|---|---|---|
| புலவீர்காள் | பண்டிதர்களே ! | பெரும் பொருள் | பெருஞ் செல்வம் |
| மன்னு | அல்பாயுஸ்ஸுக்களான | என் ஆவது | யாதாவது ? |
| மனிசரை | மனிதர்களை | எத்தனை நாளைக்கு போதும் | (அது) எத்தனை நாளைக்குப் பற்றும்? |
| பாடி | கவிபாடி | | |
| படைக்கும் | (அதனால்) சம்பாதிக்கின்ற | | |

| | | | |
|---|---|---|---|
| மின் ஆர் | ஒளி நிறைந்த | தன் ஆகவே கொண்டு | தனக்கு அடிமையாகவே கொண்டு |
| மணி முடி | மணிமகுடத்தை யுடையனான | | |
| விண்ணவர் தாதையை | தேவாதி தேவனை | சன்மம் செய்யாமையும் கொள்ளும் | இனிப் பிறவிகள் உண்டாகாதபடியாகவும் அங்கீகரித்தருள்வன். |
| பாடினால் | கவிபாடினால் (அப் பெருமான் உங்களை) | | |

* * * [என்னாவது] கவிபாடினார்க்கு ஸகலவரிசைகளும் கொடுக்கவல்லவனான எம்பெருமானைவிட்டு, இன்றிருப்பார் நாளையிரார் என்னும்படியான அன்றிரர் களைக் கவிபாடுவதில் என்ன பயனுண்டென்கிறார்.

என்னாவது— அற்பர்களைக் குறித்து நீங்கள் கவிபாடுவதனால் உங்களுக்கு என்ன கிடைக்கப் போகிறது? என்றார்; அது கேட்டவர்கள், 'கவிபாடினால் ஒன்றும் கிடைக்காமற் போகுமோ? கவிபாடுவாரும் பாடினவர்களுக்குக் கொடுப்பாருமாய்க் காணப்படவில்லையோ? என்றார்கள்; அதற்கு மேல் எத்தனை நாளைக்குப் போதும்? என்கிறார். கவிபாடப் பரிச்ரமப்பட்ட நாள்களோ பலபல இருக்கும்; அந்நாட்களுள் ஒரு நாளைய ஜீவனத்திற்குக் காணுமோ அவன் கொடுக்கும் பொருள்— என்றபடி. அந்த அற்பபலனுக்கும் அவகாசமில்லையாம்படி அல்பாயுஸ்ஸுக்களாகவன்றோ அவர்கள் தாமிருப்பது என்கிறார் மன்னா மனிசரை என்பதனால். ஒருவன் விசேஷமாக ஒரு வருஷகாலம் வெகு பரிச்ரமப்பட்டு ஒரு புத்தகமெழுதி முடித்து அதை அவனிடம் கொண்டுபோய்ப் படித்துக்காட்டிப் பரிசுபெற வேணுமென்றெண்ணிப் புறப்படும்போதே 'அவன் மாண்டான்' என்று எதிரே ஆள்வரும்படியாகவன்றோ இருப்பது. "பாண்டேன் வண்டறையும் குழலார்கள் பல்லாண்டிசைப்ப, ஆண்டார் வையமெல்லாமரசாகி முன்னாண்டவரே மாண்டார் என்றுவந்தாரந்தோ." என்ற பெரியதிருமொழிப் பாசுரம் இங்கு நினைக்கத்தகும்.

பின்னை, யாரைப்பாடவேணுமென்ன, நித்யஸ்ரீரதனைப்பாடவேணுமென்கிறார் மூன்றாமடியினால்.

மின்னார் மணிமுடி என்பது விண்ணவர்க்கும் விசேஷணமாகலாம், விண்ணவர்தாதையான எம்பெருமானுக்கும் விசேஷணமாகலாம். விண்ணவர்க்கு விசேஷணமானபோது, அவர்கள் எம்பெருமானைத் துதித்துத் துதித்து முடிபெற்றவர்கள் என்றதாகிறது. விண்ணவர்தாதைக்கு விசேஷணமானபோது, கவி பாடுமவர்கட்குப் பரிசளிக்க ஸஜ்ஜமான முடியையுடையவன் என்றதாகிறது.

எம்பெருமானுக்குத்தான் முடியுண்டு; விண்ணவர்கட்கு முடியுண்டோ வென்கிற சங்கைக்குப் பரிஹாரமாக "முடியுடைவானவர்" (10-9-8) என்கிற திருவாய்மொழிப் பாசுரத்தை நினைப்பது.

தன்னாகவே கொண்டு— தனக்கே அனந்யார்ஹ சேஷபூதராக அடிமை கொண்டு என்றபடி. * ததாமி [illegible]

வாஸம் வாஸயேவேதி * தம்மையே நாளும் வணங்கித் தொழுவார்க்குத் தம்மையே யொக்கவருள் செய்வர் * என்கிறபடியே தன்னோடொக்கப்பண்ணி என்னும் பொருள் கூறுவர்.

சன்மம் செய்யாமையுங் கொள்ளும் = நீசரைக் கவிபாடுகைக்கு அடியான சரீர ஸம்பந்தத்தையும் தொலைத்தருள்வன். சன்மம் ஏற்பட்டால் பசியும் ஏற்படுகிறது; அதனால் அற்பரிடம் சென்று துதிக்க நேருகின்றது; சன்மமே யில்லையாகில் நரஸ்துதிப்ராப்தி ப்ரஸங்கமும் இல்லையாமென்று ஜன்ம ஸம்பந்தத்தையே போக்கியருள்வன் எம்பெருமான். ... ... .... (ரு)

கொள்ளும்பயனில்லைக் குப்பைகிளர்த்தன்னசெல்வத்தை *
வள்ளல்புகழ்ந்து நும்வாய்மையிழக்கும்புலவீர்காள்! *
கொள்ளக்குறைவிலன் வேண்டிற்றெல்லாம்தரும்கோதில் * என்
வள்ளல்மணிவண்ணன்தன்னைக் கவிசொல்லவம்மினோ. (௬)

| | | | |
|---|---|---|---|
| கொள்ளும் பயன் இல்லை | நீங்கள் பெறும் பலன் சிறிதுமில்லையாம்படி | கொள்ள குறைவு இலன் | நீங்கள் பாடுகிற துதிமொழிகளைப் பொருத்தமாகக் கொள்ளவல்ல பூர்த்தியை யுடையவனும் |
| குப்பை கிளர்த்தன்ன செல்வத்தை | குப்பையைக் கிளறினாற் போல் குற்றம் குறைகளே தோற்றும்படியான செல்வமுடைய அற்பரைக் குறித்து | வேண்டிற்று எல்லாம் தரும் | வேண்டிய எல்லாவற்றையும் தந்தருள்பவனும் |
| | | கோது இல் | குற்றமற்றவனும் |
| வள்ளல் புகழ்ந்து | உதாரனே! என்று கொண்டாடி | என் வள்ளல் | என் விஷயத்தில் மஹோபகாரங்கள் செய்தவனும் |
| நும் வாய்மை இழக்கும் | உங்களுடைய ஸத்யத்தை இழந்தொழிகிற | மணிவண்ணன் தன்னை | நீலமணி வண்ணனுமான பெருமானை |
| புலவீர்காள் | புலவர்களே!, | கவி சொல்ல வம்மின் | கவிபாட வாருங்கள். |

* * * [கொள்ளும்பயனில்லை] ஹேயகுணம் பலித்த நீசரைவிட்டு, ஸமஸ்த கல்யாண குணாத்மகனும் நம் அபேக்ஷித மெல்லாம் தரவல்லனுமான எம்பெருமானைக் கவிபாட வாருங்கோளென்கிறார். பிறரைக் கவிபாடுவது ஒரு ப்ரயோஜனத்திற்காகவேயன்றி ஸ்வயம் ப்ரயோஜனமாகவன்றே; அப்படி நீங்கள் கருதுகிற ப்ரயோஜனம் பெறுவதில்லை என்று முக்துறமுன்னம் அருளிச் செய்கிறார் — பாவிகளின் உள்ளத்திற் பதிவதற்காக.

பயனில்லை யென்பது மாத்திரமன்று; இழவுமுண்டு என்கிறார் மேல். [குப்பை கிளர்த்தன்ன செல்வத்தை வள்ளல்புகழ்ந்து நும் வாய்மை யிழக்கும் புலவீர்காள்!,] நீங்கள் வாய்பெற்ற பேற்றை இழக்குமத்தனையே யுள்ளது என்கிறார். குப்பைகளைக் கிளறினால் கெடுதலான அம்சங்கள் தென்படுமே யல்லது நன்றானதொன்றும் தென்பட மாட்டாது; அதுபோல நீசர்களின் சரிதைகளைக் கவிபாடப் புகுந்தால் மறைந்து கிடக்கும் மாசுகள்தாம் வெளிவரும் என்று அநுபவத்திற்குப் பொருத்தமாக அருளிச் செய்கிற அழகு காண்மின்.

செல்வத்தை வள்ளல் புகழ்ந்து— அற்பமான செல்வத்தைக் கனத்ததாகப் பாடியென்று தாற்பரியம். "ஸம்பத்தையுடைய க்ஷுத்ரஜாதியை மஹோதாரனாகப் புகழ்ந்து" என்பது பன்னீராயிரம். வாய்மை யிழத்தலாவது—பொய் சொல்லுபவர்கள் என்கிற அபக்யாதி பெறுதல்.

பகவத் விஷயத்தில் கவிபாடினால் விளையும் நன்மைகளைப் பின்னடிகளில் அருளிச் செய்கிறார் ;—

கொள்ளக் குறைவிலன் — இதற்கு ஸாமாந்யமாகத் தோன்றும் கருத்து ஒன்றுண்டு; மிகஅற்பமான செல்வமுடைய அற்பர்களிடத்திலே நாம் பலவுங்கொள்ளக் கொள்ள, அவர்களுக்கு அது குறைந்துபோம்; அங்ஙனன்றிக்கே எம்பெருமான் அழியாப்பெருஞ் செல்வமுடையவனாதலால் நாம் அவன்பக்கலில் எவ்வளவு செல்வம் கொண்டாலும் அங்குச்சிறிதும்குறை ஏற்படாது என்பதாக.—நம் ஆசாரியர்கள் அருளிச்செய்வது இங்ஙனேயன்று; (ஈடு காண்மின் ;—) "நீங்கள் யாவையாவையில ஏற்றங்களையிட்டுக் கவிபாடினீகோள் அவற்றை ஸ்வீகரிக்குமிடத்தில் ஒருகுறையுடையனல்லன் ; ஸமஸ்தகல்யாண குணாத்மகன்."— அற்பமனிசர்விஷயத்திலே ஏற்றங்களை ஏறிட்டுக் கவிபாடினால் அவற்றைக் கொள்ளும் யோக்யதை அவர்களுக்குக்கிடையாது ; எம்பெருமான் விஷயத்தில் எவ்வளவு ஏற்றமாகக் கவிபாடினாலும் அந்த ஏற்றமெல்லாம் அங்கே மிகவும் பொருத்தமாக அந்வயிக்கக் குறையில்லை யென்றவாறு.

வேண்டிற்றெல்லாம் தரும் — நீச மனிசர்கள் ஒருவனுக்கு ஒன்றைக் கொடுத்தால் கொள்ளுகிறவனுக்கு மற்றொன்று தேவையானால் அதைக் கொடுக்க அவர்கள் அசக்தரேயாவர்; இங்கு அபேக்ஷிப்பார்தாம்வாலே இழக்கில் இழக்குமித்தனை; எம்பெருமான் தரமாட்டாத தொன்றில்லை. ஸ்ரீவிஷ்ணுதர்மத்தில் மார்க்கண்டேய தலத்தில—"தெவெஷு ஹஷீலாவநஸொவிஞெகவிமஃ ஷவஷிஷி ஸ்ரீஹா வநமாவ காநஷியஷீ। வெவெஷஙா: பாகொஷம் ஹுவாதூ விஷ்ணு லஸாஹா:, லகுலுமஹுஷொஷி விஷ்ணு:—தேவேந்த்ரஸ் த்ரிபுவநம் அர்த்தமேகபிங்க: ஸர்வார்த்திம் த்ரிபுவநகாம் ச கார்த்தவீர்ய:, வைதேஹ: பரமபதம் ப்ராஸாத்ய விஷ்ணும் ஸம்ப்ராப்தஸ் ஸகல பலப்ரதோ ஹி விஷ்ணு:" என்ற ச்லோகம் இங்கு அநுஸந்தேயம். [ஏகபிங்க:—குபேரன்.]

கோது இல்—கொடுக்குமிடத்தில் கோதாவது— 'கொடுத்தோம்' என்றிருக்கையும், கைம்மாறு கருதிக்கொடுக்கையும், அளவுபடக் கொடுக்கையும் முதலியன ; எம்பெருமானது ஔதார்யத்தில் இவை யித்தனையுமில்லை. 'என் வள்ளல்' என்கையாலே எம்பெருமானது ஔதார்யத்தின் சீர்மை ஆழ்வார்க்கு ஸ்வாநுபவஸித்த மென்பது விளங்கும்.

மணிவண்ணன் — எம்பெருமானிடத்தில் ஔதார்யமில்லை யென்றே கொண்டாலும் வடிவழகொன்றே போதுமே கவிபாடுகைக்கு என்றவாறு. ... (௩)

வம்மின்புலவீர் ! நும்மெய்வருத்திக்கைசெய்துய்ம்மினோ *
இம்மன்னுலகினில் செல்வரிப்போதில்லைநோக்கினோம் *
நும்மின்கவிகொண்டு நும்நுமிட்டாதெய்வமேத்தினால் *
செம்மின்சுடர்முடி என்திருமாலுக்குச்சேருமே. (௬)

| | |
|---|---|
| புலவீர் | புலவர்களே ! |
| வம்மின் | (நரஸ்துதியை விட்டு) வாருங்கள் ; |
| நும் மெய் | உங்களது உடலை |
| வருத்தி | சிரமப் படுத்தி |
| கை செய்து | தொழில் செய்து |
| உய்ம்மின் | ஜீவியுங்கோள் ; |
| மன் | (ப்ரவாஹரூபேண) நித்யமாயிருக்கின்ற |
| இ உலகினில் | இந்த லோகத்தில் |
| செல்வர் | (உங்களுக்குப் போதுமானதைக் கொடுக்க வல்ல) ஸ்ரீமான்கள் |
| இல்லை | கிடையார் ; |
| இப்போது நோக்கினோம் | (இதனை) இப்போது ஆராய்ந்து அறிந்தோம் ; |
| நும் | உங்களுடைய |
| இன் கவி கொண்டு | மதுரமான கவிகளைக் கொண்டு |
| நும் நும் | உங்களுங்களுடைய |
| இட்டா தெய்வம் | இஷ்ட தெய்வத்தை |
| ஏத்தினால் | துதி செய்தால் |
| | (அந்தத் துதிமொழிகளிற் கூறும் குணங்கள் அவர்களிடத்து இல்லாமையாலே அவை) |
| செம் மின் சுடர் முடி | செவ்வனே மின்னுகின்ற வொளி பொருந்திய திருமுடியையுடைய |
| என் திருமாலுக்கு | எனக்கு ஸ்வாமியான லக்ஷ்மீநாதனுக்கு |
| சேரும் | அந்வயிக்கும். |

* * * [வம்மின்புலவீர்] ஜீவனம் உஜ்ஜீவனம் என்று இரண்டுண்டு ; எம்பெருமான் திறத்துக் கவிபாடினால் உஜ்ஜீவிக்க வழியுண்டெனினும், ஜீவிக்கவழி தேடுகிற நாங்கள் நரஸ்துதிகளிலே இழிகிறோம் என்று சிலர் சொல்லுவதாகக் கொண்டு, நீசரைக் கவிபாடி ஜீவிப்பதிற் காட்டிலும் உடம்பு நோவத் தொழில் செய்து ஜீவித்தல் நன்று என்கிறார்.

வம்மின்— காட்டுத்தீயில் அகப்பட்டவர்களை மலையைக்காட்டியழைப்பாரைப் போலே வாருங்களென்கிறார். புலவீர்!— நீங்கள் விவேகிகளாகையாலே நான் அழைக்கிறபடியையறிந்து வரலாமேயென்கிறார்.

ஆழ்வீர் ! எங்களை நீர் அழைக்கிறதென் ? எங்கள் ஜீவனத்திற்கு நாங்கள் வழிதேட வேண்டாவோ ? பிறரைக் கவிபாடியாகிலும் எங்கள் தேஹயாத்திரையை நாங்கள் நடத்திப் போருகிறோம் என்று அவர்கள் சொல்ல, மெய்யே ; ஜீவிக்க வேண்டுமானால் உங்கள் தரங்குலைய ஜீவிக்கவேணுமோ ? உங்கள் தரம் குலையாமல் ஜீவிக்கலாகாதோ ? உங்கள் சரீரத்தை வருத்தியும் கைத்தொழில் செய்தும் ஜீவிக்கப் பாருங்கோளென்கிறார். "நும் மெய்வருத்திக் கைசெய்து உய்ம்மினோ" என்கிறவிடத்திற்கு "கோட்டை சுமந்தும் புல் சீவி விற்றும் ஜீவிக்கப் பார்க்கலாகாதோ ?" என்று பணிப்பராம் எம்பார்.

க்ருஷி முதலியவை ஆயாஸ ரூபமாகையாலே அவை செய்வதிற் காட்டிலும் ஸ்ரீமான்களான மனிசர்களைக் கவிபாடி ஜீவித்தல் நலமன்றோ வென்ன,

உங்களுக்கு வேண்டுவன கொடுக்கும் ஸ்ரீமான்கள் இவ்வுலகினில் உளரோ வென்று பார்த்தோம்? பார்த்தவிடத்தில் ஒருவரு மில்லையாயிருந்தது என்கிறார் இரண்டாமடியினால். ஆழ்வார் ஸம்ஸாரயாத்ரையில் கண்வைக்கு மவரல்லர்; இவர்களுக்காக இப்போது கண்வைத்து ஆராய்ந்து பார்த்தார் என்னுமிடம் 'இப்போது நோக்கினோம்' என்பதனால் தெரிகின்றது.

ஸ்ரீமான்களான மனிசர்கள் இல்லையாகில் இந்திரன் முதலான தேவர்களை ஏத்தினாலோவென்ன, உங்களுடைய நாவுகள் கவிகளைக்கொண்டு உந்தும் இந்த தேவதைகளை நீங்கள் ஏத்தினாலும் பின்னையும் அதெல்லாம் அந்த இந்திராதி தேவதைகளுக்கு அந்தராத்மபூதனாய் சரீரபதியாயிருந்த எம்பெருமான திருவடிகளிலேயே சென்று சேரும்; ஆனபின்பு நேர்கொடு நேரே எம்பெருமான் தன்னையே ஏத்துங்களென்கிறார் பின்னடிகளால். உலகில் கவிபாடுகிறவர்கள் சில சிட்டாக்கள் வைத்துக்கொண்டிருப்பது வழக்கம்; புண்டரீகாக்ஷன் என்றும் ஸ்ரீமான் என்றும் மஹோதாரன் என்றும் ஸகலகுணநிதி என்றும் இப்படிச் சில விசேஷணங்களைத் தொட்டு வைத்துக்கொண்டிருந்து துதிப்பர்கள்; இத்துதி மொழிகளை மனிதர் விஷயத்திலோ தேவதாந்தரங்கள் விஷயத்திலோ பிரயோகித்தால் உண்மையாக அர்த்தமுள்ள விடத்திலேயே சப்தமும் சென்று சேருமாதலாலும், மேற்கூறிய விசேஷணங்களின் பொருத்தம் எம்பெருமானொருவனுக்கே யுள்ளதாதலாலும், இந்திரன் சந்திரன் என்று கூட விசேஷ்யங்களை யிட்டுப்பாடினாலும் அபர்யவஸாந வ்ருத்தியினால் அந்தர்யாமியளவும் செல்லுகையாலும் எம்பெருமானையே கவி பாடிற்றாயிற்றென்று கொண்டு 'என் திருமாலுக்குச் சேருமே' என்றது நன்கு பொருந்தும். .... ... .... (௬)

சேரும்கொடைபுகழ் எல்லையிலானை * ஓராயிரம்
பேருமுடையபிரானையல்லால் மற்றியான்கிலேன் *
மாரியனையகை மால்வரையொக்கும்திண்டோளென்று *
பாரிலோர்பற்றையைப் பச்சைப்பசும்பொய்கள்பேசவே (எ)

| | |
|---|---|
| சேரும் | தனக்குத் தகுதியான |
| கொடை புகழ் | ஔதார்யத் திருவாகிய புகழுக்கு |
| எல்லை இலானை | எல்லை யில்லா திருப்பவனும் |
| ஓர் ஆயிரம் பேரும் உடைய | ஆயிரந் திருநாமங்களை யுடைய உபகாரகனு மான |
| பிரானை அல்லால் | எம்பெருமானை யன்றி |
| பாரில் | பூமியில் |
| மற்று ஓர் பற்றையை | வேறொரு அஸார பதார்த்தத்தைக் குறித்து |
| கை மாரி அனைய என்று | 'கைகள் மேகம்போல் உதாரங்கள்' என்றும் |
| திண் தோள் | 'உறுதியான புயங்கள் |
| மால் வரை ஒக்கும் என்று | பெரிய மலைபோல்வன' என்றும் |
| பச்சை பசும் பொய்கள் பேச | மெய் கலவாத புதுப் பொய்களைப் பேசுதற்கு |
| யான் கிலேன் | நான் சக்தனல்லேன். |

* * * [சேருங்கொடைபுகழ்.] கீழ் ஆறுபாசுரங்களினால் பரோபதேசம் செய்தருளின ஆழ்வார், தம் உபதேசம் கேட்டு ஒருவரும் திருந்தக் காணாமையாலே வெறுத்து அவர்களைவிட்டு, எம்பெருமானை யொழிய வேறுசிலரைக் கவிபாடுகை

யாதொரு பாவம் எனக்கு இல்லையாகப் பெற்றதே! என்று தம்மளவிலே தாம் உகந்து பேசுகிறார். "வழிபறிக்கும் நிலத்தில் தன்கைப்பொருள்கொண்டு தப்பினவன் உகக்குமாபோலே, இவர்களைப் போலன்றியே பகவத் விஷயத்தையொழிய வேறு சிலரைக் கவிபாடுகைக்கு நான் க்ஷமனன்றிக்கே யொழியப்பெற்றேனென்று ப்ரீதராகிறார்." என்பது நம்பிள்ளையீடு.

சேருங்கொடை புகழெல்லையிலானை = உலகத்தில் கொடையாளிகள் பலர் இருப்பினும் 'இன்னான் இன்னது கொடுத்தான்' என்று சொன்னால் 'அதை நான் நம்புகின்றிலேன்' என்பாருண்டு; எம்பெருமான் உபய விபூதியையும் ஒருவனுக்குக் கொடுத்தருளினானென்றாலும் 'இது அஸம்பாவிதம்' என்பாரில்லை; கொடைபுகழ் பொருந்தியிருக்குமாயிற்று எம்பெருமானுக்கு. இத்தால் கவிபாடுகிறவர்களுக்கு விசாலமான விஷயங்களுண்டென்றதாகிறது.

ஓராயிரம்பேருமுடையபிரானை = "ஓராயிரமாயுலகேழளிக்கும் பேராயிரங்கொண்டதோர் பீடுடையன்" என்கிறபடியே மஹாவைபவம் பொருந்திய ஆயிரந் திருநாமங்களையுடையவனாதலால் எந்த விருத்தத்திலும் எளிதாகத் திருநாமங்களையிட்டுக் கவிபாடுதற்குரியன் என்று காட்டுகிறபடி. அப்படிப்பட்ட திருநாமங்களை யெல்லாம் தமக்குப் பிரகாசிப்பித்தருளின மஹோபகாரத்தை நினைத்துப் பிரான் என்கிறார். [பிரான்—உபகாரகன்.] ஆக இப்படிப்பட்ட எம்பெருமானையல்லது மற்றொரு க்ஷுத்ர புருஷனை என் வாயினால் நான் துதிக்கமாட்டேன்; அவரவர்கள் ஸ்துதி செய்வதெல்லாம் பசைப்பற்ற பொய்யேயல்லது வேறில்லையென்று காட்டுகிறார் பின்னடிகளில்.

கொடுக்கைக்குக் கைம்முதல் சிறிதுமில்லாத வொருவனை நோக்கி "மாரியனைய கையாளிவன்" என்றும், கொடையை நினைத்துத் தேய்புற தோளுடையானைக் குறித்து "மால்வரையொக்கும் திண்டோளனிவன்" என்றும் கவிபாடுவதெல்லாம் மெய்யுரை சிறிதும் கலசாத பொய்யுரையேயாம்; இத்தகைய பொய்யுரைகளில் நான் பிரவேசிக்க சக்தனல்லேன் என்கிறார்.

[மாரி அனைய கை.] மேகமானது கைம்மாறு கருதாமல் தாராளமாக வர்ஷிக்கின்றபடியால் உலகில் உதாரர்களுக்கு மேகத்தை உவமையாகச் சொல்லுவர்.

அஸாரமான தருண விசேஷத்திற்குப் பற்றை யென்று பெயர். அது போன்றவனென்னாதே அதுவாகவே சொன்னது முற்றுவமை. "முளைத்தெழுந்து நிற்குமேயாகிலும் சில சிறுதூறு உண்டாயிற்று; அதுபோல, பிறந்தவன்று தொடங்கி முடிந்துபோமளவும் ஒரு காரியத்திற்கும் உதவாதவர்களைப் பற்றை யென்கிறது." என்பர் ஆசிரியர்.

பாரில் என்று ஏழாம் வேற்றுமையாகக் கொள்ளாமல் பார் இல் என்று பிரித்து, 'தங்குவதற்கு இடமுமில்லாத வொரு க்ஷுத்ரனை' என்று பொருள் கூறுதலுமுண்டு. ... ... ... ... (எ)

றுற் பேசினர். இங்கே ஈட்டுஸ்ரீஸூக்தி காண்மின் ;—"சரீரத்தைக் கழித்த வனந்தரம் ஸ்வாநுபவம் பண்ணியிருத்தல் ப்ரயோஜநாந்தரங்களைக் கொள்ளுதல் செய்யவிராதே அடிமைக்குப் பாங்கான சரீரத்தைப் பெற்று, தாய்முலைக் கீழே பொருந்தும் ஸ்தநந்தய ப்ரஜைபோலே திருவடிகளின்கீழே பொருந்துவே னென்னும் அபிநிவேசத்தையுடைய நான்."

மாயமனிசர்— ப்ரக்ருதிக்கு வசப்பட்ட மனிதர்கள் என்றபடி: "உத்பத்தியோடே வ்யாப்தமான விகாரத்தை யுடையவர்களை; அதாவது—பாடத் தொடங்கின கவி முடிவதற்கு முன்னே முடியும் மநுஷ்யரை." என்பது ஈடு.

என்வாய்கொண்டு என்சொல்லவல்லேன்— வேறு சிலர் வாக்காலே பாடினால் பாடலாம்; கழுத்துக்கு மேலே சொல்லுவேனென்றாலும் வாய் இசைகின்றதில்லை; எம்பெருமான் விஷயத்திலே காதலைப்பண்ணி, புறம்பே சிலரைக் கவிபாடவொண்ணுமோ? ... ... ... ... (அ)

வாய்கொண்மானிடம்பாடவந்த கவியேனல்லேன் *
ஆய்கொண்டசீர்வள்ளல் ஆழிப்பிரானெனக்கேயுளன் *
சாய்கொண்டவிம்மையும்சாதித்து வானவர்நாட்டையும் *
நீகண்டுகொள்ளென்று வீடுந்தரும்நின்றுநின்றே. (கூ)

| | |
|---|---|
| வாய் கொண்டு | (அருமையான) வாக்கைக் கொண்டு |
| மானிடம் | அற்ப மனிதர்களை |
| பாட வந்த | பாடப் பிறந்த |
| கவியேன் அல்லேன் | கவி யானல்லேன்; |
| ஆய | (வேதாந்தங்களிலும்) ஆராயப்பட்ட |
| சீர் கொண்ட | திருக்குணங்களையுடைய |
| வள்ளல் | உதாரனுமிய |
| ஆழி பிரான் | சக்கரக்கையனுமான பெருமான் |
| எனக்கே உளன் | என் வாக்குக்கே இலக்காக வுள்ளான்; (அப்பெருமான்) |
| சாய் கொண்ட | அழகிய |
| இம்மையும் | இந்த லோகத்து அர்ச்சாவதார அநுபவத்தையும் |
| சாதித்து | உண்டாக்கித் தந்து |
| வானவர் நாட்டையும் நீ கண்டு கொள் என்று | பரமபதாநுபவத்தையும் நீ பெறுவாயாக என்று சொல்லி |
| வீடும் | மோக்ஷ சுகத்தையும் |
| நின்று நின்று | அடைவு பட |
| தரும் | கொடுத்தருள்வன். |

* * * [வாய்கொண்டு.] பரமோதாரனான எம்பெருமானாலே தன்னைக் கவிபாடுகையே ஸ்வபாவமாகப் பண்ணப்பெற்ற வெனக்கு இதரஸ்துதிகளில் அதிகாரமில்லை யென்கிறார். "ஸ்ரீவைஷ கீர்த்ய கௌரவம் ஈஸ்வரீவாஃ—ஜிஹ்வே கீர்த்தய கேசவம் முராரிபும்." என்றும் "நா வாயிலுண்டே நமோ நாரணவென்று ஓவாதுரைக்கு முரையுண்டே" என்றும் சொல்லுகிறபடியே அவன்தன்னைத் துதிக்கைக்காகவே படைக்கப்பட்ட வாயைக் கொண்டு நீசரைக் கவிபாடப் பிறந்தவனல்லேன் நானென்கிறார் முதலடியில்.

ஆழ்வீர்! அனேக மஹர்ஷிகளும் மற்றும் முதலாழ்வார்கள் போல்வா ரும் அறிந்த எம்பெருமானையே நீரும் அறிந்தால் என்னலமுண்டு? வெவ் வேறு விஷயமாகவன்றோ கவிபாடவேணும் என்று சிலர் சொல்ல, ஆய்கொண்ட சீர்வள்ளலாழிப்பிரா னெனக்கேயுளன் என்கிறார். எம்பெருமானை நான் பேச வது மற்றையோர் பேசினது போலவோ? "பெருங்கேழலார் தம் பெருங்கண் மலர்ப்புண்டரீகம் நம்மேலொருங்கே பிறழவைத்தார் இவ்வகாலம், ஒருவர் நம் போல்வருளரே" (திருவிருத்தம்) என்னும்படி தன் கடாக்ஷத்தை என்பக்கலிலேயே ஒருமடை செய்ததுபோலத் தன்னைப்பற்றிக் கவிபாடுவதை யும் என்னொருவனுக்கே உரியதாக்கி யருளின னெம்பெருமான் என்றவாறு. எனக்கே என்ற ஏகாரத்தில்—இப்படி எம்பெருமான் விஷயீகரித்தது என்னைத் தவிர வேறொருவரையுமில்லை யென்பது தெரிவிக்கப்பட்டதாம். "வலக்கையாழி இடக்கைச் சங்கமிவையுடைய மால்வண்ணனை, மலக்கு நாவுடையேற்கு மாறுள தோவிம்மண்ணின் மிசையே" என்பர் மேலும்.

உபயவிபூதிநாதனான எம்பெருமானுடைய உபயவிபூதியும் அடியார்களின் ஆளுகைக்கென்றே ஏற்பட்டனவாதலால், பொறுக்கப் பொறுக்க உபயவிபூதி களையும் எம்பெருமான் தமக்குத் தந்தருளுகிறபடியைப் பின்னடிகளால் அருளிச்செய்கிறார். [சாய்கொண்ட இம்மையும்சாதித்து] ச்சாயா என்னும் வட சொல் சாய் என்று குறைந்து கிடக்கிறது. [சாய் கொண்ட]—ஒளிமிக்க என்ற படி. * இருள்தருமாஞாலத்திற் பிறவியை இகழ்ந்து கூறுகின்ற ஆழ்வார் தமது திருவாக்கினால் "சாய்கொண்ட இம்மையும் சாதித்து" என்றருளிச் செய்வதெப்படி? ஐஹிக லோகம் இவர்க்கு எதுக்கு? என்று சிலர் சங் கிக்கக்கூடும். கேண்மின்; — சுவர்க்க [illegible] கேட்டிற்ற மோக்ஷமொன்றையுமைக் கருதிக்கண்ட இன்பமாகிய சப்தாதி விஷய லாபமன்று இங்குக் கூறப்படு வது; "இச்சுவை தவிர யான் போய் இந்திரலோகமாளும் அச்சுவை பெறினும் வேண்டேன்" என்னும்படி இவ்வுலகத்திலேயே இடையூறின்றி பகவத் குணா நுபவம் பண்ணப்பெறில் அந்த லாபம் பரமோத்தேச்யமாதலால் அதனையே இங்கு "சாய்கொண்டவிம்மை" என்பதனால் குறிக்கின்றார். திருவிருத்தத்தில் "வேதனை வெண்புரிநூலனை" (79) என்ற பாசுரத்தில் "ஓதனையே தொழுவார் விண் ணுளாரிலுஞ் சீரியரே" என்றருளிச் செய்தமை காண்க. எம்பெருமானை இந் நிலத்திலிருந்துகொண்டே இடைவிடாது வணங்கி அநுபவிப்பவர் யாரோ, அவர் கள், பரமபதத்தில் வாழும் நித்யமுக்தர்களிற்காட்டிலும் சிறந்தவர் என்றனர். இடைவிடாது எம்பெருமானை அநுபவிப்பதற்கென்றே வாய்ந்த இடமான பரம பதத்தில் பகவதநுபவத்திற்கு எவ்வகையான இடையூறுமில்லையாதலால் அங் கிருந்துகொண்டு அவனையநுபவித்தல் வியப்பன்று; உண்டியே உடையே உகந் தோடுமிம்மண்டலம் பகவதநுபவத்திற்கு நேர்விரோதியாதலால் அப்படிப்பட்ட இந்த இருள்தருமாஞாலத்திலிருந்து கொண்டே அங்ஙனம் நித்யாநுபவம் செய் யும்படியான ஒரு நன்மை வாய்க்குமாகில் அது பரமபதாநுபவத்திற் காட்டிலும் மிகச்சிறந்ததென்றே கொள்ளத் தட்டில்லையென்க. பெரிய திருவந்தாதியிலும் "ஒன்றுண்டு செங்கண்மால்" (58) என்னும் பாசுரத்தில் "நின்புகழில்வைகும்

| | |
|---|---|
| பல நாள் | அனேக காலம் |
| நின்று நின்று | இருந்து |
| உய்க்கும் | சேதனனைத் தன் வசத்திலே யாக்குகின்ற |
| இ உடல் | இந்தச் சரீரத்தை |
| நீங்கி போய் | விட்டொழிந்து போய் |
| சென்று சென்று ஆகிலும் | இப்படியே பல பல ஜனன மரணங்கள் நடந்த பின்பாகிலும் (ஏதேனுமொரு காலத்தில்) |
| கண்டு | தன்னைக் கண்டு |
| சன்மம் | பிறவியை |
| கழிப்பான் | கழிக்கக்கடவமென்று |
| எண்ணி | திருவுள்ளம் பற்றி |
| ஒன்றி ஒன்றி | (ஒருகாலும் சோம்பிக் கைவிடாமல்) மேன் மேலும் ஊக்கங் கொண்டு |
| உலகம் படைத்தான் | உலகங்களைப் படைத்தருளுகின்ற எம்பெருமானுடைய |
| கவி ஆயினேற்கு | கவியாக அமைந்த எனக்கு |
| இனி என்றும் என்றும் | இனி எக்காலும் |
| மற்று ஒருவர் கவி | வேறொருவரைக் கவி பாடுதல் |
| ஏற்குமே | தகுமோ? (தகாது.) |

* * * [நின்றுநின்று.] தன்னைத் துதிப்பதற்கென்றே கரணகளேபரங்களைக் கொடுத்தருளினவனான எம்பெருமான் திறத்திலே கவிபாடப்பெற்ற வெனக்கு மற்றொருவரைக் கவிபாடுதல் ஏலாது என்கிறார். உலகில் க்ருஷி செய்பவன் தான் செய்த க்ருஷி பழுதுபட்டொழிந்தாலும் 'இன்னமும் ஒரு தடவை செய்து பார்ப்போம்' என்றுகொண்டு மீண்டுமீண்டும் ஆசையாலே க்ருஷிதன்னையே செய்து பார்ப்பன்; அதுபோல, எம்பெருமானும் "பத்தி யுழவன்" என்று திருமழிசைப்பிரான் அருளிச் செய்தபடியே பக்திக்ருஷி செய்பவனாதலால் அந்தக்க்ருஷி எத்தனை தடவை முட்டுப்பட்டாலும் 'இன்னொரு தடவையிலாகிலும் பலிக்கமாட்டாதோ' என்று கொண்டு மீண்டுமீண்டும் ப்ரபஞ்ச ஸ்ருஷ்டியைச் செய்தருள்வனென்கிறது இரண்டரை யடிகளால்.

நின்றுநின்ற பலநாளுய்க்குமிவ்வுடல் = இதனால் நம்முடைய சரீரத்தின் கொடுமையைக் காட்டினபடி. காலமுள்ளதனையும் ஆத்மாவைத் தன் வசத்திலேயே இழுத்துக்கொண்டுசென்று அனர்த்தங்களுக்கு ஆளாக்குமதான சரீரம் என்றவாறு. இவ்வுடல் என்றது இந்த ஜன்மத்திலுள்ள ஒரு சரீரத்தை மாத்திரம் சொன்னபடியன்று; ஜன்ம பரம்பரைதோறும் தொடர்ந்துவருகிற வுடல் என்றபடி.] இவ்வுடல் நீங்கிப்போய்ச் சென்று சென்றாகிலுங் கண்டு] ஆத்மாவானவன் சரீரத்தில் நின்றும் கிளம்பினவாறே போகக்கூடிய வழிகள் நான்கு உண்டு; கர்ப்பகதி, யாம்யகதி, தூமகதி, அர்ச்சிராதிகதி (1. கர்ப்பகதி, 2. யாம்யகதி, 3. தூமகதி, 4. அர்ச்சிராதிகதி) என்பனவாம். அர்ச்சிராதிகதியாகச் சென்று பரமபதத்தை யடைந்து தன்னை யநுபவிக்கப் பெறவேணுமென்று எம்பெருமான் பாரித்திருந்தும் இவர்கள் அந்தக் கதியிற் செல்லாமல் மற்ற மூன்று கதிகளிலேயே செல்லுகிறார்கள். அது கண்டு எம்பெருமான் 'நம்முடைய மனோரதம் ஈடேறப் பெறவில்லையே, இனி, ப்ரபஞ்ச ஸ்ருஷ்டியை நிறுத்திப் போகட்டுவிடலாமா' என்று நினைத்தருளாமல் "இங்ஙனமே நடந்து போரும் அனேக ஜன்ம பரம்பரைகளினுள்ளே ஏதேனுமொரு ஜன்மத்திலாகிலும் இவர்கள் அர்ச்சிராதி கதிக்கு வாராமற் போவார்களோ? என்றேனுமொருநாள் வரக்கூடும்" என்

றென்னை மேன்மேலும் உலகம் படைக்கின்றானும். "சோம்பாது இப்பல் லுருவை யெல்லாம் படர்வித்த வித்தா" என்றார் பெரிய திருவந்தாதியிலும்.

உலகம் படைத்தான் கவியாயினேற்கு = இங்ஙனே மேன் மேலும் கை வாங்காமல் ஒரு வகையாலே உலகத்தைப் படைத்துக்கொண்டே வந்த எம்பெருமானுடைய க்ருபை என்னொருத்தனளவிலே பலித்ததனால் அவனையே கவி பாடும்படியான பாக்கியம் பெற்றேனென்றவாறு. "அவன் எதிர் சூழல்புக்குத் திரிந்து பண்ணின க்ருபைபலித்து அவனுக்குக் கவியாகப் பெற்ற வெனக்கு" என்பது ஈடு.

என்று மென்றுமினி மற்றொருவர் கவி யேற்குமே? = எம்பெருமானது கவியாக வாய்க்கப்பெற்ற நான் இனி மற்றொரு நீசனையும் கவிபாடினேனாகில் எம்பெருமானுக்கு பலித்தக்ருபைவீணாகுமன்றோ; ஆதலால் அத்தகைய செய்கையில் ப்ரவர்த்தித்தல் எனக்கு ஸ்வரூபவிருத்த மென்று தலைக்கட்டினாராயிற்று.

"உலகம்படைத்தான் கவியாயினேற்கு" என்றவிடத்திற்கு ஆசார்யஹ்ருதயத்தில் ஒரு விசேஷார்த்தம் அருளிச் செய்யப்பட்டுள்ளது குறிக்கொள்ளத் தக்கது. அதாவது—"படைத்தான் கவியென்றபோதே இதுவும் யதாபூர்வ கல்பனமாமே" என்பது முதல்ப்ரகரணத்தில் நாற்பத்தெட்டாவது சூர்ணிகை: 'ப்ரளயம் கொண்டவுலகத்தை முன்பு போல ஸ்ருஷ்டித்த ஈச்வரனுடைய கவி நான்' என்னும் பொருள் தோன்ற 'ஒன்றி யொன்றியுலகம் படைத்தான் கவியா யினேற்கு' என்று ஆழ்வார்தாம் அருளிச்செய்த பாசுரத்தை நோக்குமிடத்து, ஸ்ருஷ்டிதோறும் சந்திரன் ஸூர்யன் முதலிய ஸகல பதார்த்தங்களும் யதாபூர்வ கல்பனமாய் வருமாபோலே இந்த த்ராவிட வேதமும் ஸ்ருஷ்டிதோறும் யதா பூர்வகல்பனமாய் வருமென்று தோற்றுமிறே என்பது இந்த சூர்ணிகையின் கருத்து. ... ... ... ... (கo)

ஏற்கும்பெரும்புகழ் வானவரீசன்கண்ணன்தனக்கு *
ஏற்கும்பெரும்புகழ் வண்குருகூர்ச்சடகோபன்சொல் *
ஏற்கும்பெரும்புகழ் ஆயிரத்துளிவையுமோர்பத்து *
ஏற்கும்பெரும்புகழ் சொல்லவல்லார்க்கில்லைசன்மமே. (கக)

ஏற்கும் பெரு புகழ் } தனக்கு ஏற்றிருக்கின்ற மிக்க புகழையுடையனும்
வானவர் ஈசன் நித்ய ஸூரி நாதனுமான
கண்ணன் தனக்கு } கண்ணபிரான் விஷயமாக,
ஏற்கும் பெரும்புகழ் வண் குருகூர் சடகோபன்—;
சொல் அருளிச்செய்த

ஏற்கும் பெரும் புகழ் } ஏற்ற பெரும்புகழை யுடைய
ஆயிரத்துள் இவ்வாயிரத்திலும்
ஏற்கும் பெரும் புகழ் } தகுதியான சிறந்த புகழை யுடைத்தான
இவை ஓர் பத்தும் } இந்தத் திருவாய் மொழியை
சொல்ல வல்லார்க்கு } ஓத வல்லவர்களுக்கு
சன்மம் இல்லை மறுபிறப்பு இல்லை.

* * * [ஏற்கும் பெரும்புகழ்.] இத்திருவாய்மொழி கற்றார்க்கு, பிறரைக்கவிபாடு தற்குரிய நீசப்பிறவி சேராதென்று பயனுரைத்துத் தலைக்கட்டுகிறார். இப் பாசுரத்தில் நான்கு அடிகளிலும் ஏற்கும்பெரும்புகழ் என்ற விசேஷணம் அமைந்திருக்கு மழகு நோக்கத்தக்கது. எம்பெருமானை உபயவிபூதிநாதன் என்று சொன்னால் ஏற்றிருக்குமாபோலே ஆழ்வாரை 'எம்பெருமான் கவி இவர்' என்றால் அப்படியே ஏற்றிருக்கும், 'அவ்வெம்பெருமானை உள்ளபடியே புகழும் வேதம் திருவாய்மொழிதான்' என்றால் இதுவும் ஏற்றிருக்கும், 'ஸ்வரூபநாசமாகப்பிறரைக்கவிபாடாமல் ஸ்வரூபம் சிறம்பெற எம்பெருமானையே கவிபாடுமாறு விதித்த இப்பதிகமே இவ்வாயிரத்திலுள்ளும் சிறந்தது' என்றால் இதுவும் ஏற்றிருக்குமாயிற்று. ... ... ... ... (கக)

ஒன்பதாந் திருவாய்மொழி உரை முற்றிற்று.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.



ஸ்ரீ:

# த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்நாவளி.

[illegible]

1. ரம்யஸ்தாநாதியோகாத். * தென்னாதென வென்று வண்டு முரல் திருவேங்கடத்து * ரமணீயமான திருமலை முதலானவற்றில் எழுந்தருளியிருக்கு மிருப்பைச் சொன்னபடி.

2. அமிதவிபவத: * குளனார் கழனிசூழ் கண்ணன் குறுங்குடி * செல்வம் மிகுந்திருக்குமிருப்பைச் சொன்னபடி.

3. ஸத்பதப்ராபகத்வாத். * போம் வழியைத்தரும் நங்கள் வானவ ஈசன் * அர்ச்சிராதி மார்க்கத்தை யடைவிக்கும் படியைச் சொன்னபடி.

4. ஸம்யக்ஸாயுஜ்யதாநாத். * தன்னாகவே கொண்டு சன்மஞ் செய்யாமையும் கொள்ளுமே.* தன்னோடு பரமஸாம்யத்தைத் தந்தருளுமாற்றைச் சொன்னபடி.

5. அநகவிதரணாத். * வேண்டிற்றெல்லாந் தரும்கோதில்வண்வள்ளல் * வேண்டினார்க்கு வேண்டினபடியே கொடுத்து ஒன்றுங்கொடுத்ததாக எண்ணாத ஔதார்யத்தைச் சொன்னபடி.

6. ஸர்வஶேஷித்வஸித்தாத். * செய்யின் சுடர்முடியென் திருமாலுக்கு * ஸர்வஸ்வாமித்வஸூசகமான திருவபிஷேகத்தையும் லக்ஷ்மீபதித்வத்தையுமுடைமை சொன்னபடி.

7. ப்ரக்யாத ஆக்யாஸஹஸ்ராத். * ஓராயிரம் பேருமுடையபிரானை.* துதிப்பதற்கு உரிய ஆயிரந்திருநாமங்களுடைமை சொன்னபடி.

8. அவதாரணரஸாத். * பின்னைக்கு மணாளனை.* விபவாவதாரத்தில் செய்த விஹாரத்தைச் சொன்னபடி.

9. புக்திமுக்த்யாபிமுக்யாத். * சாய்கொண்டவிம்மையும் சாதித்து வானவர் நாட்டையும் நீ கண்டு கொள்ளென்று வீடுந்தரும். * இவ்விருந்து செய்யும் குணானுபவத்தையும் அங்குப்போய் அநுபவிக்கும் முக்திஸாம்ராஜ்யத்தையும் க்ரமேண கொடுத்தருளுமாற்றைச் சொன்னபடி.

10. த்ரைலோக்யோத்பாதகாச்ச. * ஒன்றியொன்றியுலகம்படைத்தான் * சேதநர்கள் ஒருஜன்மமல்லா வொருஜன்மத்திலாகிலும் சேடராவேனுமென் றெண்ணி ஒருகாலும் பின்வாங்காமல் உலகங்களைப்படைக்கும்படியைச் சொன்னபடி.—ஆக இப்படிப்பட்ட காரணங்களாலே [அர்ஹம்] பிராப்தியான எம்பெருமானை [ஸ்துதிவிஷயம்] துதிப்பதற்கு யோக்யனாக [வ்யாஹரத்] (ஆழ்வார்) அருளிச்செய்தார். [நிந்திதஅந்ய:] இங்ஙனம் எம்பெருமானைத் துதிக்கவில்லாத பிறரை நிந்திப்பதுஞ் செய்தாரென்றபடி. "ஸ்துதிவிஷயதயா" என்றும் பாடமுண்டு.

ஜாப்புல்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

ஸ்ரீ:

## திருவாய்மொழி நூற்றந்தாதி.

சொன்னாவில் வாழ்புலவீர் சோறு கூறைக்காக
மன்னாத மானிடரை வாழ்த்துதலால் — என்னாகும்
என்னுடனே மாதவனை ஏத்துமெனுங்குருகூர்
மன்னருளால் மாறுஞ்சன் மம். (உக)

| | |
|---|---|
| நாவில் | "நாக்கிலே |
| சொல் | இனிய கவி மொழிகள் |
| வாழ் | விளங்கப் பெற்ற |
| புலவீர் | பண்டிதர்களே! |
| சோறு கூறைக்கு ஆக | சோற்றுக்கும் துணிக்கு மாக |
| மன்னாத மானிடரை | நிலை நின்று ஜீவித்திருக்க மாட்டாத மனிசர்களை |
| வாழ்த்துதலால் | கவிபாடிப் புகழ்வதனால் |

| | |
|---|---|
| என் ஆகும் | என்ன பயனுண்டாகும்? (ஒன்றுமில்லையாம்:) |
| என்னுடனே | என்னுடன் கூடி |
| மாதவனை | திருமாலை |
| ஏத்தும் | ஏத்துங்கள்" |
| எனும் | என்று உபதேசித்த |
| குருகூர் மன் | திருநகரிக்குத் தலைவரான ஆழ்வாருடைய |
| அருளால் | கிருபையினாலே |
| சன்மம் மாறும் | பிறவித்துயர் தொலையும். |

வாக்கிலே கவனசாதுரிய முடையவர்களாய், அந்தக் கவித்திறமையை பகவத்விஷயத்திலே செலுத்தாமல் அல்பாயுஸ்ஸுக்களான நீச மானிசர்களிடத்திலே செலுத்தி * காசுங்கறையுடைக்கூறைக்குமங்கோர் கற்றைக்கு மாசையினால் அவர்களைத் துதித்துக்கொண்டுதிரியும் புலவர்களை விளித்து, அந்தோ! நீங்கள் இங்ஙனம் பயனற்றசெயலைச் செய்துதிரிவதுதவிர்ந்து என்னோடு கூட எம்பெருமானைத் துதித்து வாழ்ந்துபோங்கள் என்று ஆழ்வார் உபதேசித்தருளினபடியைக்கூறி, அப்படிப்பட்ட ஆழ்வாருடைய திருவருளுக்கு நாம் இலக்காகப்பெற்றோமாகில் நம்முடைய பிறவித்துயர் நீங்குமென்று அருளிச்செய்ததாயிற்று. .... .... .... .... (உக).

ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## த்ராமிடோபநிஷத் ஸங்கதி.

---

[illegible]
[illegible]
[illegible]
[illegible]

(கருத்து) பிறர்களைத்துதித்துக் கவிபாடி அதனால் பேறுபெறவிரும்பிய சில புலவர்களைப்பார்த்து அவர்கள் படும் அநர்த்தத்தை விமர்சித்தவாறே ஆழ்வார் தம்முடைய பகவத்விஷயஸாம்ராஜ்யம் ஒருவாறு தணியப்பெற்றவராய், பரமக்ருபையினாலே அவர்களை நோக்கி உபதேசம் செய்யப்புகுந்து நரஸ்துதியில் நின்றும் அவர்களை மீட்கப்பார்த்தும் அவர்கள் மீளக்காணாமையாலே, அவர்களைத் திருத்தப்பாடுபடுவதில் நின்றும் ஒழிந்து, அவர்களைப்போலே தாம் நரஸ்துதியில் ஒருப்பட்டு அநர்த்தப்படாமைக்கு உகந்துபேசித் தலைக்கட்டினாரென்றதாயிற்று.

ஜீயர் திருவடிகளே சரணம்.



ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## மூன்றாம்பத்து—பத்தாந் திருவாய்மொழி, சன்மம்பலபலசெய்து.

அவதாரிகை:—கீழ்த் திருவாய்மொழியில்—துதிப்பதற்கு வாய்த்த ஸ்வரூப ரூப குணவிபூதி சேஷ்டிதங்களையுடையனான எம்பெருமானைத் துதிப்பது தவிர்த்து க்ஷுத்ரநரஸ்துதிகளிலே வாய்செலுத்தித் திரியுமவர்களை உபதேசத்தாலே திருத்தப்பார்த்தும் அவர்கள் திருந்தக்காணாமையாலே, இவர்களைப் போலே நாமும் நரஸ்துதியிலே விழுந்து அநர்த்தப்படாதிருக்கப் பெற்றோமே! என்று தம் உகப்போடே தலைக்கட்டினார். அந்த உகப்பை விசேஷித்துப் பேசுகிறது இத்திருவாய்மொழியில். நரஸ்துதிகளில் செல்லப்பெறுதமாத்திரமேயன்றியே எம்பெருமான் விஷயத்திலே பரிபூர்ணமாக அவகாஹித்துத் தாம் அநுபவிக்கப்பெற்ற பரிசைப்பாக்கப்பேசி, குறைமுட்டு பரிவு இடர் துயர் துன்பம் அல்லல் துக்கம் தளர்வு கேடென்னும் தமக்கில்லாமையை உள்குழைந்து பேசுகிறார். ... ... ... ... (*)

சன்மம்பலபலசெய்துவெளிப்பட்டுச் சங்கொடுசக்கரம்வில் *
ஒண்மையுடையவுலக்கை ஒள்வாள்தண்டுகொண்டுபுள்ளூர்ந்து * உலகில்
வன்மையுடையவரக்கர் அசுரரைமாளப்படைபொருத *
நன்மையுடையவன்சீர்பரவப்பெற்ற நானோர்குறைவிலனே. (க)

| | |
|---|---|
| பல பல | பல பல வகைப்பட்ட |
| சன்மம் | அவதாரங்களை |
| செய்து | பண்ணி |
| வெளிப்பட்டு | ஸம்ஸாரிகளின் கண்ணுக்கும் புலப்பட்டு |
| சங்கொடு சக்கரம் | சங்கு சக்கரங்களையும் |
| வில் | சார்ங்கத்தையும் |
| ஒண்மை உடைய | ஒளி பொருந்திய |
| உலக்கை | முஸலத்தையும் |
| ஒள் வாள் | அழகிய நந்தக வாளையும் |
| தண்டு | கௌமோதகி யென்னும் கதையையும் |
| கொண்டு | ஏந்திக்கொண்டு |
| புள் ஊர்ந்து | பக்ஷிராஜனை வாஹனமாகக் கொண்டு |
| உலகில் | உலகத்திலுள்ள |
| வன்மை உடைய | கடினமான மனமுடைய |
| அரக்கர் | அரக்கர்களும் |
| அசுரர் | அசுரர்களும் |
| மாள | மாண்டொழியும்படி |
| படை பொருத | ஆயுதப்ரயோகம் பண்ணிப் போர்செய்து தொலைத்த |
| நன்மை உடையவன் | நன்மைமிக்கவனான எம்பெருமானுடைய |
| சீர் | திருக்குணங்களை |
| பரவ பெற்ற நான் | துதிக்கப்பெற்ற அடியேன் |
| ஓர் குறைவு இலன் | ஒரு குறையுமுடையே னல்லேன். |

* * * [சன்மம் பலபல] திவ்யாயுதங்களோடே எம்பெருமான்வந்து அவதரிக்கும்படியை அநுஸந்திக்கப்பெற்றவெனக்கு ஒருகுறையுமில்லையென்கிறார். சன்மம் பல பல செய்து—'பிறப்பிலி' என்று பேர்பெற்றிருக்கிற தான் கர்மவஶ்யனுமன்றியே க்ருபாவஶ்யனாய்ப் பல பல யோனிகளிலும் பிறக்கிறபடியை அநுஸந்திக்கின்றவெனக்கு ஒரு குறையுமில்லையென்கிறார். கர்மவஶ்யர்களான நம்முடைய பிறவிகட்கு எல்லைகாணமுடியும்; அவனுடைய அவதாரங்கட்கு எல்லை காணப்போகாது; ஏனெனில், கருமத்திற்கு அவதியுண்டு; அநுக்ரஹத்திற்கு அது கிடையாதே: ஆதலால் "சன்மம் பலபல" என்றார்.

"நசக்ஷுஷா பஶ்யதி கஶ்சநைநம்" என்றும் "நமாம்ஸ சக்ஷுரபிவீக்ஷதேதம்" என்றும் "என்றேனும் கட்கண்ணாற் காணாத அவ்வுரு" என்றுஞ் சொல்லுகிறபடியே புலப்படாத திருவுருவத்தைப் புலப்படுத்துகிறபடியை அநுஸந்திக்கின்றவெனக்கு ஒரு குறையில்லை யென்கிறார் வெளிப்பட்டு என்பதனால்.

[சங்கொடு சக்கரமித்யாதி.] ஒரு கற்பகத்தருபணைத்துக் கனுத்தோறும் அரும்பினாற்போலே யுள்ள திவ்யாயுதச் சேர்த்தியழகை யநுஸந்திக்கின்றவெனக்கு ஒரு குறையுமில்லையென்கிறார். ஒரு தேசவிசேஷத்திலே நித்யஸூரிகளே அநுபவிக்கக் கடவதான இவ்வழகை இங்குள்ளாரும் அநுபவிக்கும்படி தோளிலே யமர்ந்து ஆங்காங்குத் திரிபவன் பெரியதிருவடியாதலால் "காய்சினப் பறவையூர்ந்து பொன்மலையின் மீமிசைக் கார்முகில்போல்" என்று அநுபவிக்க அழகியதான அந்தச் சேர்த்தியைப் புள்ளூர்ந்து என்பதனால் அநுபவிக்கிறார்.

அழகுக்கு இலக்காய் வாழமாட்டாதே அம்புக்கு இலக்காய் முடிந்து போவதற்கென்று இட்டுப்பிறந்த அஸுராராக்ஷஸர்களை ஆயுதங்களாலே முடித்தருளும் வீரத்தை அநுஸந்திக்கிறவெனக்கு ஒரு குறையுமில்லையென்கிறார் பின்னடிகளால். வன்மையுடைய=எம்பெருமானது வடிவழகுகண்டும் நெஞ்சு நெகிழமாட்டாத கடுநெஞ்சினர் என்றபடி. மாளப்படைபொருத நன்மையுடையவன்=பிறரைக்கொல்வது தீமையாயினும் 'ஆச்ரிதவிரோதிகள்' என்னுங்காரணத்தினால் அரக்கர்களையும் அசுரர்களையுங்கொல்வது நன்மையேயென்று காட்டுகிறபடி. ஸங்கல்ப மாத்திரத்தினால் ப்ரபஞ்சஸ்ருஷ்டி முதலிய ஸகலகாரியங்களையும் நிர்வஹிக்கவல்லவனான தான் அந்த ஸங்கல்பத்தைக் கொண்டே அரக்கராசுரர்களையும் மாளச்செய்யலாயிருக்க, அங்ஙனம் செய்யாது அதற்காகத்தனியே ஒரு பயணமெடுத்துவிட்டு [அவதரித்து]ச் செய்ததை நன்மையாகக் கூறுகிறாராகவுமாம். "ஈச்வரன் அவதரித்துப் பண்ணின ஆனைத்தொழில்களெல்லாம் பாகவதாபசாரம் பொறாமையென்று ஜீயரருளிச்செய்வர்" என்பது ஸ்ரீவசனபூஷணம். பாகவதர்கள் பக்கலிலே எம்பெருமான் வைத்திருக்கும் ஆராபாசம் வியக்கத்தக்கதென்று தேறினபடி.

சீர்பரவப்பெற்ற நான் ஓர் குறைவிலன்= அஸ்மப்ராக்ருதிகளாய்ப்பிறந்து முடிந்து போவாரும், மனிசர்களாயே பிறந்துவைத்து நாஸ்திகமுதலியவற்றில்

இழிந்து ஸ்வரூபநாசம் பெற்றுப்போவாருமான இவ்வுலகில் நானொருவனே குறையற்றவன் என்று தம்முடைய நன்மைக்குத் தாம் உகந்து பேசினாராயிற்று. .... .... .... .... .... (க)

குறைவில்தடங்கடல்கோளரவேறித் தன்கோலச்செந்தாமரைக்கண் *
உறைபவன்போலவோர்யோகுபுணர்ந்த ஒளிமணிவண்ணன்கண்ணன் *
கறையணிமூக்குடைப்புள்ளைக்கடாவி அசுரரைக்காய்ந்தவம்மான் *
நிறைபுகழேத்தியும்பாடியுமாடியும் யானொருமுட்டிலனே. (உ)

| | |
|---|---|
| குறைவு இல் | குறைவற்ற [பரிபூர்ணமான] |
| தட கடல் | விசாலமான திருப்பாற்கடலிலே |
| கோள் அரவு ஏறி | மிடுக்கனான திருவனந்தாழ்வான் மீது ஏறி |
| தன் | தன்னுடைய |
| கோலம் | அழகிய |
| செம் தாமரை கண் | செந்தாமரை போன்ற திருக்கண்கள் |
| உறைபவன் போல | துயிலப் பெற்றவன் போல |
| ஓர் யோகு புணர்ந்த | யோக நித்திரை செய்தருள்கின்ற |
| ஒளி மணி வண்ணன் | அழகிய நீலமணி போன்ற நிறத்தனும் |
| கண்ணன் | கண்ணனாய்த் திருவவதரித்தவனும் |

| | |
|---|---|
| கறை அணி மூக்கு உடை | கறையை அணிந்த மூக்குடையவனான |
| புள்ளை | பக்ஷிராஜனை |
| கடாவி | நடத்தி |
| அசுரரை காய்ந்த | அசுரர்களை முடித்தவனுமான |
| அம்மான் | எம்பெருமானுடைய |
| நிறை புகழ் | நிறைந்த புகழை |
| யான் | நான் |
| ஏத்தியும் | துதித்தும் |
| பாடியும் | இசையில் அமைத்துப் பாடியும் |
| ஆடியும் | கூத்தாடியும் |
| ஒரு முட்டு இலன் | (எம்பெருமானை அநுபவிப்பதில்) ஒரு தடையுமுடையேனல்லேன். |

* * * [குறைவில்தடங்கடல்.] இந்நிலத்தில் வந்து திருவவதாரம் பண்ணுதற்கு அடியாகத் திருப்பாற்கடலில் கண்வளர்ந்தருளிப் பிறகு வஸுதேவர் திருமகனாய் வந்து பிறந்தருளி ஆச்ரிதவிரோதிகளைத் தொலைத்தருளின கண்ணபிரானுடைய கீர்த்தியைப் பலபடியும் அநுபவிக்கப்பெற்ற நான் மேன்மேலும் இங்ஙனம் அநுபவிப்பதில் யாதொரு தடையுமுடையேனல்லேனென்கிறார்.

குறைவில் தடங்கடல்— கீழே தமக்குக்கூறிய குறைவில்லாமையை இங்குத் தடங்கடலுக்கும் கூறுகின்றார்; தடங்கடலும் தானுமே குறைவில்லாதவர்கள் என்கிற கருத்துப் போலுமாழ்வார்க்கு. "மாலும் கருங்கடலே! என்னோற்றாய், வையகமுண்டாலிலைத் துயின்றவாழியான், கோலக் கருமேனிச் செங்கண்மால் கண்படையுள், என்றும் திருமேனி நீ தீண்டப்பெற்று" என்ற பொய்கையார் பாசுரத்தின்படியே கடலின் குறைவில்லாமை காண்க. "தன் தாளும் தோளும் முடிகளும் சமனிலாத பலபரப்பி—கிடந்தான்" என்கிறபடியே எம்பெருமான் தனது திவ்யாவயவங்களை ஸங்கோசமறப்பரப்பிக் கொண்டு கண்வளர்ந்தருளுகைக்குப் பர்யாப்தமான இடமுடையகடல் என்பார் 'தடங்கடல்' என்கிறார். அப்படிப்பட்ட கடலிலே, மிடுக்குடைய திருவனந்

தாழ்வான்மீது திருக்கண்வளர்பவன்போல உலகங்களை ரக்ஷித்தருளும்படியைச் சிந்தைசெய்து கொண்டிருக்கின்றானாயிற்று.

"ஓர் யோகுபுணர்ந்த வொளிமணி வண்ணன் கண்ணன்" என்ற சொற்சேர்த்தியழகை நோக்கி ஈட்டில் நம்பிள்ளையருளிச்செய்த ஸ்ரீஸூக்திகள் இன்சுவையே வடிவெடுத்தவை காண்மின்;—"ஸகலப்ராணிகளும் நம்மைக்கிட்டிக் கரைமரஞ்சேர்த்தநாம் விரகு ஏதோவென்று இவற்றினுடைய ரக்ஷணோபாய சிந்தை பண்ணினால் அவ்வநுஸந்தானம் பொறுமையாலே நாக்கு உலரும்; அப்போது கற்பூரநிகரம் வாயிலேயிடுவாரைப்போலே * ஆத்மாநம் வாஸுதேவாக்யம் சிந்தயந் என்று தன்னைத்தானே அநுஸந்தியாநிற்கும்; இப்படி அநுஸந்தித்தவாறே ரக்ஷணோபாயம் தோற்றுமே (ஒளிமணிவண்ணன் கண்ணன்) ரக்ஷ்யவர்க்கத்தைத் தன்வடிவழகாலே கரைமரஞ் சேர்க்கைக்காக க்ருஷ்ணனாய் வந்தவதரித்தவன்" என்பன ஈட்டு ஸ்ரீஸூக்திகள். உலகத்தை ரக்ஷிக்கச் சிந்தனை செய்தவளவில், 'அழகிய வுருவத்துடனே உலகிற் சென்று அவதரித்து சேதனர்களை ஈடுபடுத்துவதே நலம்' என்று தேறி அப்படியே கண்ணனாக வந்து பிறந்தானென்றவாறு.

இந்நிலத்தில் அவதரித்து ஆச்ரிதவிரோதிகளைத் தொலைத்தபடி சொல்லுகிறது மூன்றாமடி. பெரியதிருவடியின்மீது ஏறிச் சென்று பகைவரைப் பாற்றின வரலாறுகள் பலவுண்டு: "பொருந்தாவரக்கர் வெஞ்சமத்துப் பொன்றவன்று புள்ளூர்ந்து, பெருந்தோள் மாலிதலைபுரளப் பேர்ந்தவரக்கர் தென்னிலங்கை, இருந்தார் தம்மையுடன் கொண்டு அங்கெழிலார் பிலத்துப் புக்கொளிப்பக், கருந்தாள் சிலைக்கைக்கொண்டான்" (பெரிய திருமொழி 8-6-2) என்பது முதலிய பாசுரங்கள் காண்க.

கருடன் தனது மூக்கினாலேயே பகைவரைக் குத்திக் கொன்று, அதனால் மூக்கிலே கறைபடிந்திடக்கூடும்; அக்கறைதானும் அலங்காரமாய் அதுவே ஆபரணமாயிருக்குமாம் மூக்குக்கு; அதைப்பற்றியே "கறையணி மூக்குடைப்புள்" என்றார். மற்றொருவகையாகவும் கூறுவதுண்டு; கருடன் முட்டையாயிருக்கும் பருவத்திலே புத்திரனுடைய முகத்தைக் காணவேணுமென்கிற விரைவினால் தாய் குத்திப்பார்க்கையில் அப்போது மூக்கிலேபட்டு ஓரடையாளம் பிறந்து அது எம்பெருமானுக்கு ஸ்ரீவத்ஸம்போலே மறுவாக ஆயிற்றென்றும், அது தோன்றவே 'கறையணி மூக்குடைப்புள்' என்றது என்றும் அருளிச் செய்வர்.

இப்படியாக எம்பெருமான் அடியாரை ரக்ஷிக்கப் படைத்த பெரும் புகழ்களைத் துதிக்கும் இசையிலே வைத்துப்பாடியும் ஆடியும் திரிகிற நான் இடைவிடாத ஸந்தோஷபாவத்தையுடையேன் என்றாராயிற்று. .... (௭)

முட்டில்பல்போகத்தொருதனிநாயகன் மூவுலகுக்குரிய *
கட்டியைத்தேனையமுதை நன்பாலைக்கனியைக்கரும்புதன்னை *
மட்டவிழ்தண்ணந்துழாய்முடியானைவணங்கி அவன் திறத்துப்
பட்டபின்னை * இறையாகிலும் யானென்மனத்துப்பரிவிலனே. (௮)

| | |
|---|---|
| முட்டு இல் | இடையூறொன்றுமில்லாத |
| பல் போகத்து | பலவகையான போகங்களையுடையவனும் |
| ஒரு தனி நாயகன் | ஒப்பற்ற தலைவனும் |
| மூ உலகுக்கு உரிய | மூவுலகத்தவர்கட்கும் பொதுவிலே போக்யமான |
| கட்டியை | கருப்பங்கட்டி போன்றவனும் |
| தேனை | தேன் போன்றவனும் |
| அமுதை | அமிருதம் போன்றவனும் |
| நல் பாலை | நல்ல பால்போன்றவனும் |
| கனியை | கனி போன்றவனும் |
| கரும்பு தன்னை | கரும்பு போன்றவனுமாய் |
| மட்டு அவிழ் | மது பெருகப்பெற்ற |
| தண் அம் துழாய் முடியானை | குளிர்ந்தழகிய திருத்துழாய் மாலையைத் திருமுடியிலணிந்தவனுமான எம்பெருமானை |
| வணங்கி | நமஸ்கரித்து |
| அவன் திறத்து | அவன்விஷயத்திலே |
| பட்ட பின்னை | ஆட்பட்டேனாதலால் |
| யான் | இப்படிப்பட்ட அடியேன் |
| இறை ஆகிலும் | சிறிதளவும் |
| என் மனத்து | என்மனத்தில் |
| பரிவு இலன் | பீடையையுடையேனல்லேன். |

* * * [முட்டில் பல் போகத்து.] எம்பெருமானுடைய போக்யதையை அநுஸந்தித்து அவனுக்கு அடிமை செய்வதிலேயே ஊன்றியிருக்கு மெனக்கு ஒரு துக்கமுமில்லை யென்கிறார்.

நாமும், நம்மில் மேற்பட்டவர்களான தேவர்களும், அவர்கட்கும் தலைவரான இந்திரன் பிரமனீசன் முதலாயினோரும் பலவகைப்பட்ட போகங்களை அநுபவிப்பது உண்டாயினும் ஒவ்வொருவருடைய போகமும் அளவு பட்டதாயும், ஒரு காலத்திலே அழியக் கூடியதாயுமிருக்குமத்தனையல்லது ஸ்திரமாய் அளவு கடந்ததாயிருக்கும் போகம் எம்பெருமானொருவனுக்கேயாகு மென்பது விளங்க "முட்டில் பல் போகத்து" என்றார். "யாங்கடவுளென்றிருக்கு மெவ்வுலகிற் கடவுளர்க்கும் ஆங்கடவுள் நீயென்றால் அஃதுனக்கு வியப்பாமோ?" (திருவரங்கக்கலம்பகம்—க.) என்றபடி ஈச்வராபிமானிகளெல்லார்க்குள்ளும் தனி நாயகன் ஸ்ரீமந்நாராயணனேயாவன் என்பது தோன்ற "ஒரு தனிநாயகன்" என்றார். 'மூவுலகுக்குரிய' என்பது தனிநாயகனுக்கு அடைமொழியாகும். 'மூவுலகுக்குரிய கட்டியை' என்று மேலோடே அந்வயித்தலுமொன்று. ஒவ்வொரு உலகத்தவர் ஒவ்வொன்றை போக்யவஸ்துவாகக் கொண்டவராயினும் ஸர்வஸாதாரண போக்யதை எம்பெருமானொருவனுக்கே யாகும். இரண்டாமடி முழுவதாலும் எம்பெருமானுடைய ஸ்வரூபத்திலுள்ள போக்யதை பேசப்பட்டது. மூன்றாமடியில் "மட்டவிழ்தண்ணந்துழாய் முடியானை" என்பதனால் திவ்யமங்கள விக்ரஹத்தின் போக்யதை அநுபவிக்கப் பட்டது. கட்டியை என்று தொடங்கி (கட்டி, தேன், அமுது, பால், கனி, கரும்பு என்று) ஆறு ஸுவைப்பொருள்களைக் கூறியது ஆழ்வார்தமக்கு எம்பெருமானே அறுசுவையடிசில் என்று காட்டினபடியாம்.

"ரஸம்ஹ்யேவாயம் லப்த்வாநந்தீபவதி" என்று உபநிஷத்திற் கூறியபடியே ஒரு தேசவிசேஷத்திலே சென்று பெறவேண்டிய அநுபவம் எனக்கு

இந்நிலத்திலேயே கிடைத்து விட்டதனால் ஒரு குறையுமுடையேனல்லேன் என்றாராயிற்று. .... .... .... .... (௩)

பரிவின்றிவாணனைக்காத்துமென்று அன்றுபடையொடும்வந்தெதிர்ந்த *
திரிபுரம்செற்றவனும்மகனும் பின்னுமங்கியும்போர்தொலைய *
பொருசிறைப்புள்ளைக்கடாவியமாயனை ஆயனைப்பொற்சக்கரத்து
அரியினை * அச்சுதனைப்பற்றி யானிறையேனுமிடரிலனே. (௪)

| | | | |
|---|---|---|---|
| அன்று | முன்பொருகாலத்தில், | பொரு சிறை புள்ளை கடாவிய | பொருகின்ற சிறகையுடைய பக்ஷிராஜனை நடத்திய |
| வாணனை | பாணாசுரனை | மாயனை | ஆச்சர்ய சக்தியுக்தனும் |
| பரிவு இன்றி | வருத்தமின்றியே | ஆயனை | கோபாலக்ருஷ்ணனாய் அவதரித்தவனும் |
| காத்தும் என்று | 'காக்கக்கடவோம்' என்று அபிமானித்து | பொன் சக்கரத்து | அழகிய திருவாழியையுடையவனும் கொண்டு |
| படையொடும் | ஆயுதங்களோடேகூட | அரியினை | விரோதிகளை அழியச் செய்பவனும் |
| வந்து எதிர்ந்த | வந்து எதிரிட்ட | அச்சுதனை | அடியார்களைக் கைவிடாதவனுமான எம்பெருமானை |
| திரிபுரம் செற்றவனும் | த்ரிபுரதஹனம் செய்தவனான ஈஸ்வரனும் | பற்றி | அடைந்து |
| மகனும் | அவன்மகனான ஆறுமுகனும் | யான் | அடியேன் |
| பின்னும் | அதற்குமேலே | இறையேனும் | சிறிதளவும் |
| அங்கியும் | அக்நியும் | இடர் இலன் | இடைஞ்சலுடையேனல்லேன். |
| போர் | போர்க்களத்திலே | | |
| தொலைய | பங்கமடையும்படி, | | |

* * * [பரிவின்றி.] தேவதாந்தரங்களைப் பற்றினவர்களுக்கு அவர்கள் ரக்ஷகரல்லர் என்பதையும், தன்னைப் பற்றினவர்களைத் தான் கைவிடுவதில்லையென்பதையும் நன்கு காட்டிக்கொடுத்த எம்பெருமானைப் பற்றினவெனக்கு ஒரு குறையுமில்லையென்கிறார்.

பலிசக்ரவர்த்தியின் ஸந்ததியிற் பிறந்த பாணாஸுரனுடைய பெண்ணாகிய உஷையென்பவள், ஒருநாள் ஒரு புருஷனோடு தான் கூடியிருந்ததாகக் கனாக் கண்டு அவனிடத்தில் மிகுந்த காதல் கொண்டவளாய், தன் உயிர்த்தோழியான சித்திரலேகைக்கு அச்செய்தியைத் தெரிவித்து அவள் மூலமாய் அந்தப் புருஷன் க்ருஷ்ணனுடைய பௌத்திரனும் ப்ரத்யும்நனது புத்திரனுமாகிய அநிருத்தனென்று அறிந்துகொண்டு 'அவனைப் பெறுவதற்கு உபாயம் செய்ய வேண்டும்' என்று அத்தோழியையே வேண்ட, அவள் தன் யோகவித்யையின் மஹிமையினால் த்வாரகைக்குச் சென்று அநிருத்தனைத் தூக்கிக்கொண்டுவந்து அந்தப்புரத்திலே விட, உஷை அவனோடு போகங்களை யநுபவித்துவர, இச்செய்தியைக் காவலாளரால் அறிந்த அந்தப்பாணன் தன் சேனையுடன் அநிருத்தனை யெதிர்த்து மாயையினாலே பொருது நாகாஸ்திரத்தினால் கட்டிப்போட்டிருக்க, த்வாரகையிலே அநிருத்தனைக்காணாமல் யாதவர்களெல்லாரும் கலங்கியிருந்த

போது, நாரதமுனிவனால், நடந்தவாலாறு சொல்லப்பெற்ற ஸ்ரீக்ருஷ்ணபகவான் பெரிய திருவடியை நினைத்தருளி, உடனே வந்து நின்ற அக்கருடாழ்வானது தோள்மேலேறிக்கொண்டு பலராமன் முதலானாரோடுகூடப் பாணபுரமாகிய சோணிதபுரத்துக்கு எழுந்தருளும்போதே, அப்பட்டணத்தின் சமீபத்திற் காவல் காத்துக்கொண்டிருந்த சிவபிரானது பிரமதகணங்கள் எதிர்த்துவர, அவர்களை யெல்லாம் அழித்து, பின்பு சிவபெருமானால் ஏவப்பட்டதொரு ஜ்வரதேவதை மூன்றுகால்களும் மூன்று தலைகளுமுள்ளதாய் வந்து பாணனைக் காப்பாற்றும் பொருட்டுத் தன்னோடு போர்புரிய, தானும் ஒரு ஜ்வரத்தை யுண்டாக்கி அதன் சக்தியினாலே அதனைத் துரத்திவிட்ட பின்பு, சிவபிரானது அநுசரர்களும் வாணனது கோட்டையைச் சூழ்ந்துகொண்டு காத்திருந்தவர்களுமான அக்கிதேவர் ஐவரும் தன்னோடு எதிர்த்துவர, அவர்களையும் நாசஞ் செய்து பாணாசுரனோடு போர் செய்யத்தொடங்க, அவனுக்குப் பக்கபலமாகச் சிவபெருமானும் ஸுப்ரஹ்மண்யன் முதலான பரிவாரங்களுடன் வந்து எதிர்த்துப் போரிட, கண்ணன் தான் ஜ்ரும்பணாஸ்திரத்தைப் பிரயோகித்துச் சிவபிரான் ஒன்றுஞ்செய்யமாட்டாமல் கொட்டாவிவிட்டுக்கொண்டு சோர்வடைந்துபோம்படி செய்து, ஸுப்ரஹ்மண்யனையும் கணபதியையும் ஹுங்காரங்களால் ஒதுக்கி ஓட்டி, பின்னர் அனேகமாயிரஞ் சூரியர்க்குச் சமானமான தனது சக்கராயுதத்தையெடுத்துப் பிரயோகித்து அப்பாணனது ஆயிரந்தோள்களையும் தாரை தாரையாய் உதிரமொழுக அறுத்து அவனுயிரையும் சிதைப்பதாகவிருக்கையில், பரமசிவன் அருகில் வந்து வணங்கிப் பலவாறு பிரார்த்தித்ததனால் அவ்வாணனை நான்கு கைகளோடும் உயிரோடும் விட்டருளி, பின்பு அவன் தன்னைத்தொழுது அநிருத்தனுக்கு உஷையைச் சிறப்பாக மணம் புரிவிக்க, அதன்பின் மீண்டுவந்தனன்—என்பது இப்பாசுரத்திற் குறித்த வரலாறு.

திரிபுரஞ் செற்றவனும் என்றவிடங்கிய வரலாறு வருமாறு:—முற்காலத்தில் தாரகாசுரனுடைய புத்திரர்களாகிய வித்யுந்மாலி தாரகாக்ஷன் கமலாக்ஷன் என்னும் மூவரும் மிக்க தவஞ்செய்து பிரமனிடம் பெருவரம் பெற்று, வானத்திற்பறந்து செல்லுந் தன்மைவாய்ந்த மூன்று பட்டணங்களையடைந்து மற்றும்பல அசுரர்களோடு அங்கநாங்களுடனே தாம் நினைத்தவிடங்களிற் பறந்துசென்று பல விடங்களின்மேலும் இருந்து அவ்விடங்களைப் பாழாக்கி வருகையில், அத்துன்பத்தைப் பொறுக்கமாட்டாது தேவர் முனிவர் முதலியோரது வேண்டுகோளினால் சிவபெருமான் பூமியைத் தேராகவும் சந்திர ஸூர்யர்களைத் தேர்ச்சக்கரங்களாகவும் நான்கு வேதங்களை நான்கு குதிரைகளாகவும் பிரமனைச் சாரதியாகவும் மஹாமேருவை வில்லாகவும் ஆதிசேஷனை விற்நாணியாகவுங் கொள்ள, வாயுவாகிய சிறகமைந்த அக்நியை முனையாகவுடைய அம்பின் ஸ்தானத்திலே விஷ்ணுநிற்க, இவ்வளவு அமைப்புடனே யுத்தஸன்னத்தனாய்ச் சென்று போர் தொடங்கும்போது சிரித்து, அச்சிரிப்பில் நின்று உண்டான நெருப்பினால் அவ்வசுரர்களை அங்கநாங்களுடனே எரித்திட்டனன்.

இந்த த்ரிபுரஸம்ஹாரஞ் செய்தது சிவனேயாகிலும் இது நிறைவேறியதற்கு முக்யகாரணம் திருமாலே யென்க. மஹாபாரதத்தில் கர்ணபருவத்தில் இருபத்திநான்காமத்யாயம் முதலாக நான்கு அத்யாயங்களில் இவ்வரலாறு விரிவாகச் சொல்லப்பட்டுள்ளது. அங்கு "[illegible]" [சிந்தயித்வா ஹரிம் விஷ்ணுமவ்யயம் யஜ்ஞவாஹநம், சரம் ஸங்கல்பயாஞ்சக்ரே விச்வகர்மா மஹாமநா:] என்றும், "[illegible]" [விஷ்ணுராத்மா பகவதோ பவஸ்யாமிததேஜஸ:, தஸ்மாத் தநுர்ஜ்யாஸம்ஸ்பர்சம் ஸ விஷேஹே மஹேச்வர:] என்றுமுள்ள ச்லோகங்கள் காண்க. எம்பெருமான் ருத்ரமூர்த்திக்கு அந்தராத்மாவாக இருந்ததனாலும் அம்பாக அமைந்ததனாலும் இக்காரியம் எளிதாகக் கைகூடிற்றென்கை. [illegible] முதற்பத்தில் முதற்றிருவாய்மொழியில் எட்டாவது பாசுரத்தில் "புரமொரு மூன்றெரித்து" என்று த்ரிபுரதஹநத்தை எம்பெருமானுடைய காரியமாகவே ஆழ்வாரருளிச் செய்ததும் இதுபற்றியே.

இங்கே ஈட்டு ஸ்ரீஸூக்திகாண்மின் ;—" கடல் கடைகிறபோது எட்டுவடிவு கொண்டு நின்று கடைந்தாற்போலே த்ரிபுரதஹந ஸமயத்திலே வில்லுக்குமிடுக்காயும் நாணிக்குத் திண்மையாயும் அம்புக்குக் கூர்மையாயும் தனக்கு அந்தராத்மாவாயும் எதிரிகளைத் தலை சாய்க்கும்படி பண்ணி த்ரிபுரத்தையழித்துக் கொடுத்தான். அத்தையறியாதே அஜ்ஞரானவர்கள் இத்தை அவன் தலையிலே வைத்துக் கவிபாட இத்தைத் தானுங்கேட்டு, மெய்யிறேயென்று மயங்கி 'அது செய்த நமக்கு இவனை வெல்லத்தட்டென்?' என்று வந்து எதிரிட்டானிற்று.—இத்தால் சொல்லிற்றாயிற்று ருத்ரன் தன்னை அபாச்ரயமாகப் பற்றினாரை ஆபத்து வந்தவாறே காட்டிக்கொடுத்து ஓடுமென்னுமிடமும், ஸர்வேச்வரன் தன்னைப்பற்றினாரை எல்லாவளவிலும் ரக்ஷிக்குமென்னுமிடமும்."

"பற்றி யான் இறையேனுமிடரிலனே" என்றவிடத்து ஈடு:— பேரன் என்றிருக்கையாலே அநிருத்தாழ்வானுக்கு நாலுமாஸம் சிறையிலிருக்க வேண்டிற்று; அடியேனென்று பற்றினவெனக்கு அதுவும் வேண்டிற்றில்லை." (௭)

இடரின்றியே யொருநாளொருபோழ்தில் எல்லாவுலகும்கழிய *
படர்புகழ்ப்பார்த்தனும்வைதிகனும் உடனேறத்திண்டேர்கடவி *
சுடரொளியாய்நின்றதன்னுடைச்சோதியில் வைதிகன்பிள்ளைகளை *
உடலொடுங்கொண்டுகொடுத்தவனைப்பற்றி ஒன்றுந்துயரிலனே. (௮)

ஒரு நாள் — ஒருநாளிலே
ஒரு போழ்தில் — ஓர் க்ஷணத்திலே
எல்லா உலகும் கழிய — எல்லா வுலகங்களுக்கும் அப்பால் போம்படியாக,
படர் புகழ் பார்த்தனும் — பரம்பின புகழையுடைய அர்ஜுநனும்
வைதிகனும் — வைதிகப்பிராமணனும்
உடன் ஏற — கூடவேறியிருக்கும்படி

| | |
|---|---|
| இடர் இன்றியே | இடைஞ்சல் ஒன்றுமின்றி |
| திண் தேர் கடவி | திடமான திருத்தேரைச் செலுத்தி, |
| சுடர் ஒளி ஆய் நின்ற | மிகவும் சிறந்த தேஜோமயமாயிருக்கின்ற |
| தன்னுடை சோதியில் | தன்னுடையதாய், பரஞ்சோதி யெனப்படுவதான திருநாட்டிலே |
| வைதிகன் பிள்ளைகளை | அந்த வைதிகனுடைய பிள்ளைகள் நால்வரையும் |
| உடலொடும் | அவ்வுடம்போடே |
| கொண்டு கொடுத்தவனை | மீட்டுக்கொணர்ந்து கொடுத்தருளின பெருமானை |
| பற்றி | அடைந்து (அதனால்) |
| ஒன்றும் துயர் இலன் | சிறிதும் துயரமுடையே னல்லேன். |

* * * [இடரின்றியே.] வைதிகன் பிள்ளைகளைக் கொணர்ந்து கொடுத்த அதிமாநுஷ சேஷ்டிதத்தை அநுஸந்தித்து, இங்ஙனே அரியன செய்தும் அடியார்களைக் காத்தருளவல்ல பெருமானைப்பற்றின வெனக்கு யாதொரு துயரு மில்லை யென்கிறார்.

ஒரு பிராமணனுக்கு முறையே பிறந்த மூன்று பிள்ளைகள், பிறந்த அப்பொழுதே பெற்றவர்களுமுட்பட முகத்தில் விழிக்கப்பெறாதபடி இன்னவிடத்திலே போயிற்றென்று தெரியாமல் காணவொண்ணாது போய்விடுகையாலே, நான்காம் பிள்ளையை மனைவி ப்ரஸவிக்கப் போகிறவளவிலே அந்த அந்தணன் கண்ணபிரானிடம் வந்து 'இந்த ஒரு பிள்ளையையாகிலும் தேவரீர் பாதுகாத்துத் தந்தருளவேண்டும்' என்று பிரார்த்திக்க, கிருஷ்ணன் 'அப்படியே செய்கிறேன்' என்று அநுமதி செய்த பின்பு, ஒரு யாகத்திலே தீக்ஷிதனாயிருந்த கண்ணபிரான் எழுந்தருளக் கூடாதென்பதுபற்றி அர்ஜுநன் நானே போய் ரக்ஷிக்கிறேனென்று பிரதிஜ்ஞை பண்ணி, பிராமணனையுங் கூட்டிக்கொண்டு போய், ப்ரஸவிக்கிற இருப்பிடத்தைச்சுற்றும் காற்றுமுட்படப்ப்ரவேசிக்க வொண்ணாதபடி சரக்கூடங்கட்டிக் காத்துக்கொண்டு நிற்கையில், பிறந்த பிள்ளையும் வழக்கப்படியே பிறந்தவளவிற் காணவொண்ணாது போய்விடவே, பிராமணன் வந்து அர்ஜுநனை மறித்து 'க்ஷத்ரியாதமா! உன்னாலன்றோ என்பிள்ளை போம்படியாயிற்று; கிருஷ்ணன் எழுந்தருளிக் காப்பதை நீயன்றோ தடுத்தாய்' என்று நிந்தித்துக் கிருஷ்ணன் பக்கலிலே இழுத்துக்கொண்டுவர, கண்ணபிரான் கண்டு புன்சிரிப்புக்கொண்டு 'அவனை விடு, உனக்குப் பிள்ளையை நான் கொணர்ந்து தருகிறேன்' என்றருளிச்செய்து, பிராமணனையும் அர்ஜுநனையும் தன்னுடன் கொண்டு தேரிலேறி, அர்ஜுநனைத் தேர்செலுத்தச் சொல்லி, அத்தேர்க்கும் அவர்கட்கும் திவ்யசக்தியைத் தனது ஸங்கல்பத்தாற் கல்பித்து இவ்வண்டத்துக்கு வெளியே நெடுந்தூரமளவுங் கொண்டுபோய், அங்கு ஓரிடத்தில் தேருடனே இவர்களை நிறுத்தி, தேஜோரூபமான பரமபதத்திலே தன்நிலமாகையாலே தானே போய்ப்புக்கு, அங்கு நாச்சிமார் தங்கள் ஸ்வாதந்திரியம் காட்டுகைக்காகவும் கண்ணபிரானது திவ்ய ஸௌந்தர்யத்தைக் கண்டு களிக்கைக்காகவும் அழைப்பித்துவைத்த அந்தப்பிள்ளைகள் நால்வரையும் அங்கு நின்றும் பூர்வரூபத்தில் ஒன்றுங்குலையாமற் கொண்டுவந்து கொடுத்தருளினனென்ற வரலாறு இப்பாசுரத்திலடங்கியது.

மீளாவுலகமாகிய பரமபதத்திற் சென்றவர்கள் மீண்டனரென்பது எங்ஙனே கூடுமென்கிற சங்கைக்குப் பெரியோர்கள் இங்குப் பலவிதமாக ஸமாதானங் கூறுவர்கள்: அர்ச்சிராதிமார்க்கத்தாற் சென்றவர்கள் திரும்பிவருதலில்லையென்றும், அதுவும் அவர்களுடைய ஸ்வதந்த்ரமான இச்சையினால் இல்லையென்றும் இங்கு முக்கியமாக வுணர்க.

"உடலோடேங் கொண்டு கொடுத்தவனை" என்றவிடத்தை பட்டர் உபந்யஸித்தருளும்போது "பூணின மஞ்சளும் உடுத்தின பட்டும் இட்ட சவடிப்பூணூலும் இட்ட சாதுப்பணி"களுமான வொப்பனையில் ஒன்றுங் குறையாதபடி கொண்டுவந்து கொடுத்தவனென்றருளிச் செய்தாராம்: அது கேட்டவர்கள் "இப்பிள்ளைகள் பிறந்தக்ஷணத்திலேயே கொண்டுபோகப்பட்டார்களாகவன்றோ சொல்லுகிறது; அப்போது இவையெல்லாம் இருக்க ப்ரஸக்தியில்லையே" என்று பட்டரிடம் விஜ்ஞாபிக்க, "ரிஷிபுத்திரர்களாகையாலே பிறக்கிறபோதே அவற்றோடே பிறப்பர்களாகும்" என்றருளிச் செய்தாராம். ரஸோக்தியிருந்தபடி. .... .... .... .... (௫)

துயரில்சுடரொளிதன்னுடைச்சோதி நின்றவண்ணம்நிற்கவே *
துயரின்மலியும்மனிசர்பிறவியில் தோன்றிக்கண்காணவந்து *
துயரங்கள்செய்துதன் தெய்வநிலையுலகில் புகவுய்க்குமம்மான் *
துயரமில்சீர்க்கண்ணன்மாயன்புகழ்துற்ற யானோர்துன்பமிலனே. (௬)

| | | | |
|---|---|---|---|
| துயர் இல் | துன்பமற்றதும் | தன் தெய்வம் நிலை | தன்னுடைய அப்ராக்ருத ஸ்வபாவத்தை |
| சுடர் ஒளி | சிறந்த தேஜோரூபமுமான | உலகில் | இவ்வுலகத்தின் கண் |
| தன்னுடை சோதி | தன்னுடைய விக்ரஹமானது | புக உய்க்கும் | ப்ரகாசப்படுத்தின |
| நின்ற வண்ணமே நிற்க | அங்கு இருக்கும்படியிலொன்றுங்குறையாமே நிற்கும்படியாக, | அம்மான் | ஸ்வாமியாய் |
| துயரின் மலியும் மனிசர் பிறவியில் தோன்றி | துக்கத்திலேயழுந்தின மனிதருடைய யோனிகளிலே பிறந்து | துயரம் இல் சீர் | ஹேய குணங்கள் இன்றிக்கே கல்யாண குணமயனும் |
| கண் காண வந்து | (அனைவரும்) கண்ணாற் காணும்படியாக வந்து | மாயன் | ஆச்சர்ய சக்தியுக்தனுமான |
| துயரங்கள் செய்து | (அனைவரையும்) ஈடுபடுத்தி | கண்ணன் | கண்ணபிரானுடைய |
| | | புகழ் | கீர்த்திகளை |
| | | துற்ற யான் | அநுபவிக்கப்பெற்றயான் |
| | | ஓர் துன்பம் இலன் | ஒரு துன்பமுமுடையேனல்லேன். |

* * * [துயரில் சுடரொளி.] தன்னுடைய அப்ராக்ருதமான திவ்யமங்கள விக்ரஹத்தை இதரஸஜாதீயமாக்கி ஸம்ஸாரிகளின் கட்புலனுக்கு இலக்காக்கி வைத்த கண்ணபிரானுடைய திருக்குணங்களை அநுபவிக்கப் பெற்றவெனக்கு ஒரு துன்பமுமில்லையென்கிறார்.

எம்பெருமான் மத்ஸ்யகூர்மாதி அவதாரங்களையும் ராமக்ருஷ்ணாதி அவதாரங்களையும் செய்தருளினகாலத்து ஏற்றுக்கொண்ட திருமேனியானது நம்

போன்றவர்களின் உடல்போல மாம்ஸாதிமயமாகத் தோன்றியிருந்தாலும் உண்மையில் அப்படிப்பட்டதன்று; பரமபதத்தில் அப்ராக்ருதமாகவுள்ள திவ்யமங்கள விக்ரஹத்திற்கும் விபவாவதாரங்களில் பரிக்ரஹிக்கப்பட்ட திருமேனிக்கும் சிறிதும் வேற்றுமையில்லை—என்னுமிடம் முன்னடிகளிற் கூறப்பட்டது. கீழும் (3-5-5) "ஆதியஞ்சோதியுருவை அங்குவைத்திங்குப்பிறந்த" என்றருளிச் செய்தது நினைக்க. பகவத்கீதையிலும் நான்காமத்யாயத்தில் "ப்ரக்ருதிம் ஸ்வாமதிஷ்டாய ஸம்பவாமி— ப்ரக்ருதிம் ஸ்வாமதிஷ்டாய ஸம்பவாமி" என்றது காண்க.

"மனிசர்பிறவியில்" என்றதை உபலக்ஷணமாகவுங் கொள்ளலாம்; எந்நின்ற யோனியுமாய்ப் பிறப்பவனாதலால்.

எம்பெருமானார் பெரும்பாலும் இந்தப் பாசுரந்தன்னையே திருவுள்ளத்திற் கொண்டு கீதாபாஷ்ய ப்ரவேசத்தில் "ஸகலமநுஜநயந விஷயதாம் கத:" இத்யாதி ஸ்ரீஸூக்திகளை யருளிச் செய்தாரென்றுணர்க.

துயரங்கள் செய்து = துயரங்களைத் தீர்ப்பதற்காக வந்து அவதரித்திருக்கச் செய்தே 'துயரங்கள் செய்து' என்னலாமோ வென்னில்; இங்கே நம்பிள்ளை வீடு காண்மின்; "அநுகூலரை அழகாலே நோவுபடுத்தியும், ப்ரதிகூலரை ஆயுதத்தாலே நோவுபடுத்தியும்."

உலகில் தன்தெய்வநிலை புகவுய்க்கு மம்மான் = பரமபதத்திலே நடையாடுகின்ற ஸ்வபாவத்தை ஸம்ஸாரிகளுக்குத் தெரிவித்தவன் என்றபடி. தூது போயும் தேரோட்டியாயிருந்தும் தன்படியைத் தெரிவித்தவன் என்னவுமாம். இப்படிப்பட்ட எம்பெருமானுடைய திருக்கல்யாண குணங்களை நெருங்க அனுபவிக்கப் பெற்ற எனக்கு எவ்வகைத் துன்பமுமில்லை யென்றாராயிற்று.

இற்ற — அற்றிய என்றபடி. .... .... .... (௬)

துன்பமுமின்பமுமாகிய செய்வினையாயுலகங்களுமாய் *
இன்பமில்வெந்நரகாகி இனியநல்வான்சுவர்க்கங்களுமாய் *
மன்பல்லுயிர்களுமாகிப் பலபலமாயமயக்குக்களால் *
இன்புறுமிவ்விளையாட்டுடையானைப்பெற்று ஏதுமல்லலிலனே. (௭)

- துன்பமும் இன்பமும் ஆகிய — துக்கத்திற்கும் ஸுகத்திற்கும் காரணமாகக்கூடிய
- செய் வினை ஆய் — புண்ய பாபரூப கருமங்களுக்கு நிர்வாஹகனாய்
- உலகங்களும் ஆய் — உலகங்களுக்கும் நிர்வாஹகனாய்
- இன்பம் இல் வெம் நரகு ஆகி — இன்பமற்ற கொடிய நரகலோகத்திற்கும் நிர்வாஹகனாய்
- இனிய நல் வான் சுவர்க்கங்களும் ஆய் — மிகவும் நன்றாய்ச்சிறந்த ஸ்வர்க்க ப்ரதேசங்களுக்கும் நிர்வாஹகனாய்
- மன் பல் உயிர்களும் ஆகி — நித்யமான பல பிராணிகளுக்கும் நிர்வாஹகனாய்
- பல பல மாயம் மயக்குக்களால் — பலவகைப்பட்ட ப்ரக்ருதி விகாரரூபமான மோஹ விகாரங்களாலே

இன்பு உறும் இவ் விளையாட்டு உடையானை } ரஸாவஹமான விளையாட்டுக்களையுடையவனான எம்பெருமானை | பெற்று } அநுபவிக்கப் பெற்றதனால் ஏதும் அல்லல் இலன் } சிறிதும் துக்கமுடையேனல்லேன்.

* * * [துன்பமுமின்பமுமாகிய.] புண்யபாப ரூபகருமங்களுக்கும், அவற்றைச் சம்பாதிப்பதற்குரிய இடமான லோகங்களுக்கும், அவற்றின் பலன்களையநுபவிக்குமிடமான லோகங்களுக்கும், அப்பலன்களை அநுபவிக்குமவர்களான ஆன்மாக்களுக்கும் நியாமகனும் லீலாரஸமநுபவிக்கின்ற எம்பெருமானையடையப் பெற்றதனால் ஒருவகையான அல்லலும் எனக்கில்லையென்கிறார்.

"துன்பமுமின்பமுமாகிய செய்வினை" என்றது—துன்பங்களுக்குக் காரணமாயும் இன்பங்களுக்குக் காரணமாயுமுள்ள செய்வினை என்றபடி. துக்க ஹேதுவான பாபங்களையும், ஸுக ஹேதுவான புண்யங்களையும் சொன்னவாறு. புண்யபாபங்கள் எம்பெருமானிட்டவழக்கு என்றாராயிற்று. "யச் ச்ருதியம் த்விதய மாஜ்ஞாபயோராஜ்ஞாயுச்சா—யத் த்வத்ப்ரியம் ததிஹ புண்யம் அபுண்யமந்யத்" (அதிமாநுஷஸ்தவம்) என்றார் கூரத்தாழ்வான்.

உலகங்களுமாய் = புண்யபாபங்களை ஆர்ஜிக்குமிடங்களும் எம்பெருமானிட்டவழக்கு என்றபடி.

பாபங்களின் பலன்களையநுபவிக்குமிடமான நரகமும், புண்யங்களின் பலன்களையநுபவிக்குமிடமான ஸ்வர்க்கம் முதலியலோகங்களும் எம்பெருமானிட்ட வழக்கு என்கிறது இரண்டாமடி. வான்—சிறந்த என்றபடி. நரகு—நரக: என்ற வடசொற்சிதைவு.

மன்பல்லுயிர்களுமாகி = புண்யபாப ரூபகருமங்களைச் செய்பவர்களும், பிறகு அவற்றின் பலன்களையநுபவிப்பவர்களுமான உயிர்களும் அவனிட்ட வழக்கு என்கை. மன் என்றது ஆத்மாக்களின் நித்யத்வத்தைச் சொன்னபடி. பல் என்றது அவர்களின் எண்ணிறந்தமையைச் சொன்னபடி.

பலபலமாயமயக்குக்களால்இன்புறு மிவ்விளையாட்டுடையான் = "வணங்குந்துறைகள் பலபலவாக்கி மதிவிகற்பால் பிணங்குஞ்சமயம் பலபலவாக்கி, அவையவைதோறு அணங்கும் பலபலவாக்கி நின்மூர்த்திபரப்பிவைத்தாய்" (திருவிருத்தம்) என்கிறபடியே பலவகைப்பட்ட உபாயங்களையும் வேறு வேறு மதங்களையும் நானாவகைத் தெய்வங்களையுமுண்டாக்கி வைத்து இங்ஙனே லீலாரஸங் கொண்டாடுகின்ற எம்பெருமானுடைய லீலைகளையநுபவிக்கப் பெற்றதனால் ஒரு கிலேசமுமுடையேனல்லேன் என்றாராயிற்று.

"இன்புறு மிவ்விளையாட்டுடையான்" என்றவிடத்து "லோகவத்து லீலாகைவல்யம்" என்ற ப்ரஹ்மஸூத்ரம் ஸ்மரிக்கத்தக்கது. .... (எ)

அல்லலிலின்பமளவிறந்தெங்கும் அழகமர்சூழொளியன் *
அல்லிமலர்மகள்போகமயக்குக்கள் ஆகியுமிற்குமம்மான் *
எல்லையில்ஞானத்தன்ஞானமஃதேகொண்டெல்லாக்கருமங்களும்செய்
எல்லையில்மாயனைக்கண்ணனைத்தாள்பற்றி யானோர்துக்கமிலனே. (அ)

| பதம் | பொருள் |
|---|---|
| அல்லல் இல் இன்பம் | வருத்தம் சிறிதும் கலசாத ஆனந்தகுணம் |
| அளவு இறந்து | அளவில்லாமல் இருக்கப் பெற்று |
| எங்கும் அமர் | எங்கும் பரம்பின |
| அழகு ஆம் ஒளியன் | சௌந்தர்யத்தோடு சேர்ந்த லாவண்யத்தையுடையவனும், |
| அல்லி மலர் மகள் | தாமரைமலரில் தோன்றிய பெரிய பிராட்டியோடு |
| போகம் | ஆனந்தாநுபவத்திலூன்றியிருக்கிற [?] |
| மயக்குக்கள் ஆகியும் நிற்கும் அம்மான் | வியாமோஹமே வடிவெடுத்திருக்கின்ற பெருமானும், |
| எல்லை இல் ஞானத்தன் | எல்லையில்லாத ஞானவிளக்கத்தையுடையவனும் |
| ஞானம் அஃதே கொண்டு | அந்த ஞானத்தையே கருவியாகக் கொண்டு |
| எல்லா கருமங்கள் செய் | காரியவுலகங்களை யெல்லாம் உண்டாக்குமவனும் |
| எல்லை இல் மாயனை | எல்லையில்லாத ஆச்சரிய சேஷ்டிதங்களையுடையவனுமான |
| கண்ணனை | ஸ்ரீக்ருஷ்ணபரமாத்மாவை |
| தாள் பற்றி | திருவடிதொழுது |
| யான் ஓர் துக்கம் இலன் | நான் ஒரு துக்கமுமுடையேனல்லேன்: |

* * * [அல்லலிலின்பம்] முன்னிரண்டடிகளால் — திருநாட்டில் எம்பெருமான் எழுந்தருளியிருக்குமிருப்பையும், பின்னடிகளால்—அவன் இங்கிலத்திற் செய்தருளுஞ் செயல்களையும் பேசி, இப்படிப்பட்ட எம்பெருமானையடையப் பெற்றதனால் எனக்கு யாதொரு துக்கமுமில்லையென்கிறார்.

ஸ்வர்க்கலோகத்தில் ஸுகமுண்டு என்றாலும், அது துக்கம் கலந்த ஸுகமேயல்லது நிஷ்க்ருஷ்டமான ஸுகமன்று; எனெனில்; "ஸுகே₂ऽபி ஸாதிஶயத்வ க்ஷயிஷ்ணுத்வ நிவ்ருத்தி—ஸ்வர்க்கேபி பாதபீதஸ்ய க்ஷயிஷ்ணோர் நாஸ்தி நிர்வ்ருதி:." என்கிறபடியே, மற்றொருவன் புண்யபலன்களையநுபவித்து முடிந்தவாறே தன்கீழாகக் கீழே தள்ளப்படுவதைக் காணுமளவில் அநுபவிக்கின்ற இன்பமும் துன்பமாகவே தோற்றுமன்றோ. ஆதலால், அல்லலோடுகூடின இன்பமே ஸ்வர்க்கம் முதலிய உலகங்களிலுமுள்ளதாம். திருநாட்டிலானந்தம் அப்படியன்றிக்கே நிஷ்க்ருஷ்டமான ஆனந்தமாயிருக்கும்படியை "அல்லலிலின்பமளவிறந்து" என்றதனால் கூறினர். இங்கே நம்பிள்ளை வீடுகாண்மின் ;—"ஸுகஶ்ருதிகளிற்போல து₃:க₂மிஶ்ரமாய்ப் பரிச்சிந்நமாயிராதே து₃:கா₂ஸம்பி₄ந்நமாய் ஸதை₃கரூபமாய் அபரிச்சிந்நமான ஆனந்தத்தையுடையவன்."

எங்குமழகமர் சூழொளியன்— திருநாடடங்கலும் வெள்ளங்கோத்துப் பெருகுகின்ற காந்தியையுடையவன் என்றபடி. அவயவசோபையென்றும் ஸமுதாய சோபையென்றும் அழகு இருவகைப்படும்; அடைவே, ஸௌந்தர்ய மென்றும் லாவண்யமென்றும் வழங்கப்பெறும். இங்கு, அழகு ஒளி என்றவிவற்றால் அவை விவக்ஷிதம். "எங்குமழகமர் சூழொளியன்" என்பதற்கு—திருவடி தொடங்கித் திருமுடியீறாக ஒவ்வொரு அவயவத்தையும் தனித்தனி நோக்குமளவில் 'இங்கே அழகு குடிகொண்டது, இங்கே அழகு குடிகொண்டது' என்னலாம்படி ஒவ்வோரிடத்திலே பரிஸமாப்தமான அழகுடையவன் என்றும் பொருள் கூறுவர்.

இவ்வழகு காட்டிலெறித்த நிலாவாகாதபடி அநுபவிப்பார் உண்டென்கிறது இரண்டாமடி. புஷ்பத்திற் பரிமளந்தானே ஒருவடிவு கொண்டாற்போலேயிருப்பவளான பிராட்டியோடே நித்ய ஸம்ச்லேஷம் பண்ணி அதனாலுண்டாகிய ஆனந்தமே வடிவெடுத்தாற் போன்றுளன் எம்பெருமான்—என்கிறது. இயற்கையான ஆனந்தத்திற்கு மேலே இதுவும் ஒரு பரமானந்தம். ஈடு:—“தன்னுடைய ஆனந்தத்துக்கு மேலே ச்ரிய:பதித்வத்தால் வந்த ஆனந்தத்தை யுடையனாயிருக்கும்.”

எல்லையில்ஞானத்தன் = அந்தப் பிராட்டியோடு கலந்து பரிமாறுவதற்குப் பர்யாப்தமான ஞானபூர்த்தியை யுடையவன் என்றபடி. [ஞானமல்லே கொண்டு இத்யாதி.] பிராட்டியும் தானுமான சேர்த்தியிலே அவள் இங்கிதம் காட்ட அதை யுணர்ந்து அவளுடைய உகப்புக்காகப் பிரபஞ்சத்தைப் படைக்கின்றானெம்பெருமான் என்று ரஸோக்தியாக அருளிச் செய்கிறபடி. „வஶ்யா வீக்ஷ்ய முகம் ததிங்கித பராதீநோ விதத்தேகிலம்— “வஶ்யா வீக்ஷ்ய முகம் ததிங்கித பராதீநோ விதத்தேகிலம்.” என்று ஆழ்வானும் ஸ்ரீஸ்தவத்திலருளிச் செய்தது இப்பாசுரம் நோக்கியே போலும்.

எல்லையில்மாயனைக்கண்ணனை = ஸங்கல்பரூப ஜ்ஞானத்தாலே ஸ்ருஷ்டி முதலிய ஸகலத்தையும் நிர்வஹிக்க வல்லவனாயிருந்துவைத்து, ஸ்ரீக்ருஷ்ணனாய் நேர்கொடுநேரே வந்து பிறந்து அனைவரையும் மோஹிப்பித்த பெருமானைப் பற்றினவெனக்கு ஒரு துக்கமுமில்லை யென்றதாயிற்று. .... .... (௮)

துக்கமில்ஞானச்சுடரொளிமூர்த்தி துழாயலங்கல்பெருமான் *
மிக்கபல்மாயங்களால்விகிர்தம்செய்து வேண்டுமுருவுகொண்டு *
நக்கபிரானோடயன்முதலாக எல்லாருமெவையும் * தன்னுள்
ஒக்கவொடுங்கவிழுங்கவல்லானைப்பெற்று ஒன்றும்தளர்விலனே. (௯)

| | | | |
|---|---|---|---|
| துக்கம் இல் ஞானம் | அஜ்ஞானம் கலசாத ஞானத்தையுடையனும் | அயன் | பிரமனும் |
| சுடர் ஒளி மூர்த்தி | மிகுந்த தேஜோரூபமான விக்ரஹத்தை யுடையனும் | முதல் ஆக | முதலாக |
| துழாய் அலங்கல் பெருமான் | திருத்துழாய் மாலை யணிந்த பெருமானும், | எல்லாரும் | சேதநர்களெல்லாரையும் |
| மிக்க பல் மாயங்களால் | மிகப் பலவகைப்பட்ட ஆச்சரிய சக்திகளாலே | எவையும் | அசேதனங்களெல்லாவற்றையும் |
| வேண்டும் உருவு கொண்டு | இஷ்டமான உருவங்களைப் பரிக்ரஹித்து | ஒக்க | ஒரு சேர |
| விகிர்தம் செய்து | விலக்ஷணசேஷ்டிதங்களைச் செய்யுமவனும், | தன்னுள் ஒடுங்க | தனக்குள்ளடங்குமாறு |
| நக்கபிரானோடு | திகம்பரச் சாமியான சிவபெருமானும் | விழுங்க வல்லானை பெற்று | (பிரளய காலத்தில்) விழுங்கி ரக்ஷிக்கவல்லவனான எம்பெருமானை யடைந்ததனால் |
| | | ஒன்றும் தளர்வு இலன் | சிறிதும் தளர்ச்சியுடையேனல்லேன் |

* * * [துக்கமில்ஞானம்.] எவ்விதமான ஹேயமுமில்லாதவனும் ஸர்வஜ்ஞனும் மாசுமறுவற்ற தேஜோமய திவ்யரூபனும், அதற்குமேலே திருத்துழாய் மாலையு

மணிந்து தன் பெருமையெல்லாம் தோற்ற விளங்குமவனும், தன்னுடைய விசித்ர சக்திகளாலே தனக்கு விருப்பமான திவ்யரூபங்களைப் பரிக்ரஹித்து அற்புதமான திவ்ய சேஷ்டிதங்களைச் செய்து போருமவனும், "களிர்மதிச் சடையனும் நான்முகக் கடவுளும், தனியொளிவிசும்பவர் தலைவனுமுதலா யாவகையுலகமும் யாவருமகப்பட, நிலநீர்த்தீகால் சுடரிருவிசும்பும் மலர்சுடர் பிறவும் சிறிதுடன் மயங்க, ஒரு பொருட் புறப்பாடின்றி முழுவது மகப்படக் கரந்து, ஓராலிலைச்சேர்ந்த எம்பெருமாமாயன்" (திருவாசிரியம்) என்கிறபடியே இவன் பிரமன் முதலாய எல்லாரையும் மற்றுமெல்லாப் பொருள்களையும் பிரளயங் கொள்ளாமே திருவயிற்றிலே வைத்து ரக்ஷிக்குமவனுன எம்பெருமானை நான் அடையப் பெற்றதனால் ஒரு தளர்வுமுடையே னல்லேன் என்றாயிற்று.

இரண்டாமடியை "மிக்கபன்மாயங்களால் வேண்டுமுருவு கொண்டு விகிருதஞ் செய்து" என்று அந்வயிப்பது. விகிருதம் என்றது விலக்ஷண சேஷ்டைகள் என்றபடி. வட சொல்.

நக்கன் + பிரான், நக்கபிரான். நக்ந என்ற வடசொல் நக்கனெனத் திரிந்தது. .... .... .... .... .... (௨)

தளர்வின்றியேயென்றுமெங்கும்பரந்த தனிமுதல்ஞானமொன்றாய் *
அளவுடையைம்புலன்களறியாவகையால் அருவாகிநிற்கும் *
வளரொளியீசனைமூர்த்தியைப் பூதங்களைந்தையிருசுடரை *
கிளரொளிமாயனைக்கண்ணனைத்தாள்பற்றி யானென்றுங்கேடிலனே.

| | | | |
|---|---|---|---|
| என்றும் | எக்காலத்திலும் | மூர்த்தியை | விலக்ஷண விக்ரஹயுக்தனும் |
| எங்கும் | எவ்விடத்திலும் | பூதங்கள் ஐந்தை | பஞ்சபூத நிர்வாஹகனும் |
| தளர்வு இன்றியே | ஆயாஸமில்லாமல் | இரு சுடரை | சந்த்ர ஸூர்ய நிர்வாஹகனும், |
| பரந்த | வியாபித்திருக்குமவனும், | கிளர் ஒளி மாயனை | ஒளிபொருந்தி மேன் மேலும் கிளர்கின்ற ஆச்சர்ய சேஷ்டைகளை யுடையவனுன |
| தனி முதல் ஞானம் ஒன்று ஆய் | அத்விதீயமாய் ஜகத்து காரணமான ஞானமே வடிவெடுத்தவனும், | கண்ணனை | கண்ணபிரானை |
| அளவு உடை | அளவுபட்ட | தாள் பற்றி | திருவடி தொழப்பெற்றதனால் |
| ஐம்புலன்கள் | இந்திரியங்கள் ஐந்தினாலும் | யான் என்றும் கேடு இலன் | யான் ஒருநாளும் கேடு உடையேனல்லேன். |
| அறியா வகையால் | அறியக் கூடாதபடி | | |
| அரு ஆகி நிற்கும் | ரூபமில்லாதவனாய் இருக்குமவனும், | | |
| வளர் ஒளி ஈசனை | வளர்கின்ற வொளியையுடைய ஸ்வாமியாய் | | |

* * * [தளர்வின்றியே.] அனைவர்க்கும் அந்தராத்மபூதனுன ஸ்ரீக்ருஷ்ணனைப் பற்றின நான் ஒரு அழிவையுமுடையேனல்லேனென்கிறார். "தளர்வின்றியே யென்று மெங்கும் பரந்த" என்றது எம்பெருமானுக்கு விசேஷணம். எல்லாக்

காலத்திலும் எல்லாவிடத்திலும் தன்னுடைய நியாமகத்வசக்தியும் தளர்த்தி யில்லாத பூர்த்தியோடே வ்யாபித்திருக்குமவன் என்றபடி. "தனிமுதல் ஞான மொன்றாய்" என்றது—ஸகலப்ரபஞ்சஸ்ருஷ்டிக்கும் வேறொருகருவி வேண்டாத படி ஸங்கல்பரூப ஜ்ஞானமொன்றையே அத்விதீய ஸாதனமாகவுடையவன் என்றபடி. தனிமுதல் என்பதையும் எம்பெருமானுக்கே அடைமொழியாக்கு தலுமுண்டு. .... ....

செவி வாய் கண் மூக்குடலென்னும் ஐம்புலன்கள் அல்பவிஷயங்களை க்ரஹிக்கவல்லவையேயன்றி, அபரிச்சின்ன விஷயமான எம்பெருமானை க்ரஹிக்க முடியாதவை. . உழக்காலே கடலை முகக்க வொண்ணாதாப்போலே ஐம்புலன் களால் அறிய வொண்ணாதபடி அவற்றுக்கு அவிஷயமாயிருப்பன் என்கிறது இரண்டாமடியால். அளவுடையைம்புலன்களென்றது—அளவுபட்ட விஷயங் களை க்ரஹிக்கவே ஏற்பட்ட பஞ்சேந்திரியங்களென்றபடி.

சேதநா சேதநங்களோடே கலந்திருக்கச் செய்தேயும் அவற்றின் தோஷங்கள் தன்பக்கலில் தட்டாமல் ஒளிமல்கி யிருக்கும்படியைக் கூறுவது "வளரொளியீசனை" என்பது. அஸாதாரண திவ்ய விக்ரஹ முடைமை சொல்லுகிறது மூர்த்தியை என்று. .... .... .... (க0)

கேடில்விழுப்புகழ்க்கேசவனைக் குருகூர்ச்சடகோபன்சொன்ன *
பாடலோராயிரத்துள் இவையுமொருபத்தும்பயிற்றவல்லார்கட்கு * அவன்
காடும்நகரமும்நன்குடன்காண நலனிடையூர்திபண்ணி *
வீடும்பெறுத்தித்தன்மூவுலகுக்கும்தரும் ஒருநாயகமே. (கக)

கேடு இல் — ஒருகாலும் அழிவில்லாத
விழு புகழ் — சிறந்த புகழையுடையனான
கேசவனை — எம்பெருமான் விஷயமாக
குருகூர் சடகோபன் சொன்ன—;
பாடல் ஓர் ஆயிரத்துள் — ஓராயிரம் பாசுரங்களினுள்ளே
இவையும் ஒரு பத்தும் — இப்பதிகத்தை
பயிற்ற வல்லார்கட்கு — ஓதவல்லவர்களுக்கு
அவன் — அந்த எம்பெருமான்,
காடும் நகரமும் — சிறியார் பெரியாரென்கிற வாசியின்றிக்கே அனைவரும்
நன்குடன் காண — நன்றாகக் காணும்படி
நலன் இடை ஊர்தி பண்ணி — பகவத் பாகவத விஷயத்தில் அடிமைச் செல்வத்தோடே நடக்கும்படி பண்ணி
வீடும் பெறுத்தி — மோக்ஷானந்தத்தையும் அடைவித்து
தன் மூவுலகுக்கும் — தன்னுடையதான மூவுலகங்கட்கும்
ஒரு நாயகம் — ஏகாதிபதியாயிருக்கும் சிறப்பையும்
தரும் — தந்தருள்வான்.

* * * [கேடில்விழுப்புகழ்.] இத்திருவாய்மொழி கற்றார்க்குப் பயனுரைத்துத் தலைக்கட்டுகிறார். நித்யவிசித்ர கல்யாணகுண பூஷிதனான எம்பெருமான் விஷய

மாக ஆழ்வாரருளிச் செய்த ஆயிரத்தில் இப்பத்துப் பாசுரங்களையும் ஓதவல்லவர்கட்கு உபயவிபூதி ஸாம்ராஜ்யமும் குறையற உண்டாம்படி எம்பெருமான் அநுக்ரஹம் செய்த நல்வன் என்றாராயிற்று.

பயிற்றவல்லார்—தாங்கள் ஓதுமவர்கள், பிறரை ஓதுவிக்குமவர்கள் என்ற இருவகைப் பொருளும் கூறுவர். .... .... .... (கக)

'பத்தாந் திருவாய்மொழி உரை முற்றிற்று.

---

திருவாய்மொழி மூன்றும்பத்து முற்றுப் பெற்றது.

---

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ:

# த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்நாவளி

ப்ராது³ர்பா⁴வாநுபா⁴வாத் பரிஜநவிப⁴வாத் பா⁴வுகாலங்க்ரியத்வாத்
ஜைத்ரவ்யாபாரயோகா³த³க⁴டிதக⁴டநாத் [illegible] ।
[illegible]
[illegible] ॥

1. ப்ராதுர்ப்பாவாநுபாவாத். * சன்மம்பலபலசெய்து வெளிப்பட்டு * அடியார்களைக் காத்தற்பொருட்டுப் பலபல அவதாரங்களைச் செய்தருளுஞ் சீர்மையைச் சொன்னபடி.

2. பரிஜநவிபவாத். * குறைவில்தடங்கடல்கோளரவேறி—கறையணி மூக்குடைப்புள்ளைக்கடாவி * திருவனந்தாழ்வானைப் பள்ளியாகவும் பெரிய திருவடியை ஊர்தியாகவும் கொள்ளுகைமுதலான பரிஜந ஸம்ருத்தியைச் சொன்னபடி.

3. பாவுகஅலங்க்ரியத்வாத். * மட்டவிழ் தண்ணந்துழாய் முடியானை * திருத்துழாய்மாலையாலே பரிசுத்தமான அலங்காரமுடைமை சொன்னபடி.

4. ஜைத்ரவ்யாபாரயோகாத். * பரிவின்றி வாணனைக் காத்துமென்று இத்யாதி.* வாணாஸுரனை ஆயிரந்தோளும் பொழிகுருதிபாயப் பங்கப்படுத்தின வெற்றித்தொழில் வல்லமையைச் சொன்னபடி.

5. அகடிதகடநாத். * வைதிகன் பிள்ளைகளை உடலொடுங் கொண்டு கொடுத்தவனை * பிறப்பகத்தே மாண்டொழிந்த பிள்ளைகளை நால்வரையும்

இறைப்பொழுதில் கொணர்ந்து கொடுத்த அகடிதகடந ஸாமர்த்யத்தைச் சொன்னபடி.

6. தேவபாவப்ரஸித்தே:. * தன் தெய்வநிலையுலகில் புகவுய்க்குமம்மான். * தன்னுடைய அப்ராக்ருதமான தெய்வத்தன்மையை நிலவுலகத்தில் கீதோபதேசம் முதலியவற்றால் ப்ரகாசப்படுத்தினமையைச் சொன்னபடி.

7. ஆச்சர்யக்ரீடநத்வாத். * இன்புறு மிவ்விளையாட்டுடையானை * அற்புதமான ஜகத்வ்யாபாரங்களை லீலையாகக் கொண்டிருக்கும் தன்மையைச் சொன்னபடி.

8. ஸரஸிஜநிலயாநந்தநாத். * அல்லிமலர்மகள் போகமயக்குகளாகியும் நிற்குமம்மான். * பெரிய பிராட்டியாரைத் தான் உகப்பிப்பதும் அவளால் தான் உகப்பதுமான ஸாமப்ராவண்யம் சொன்னபடி.

9. சந்தக்ருத்தே:. * வேண்டுருவு கொண்டு * இஷ்டமான திருவுருவங்களைப் பரிக்ரஹிக்கும் தன்மை சொன்னபடி.

10. ஐச்வர்யவ்யக்திமத்த்வாத். * தளர்வின்றியேயென்று மெங்கும்பரந்த இத்யாதி. * எல்லாவற்றிலும் அந்தராத்மாவாய் வியாபித்திருக்கை, ஸகலஜகத் காரணமாயிருக்கை, சேதநாசேதநங்களோடு கூடியிருக்கச் செய்தேயும் அவற்றின் தோஷங்கள் தன்பக்கலில் தட்டப்பெறுதிருக்கை முதலான சிறப்புடைமை சொன்னபடி. ஆக இப்படிப்பட்ட தன்மைகளினால், [கேசவம்] எம்பெருமானை, [அகசமநதநும்] பாவங்களைத் தீர்க்கும் திருமேனியை யுடையவனாக [வ்யாஜஹார] ஆழ்வார் இப்பதிகத்திலே அருளிச் செய்தாரென்றவாறு.

[illegible]
[illegible]
[illegible]
[illegible]

மூன்றும்பத்தில் ஒவ்வொரு திருவாய் மொழியினுடையவும் ப்ரமேயத்தை ஸங்க்ரஹித்துக் கூறுவது இந்த ச்லோகம்,

[1. ஸௌந்தர்யாத்.] * முடிச்சோதியில் அழகர் வடிவழகிலே ஈடுபட்டமை. [2. தநுவிஹித ஜகத்க்ருத்யஸௌபாக்யயோகாத்.] * முந்நீர்ஞாலத்தில் தன்திருமேனியில் நின்றும் ஜகத்ஸ்ருஷ்டி முதலியவற்றைப் பண்ணினமை சொன்னபடி. [3. ஸ்வேச்சா ஸேவ்யாக்ருதித்வாத்.] * ஒழிவில் காலத்தில் தாம் நினைத்தபடியே ஸேவிக்கவுரியனாய்த் திருமலையில் ஸந்நிஹிதனானமை சொன்னபடி. [4. நிகிலதநுதயா] * புகழுநல்லொருவனில் ஸர்வசரீரகத்வம் சொன்னபடி. [5. உக்தாத்மாநர்ஹகாந்த்யா] * மொய்ம்மாம்பூம்பொழிலில்

“எம்மானைச் சொல்லிப்பாடி யெழுந்தும் பறந்தும்” இத்யாதியிற்படியே அடியார்களைப் பிச்சேற்றவல்ல அழகுடைமை சொன்னபடி. [6. ஸர்வார்ச்சாவைபவத்வாத்.] * செய்யதாமரைக் கண்ணனில் “ஒன்றினுல் கிளைப்பானவனவனாகும்” என்றதில் சேர்க்காக அர்ச்சாவதார ஸௌலப்யமநுஸந்தித்தமை சொன்னபடி. [7. குணாஸிகதுஷ்டேஷுத்கர்ஷணாத்] * பயிலுஞ்சுடரொளியில், தன்னுடைய குணங்களில் ஈடுபட்ட பாகவதர்களை ஸர்வோத்க்ருஷ்டராகப் பண்ணுமவனெம்பெருமான் என்றதைச் சொன்னபடி. [8. அக்ஷக்ருஷ்ட்யா.] * முடியானேயில், ஸகல இந்திரியங்களையும் ஆகர்ஷிக்குமவனென்றதைச் சொன்னபடி. [9. ஸ்துத்யத்வாத்.] * சொன்னால் விரோதமதில், எம்பெருமானொருவனே துதிக்க வுரியவனென்றதைச் சொன்னபடி. [10. பாபபங்காத்.] * சன்மம்பலபலவில், குறைமுட்டுப் பரிவிடர் துயர் துன்பமல்லல் துக்கத்தளர்வு கேடுகளில்லாமையைச் சொன்ன முகத்தால் பாபங்களைப் போக்குமவனென்றதைச் சொன்னபடி.—ஆக ஒவ்வொரு பதிகத்திலும் இத்தகைய தன்மைகளை அருளிச்செய்ததனால் மூன்றும்பத்தில் எம்பெருமானுடைய ஸாம்ஸாரிகத்வமும் சொல்லிற்றாயிற்று. அகர்தகுணநிதி திவ்யரூபனென்று ப்ரதிபாதிக்கையிலே மூன்றும்பத்துக்கு முழுநோக்கிறே. .... .... .... (*)

காப்புல்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

## த்ராமிடோபநிஷத் ஸங்கதி.

[illegible]
[illegible]
[illegible]
[illegible]

(கருத்து.) எம்பெருமான் பலகாலும் இவ்வுலகில் திருவவதரித்துத் தன்னுடைய திவ்யமங்கள விக்ரஹத்தையும் திருக்கல்யாண குணகணங்களையும் ஸாக்ஷாத்கரிப்பிக்கும்படியை ஆழ்வார் பேசித்துதித்து, இவ்வகையாலே தாம் க்ருதார்த்தராகப் பெற்றமையால் தமக்கு யாதொரு குறையுமில்லையென்னுமிடத்தை மூன்றும் பத்தின் பத்தாந் திருவாய்மொழியில் கூறிக் களித்தாரென்றதாயிற்று. .... .... .... .... (*)

ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## திருவாய்மொழி நூற்றந்தாதி.

சன்மம் பலசெய்து தானிவ் வுலகளிக்கும்
நன்மையுடை மால்குணத்தை நாடோறும்—இம்மையிலே
ஏத்துமின்பம் பெற்றே னெனுமாறனை யுலகீர் !
நாத்தழும்ப வேத்துமொரு நாள்.

### பதவுரை.

| | |
|---|---|
| தான் பல சன்மம் செய்து | தானாகவே பல திருவவதாரங்களைப் பண்ணி |
| இ உலகு | இந் நிலவுலகத்தை |
| அளிக்கும் | காத்தருளுகையாகிற |
| நன்மை உடை | நன்மையை யுடையவனை |
| மால் | எம்பெருமானுடைய |
| குணத்தை | திருக்கல்யாண குணங்களை |
| இம்மையிலே | இப்பிறப்பிலே |
| நாள் தோறும் | அநுதினமும் |
| ஏத்தும் இன்பம் | புகழ்ந்து பேசும்படியான இன்பத்தை |
| பெற்றேன் எனும் | பெற்றேனென்று அருளிச் செய்த |
| மாறனை | ஆழ்வாரை |
| உலகீர் | உலகர்களே ! |
| ஒரு நாள் | ஒருநாளாகிலும் |
| நா தழும்ப | நாக்குத் தடிக்கும்படி |
| ஏத்தும் | நீங்கள் துதிப்பீர்களாக. |

எம்பெருமான், கருமங்களுக்கு வசப்படாதவனாயினும் கருணைக்கு வசப்பட்டவனாதலால் அது காரணமாக "அஜாயமாநோ பஹுதா விஜாயதே" என்றும், "என்னின்ற யோனியுமாய்ப்பிறந்தாய்" என்றும் சொல்லுகிறபடியே பல பல திருவவதாரங்களைச்செய்து இவ்வுலகத்தைக் காத்தருள்கின்றனென்பது முதலான அவனுடைய திருக்கல்யாணகுண வைபவத்தினை இம்மையிலேயே வாயாரப்புகழ்ந்து பேசும் பாக்கியத்தை யான் பெற்றேனென்று பேரானந்தம் பொலியவருளிச்செய்த நம்ஆழ்வாரை, ஸம்ஸாரிகளே ! நீங்கள் ஒருநாளாகிலும் நன்கு துதிப்பது நன்று என்றருளிச்செய்தாராயிற்று. .... .... (௧௦)

மணவாளமாமுனிகள் திருவடிகளே சரணம்.

## திருவாய்மொழி நூற்றந்தாதி.

சன்மம் பலசெய்து தானிவ் வுலகளிக்கும்
நன்மையுடை மால்குணத்தை நாடோறும்—இம்மையிலே
ஏத்துமின்பம் பெற்றே னெனுமாறனை யுலகீர்!
நாத்தழும்ப வேத்துமொரு நாள்.

### பதவுரை.

| பதம் | உரை |
|---|---|
| தான் பல சன்மம் செய்து | தானாகவே பல திருவவதாரங்களைப் பண்ணி |
| இ உலகு | இக் கிலவுலகத்தை |
| அளிக்கும் | காத்தருளுகையாகிற |
| நன்மை உடை | நன்மையை யுடையவனான |
| மால் | எம்பெருமானுடைய |
| குணத்தை | திருக்கல்யாண குணங்களை |
| இம்மையிலே | இப்பிறப்பிலே |
| நாள் தோறும் | அநுதினமும் |
| ஏத்தும் இன்பம் | புகழ்ந்து பேசும்படியான இன்பத்தை |
| பெற்றேன் எனும் | பெற்றேனென்று அருளிச் செய்த |
| மாறனை | ஆழ்வாரை |
| உலகீர் | உலகர்களே! |
| ஒரு நாள் | ஒருநாளாகிலும் |
| நா தழும்ப | நாக்குத் தடிக்கும்படி |
| ஏத்தும் | நீங்கள் துதிப்பீர்களாக. |

எம்பெருமான், கருமங்களுக்கு வசப்படாதவனாயினும் கருணைக்கு வசப்பட்டவனாதலால் அது காரணமாக "அஜாயமானோ பஹுதா விஜாயதே" என்றும், "எண்ணின்ற யோனியுமாய்ப்பிறந்தாய்" என்றும் சொல்லுகிறபடியே பலபல திருவவதாரங்களைச்செய்து இவ்வுலகத்தைக் காத்தருள்கின்றானென்பது முதலான அவனுடைய திருக்கல்யாணகுண வைபவத்தினை இம்மையிலேயே வாயாரப்புகழ்ந்து பேசும் பாக்கியத்தை யான் பெற்றேனென்று பேரானந்தம் பொலியவருளிச்செய்த நம்ஆழ்வாரை, ஸம்ஸாரிகளே! நீங்கள் ஒருநாளாகிலும் நன்கு துதிப்பது நன்று என்றருளிச்செய்தாராயிற்று. .... .... (௧௦)

மணவாளமாமுனிகள் திருவடிகளே சரணம்.

